# பாயிரம்.

மானிடவுருவந்தாங்கிமன்னவன்றவத்திற்கோனாய்க்
கானிடவரக்கர்வீயக்காகுத்தனானென்று
தானிடநாட்டிற்செல்வந்தழைப்பிப்பான்றேசபண்டக்
கூனிமிர்ப்பானின்வந்தான்கொற்றவொண்சிலையிராமன்.

அன்னவர்வேண்டவந்தவாங்கிலநூன்மொழிபெயர்த்து
இன்னியதமிழாற்செய்தஇந்தியகைத்தொழின்முயற்சி
என்னுமிந்நூலையன்னோர்க்கினியஅர்ப்பணஞ்செய்துற்றேன்
தென்னியற்றிருநெய்த்தானச்சீனிவாசடியன்றானே.

# அறிவிப்பு.

இப்பொழுது பாலக்காட்டில் விக்டோரியா காலேஜின் தலைமை உபாத்தியாயராயிருப்பவரும் முன்னே மதிராஸ் டைம்ஸ் பத்திரிகையின் பத்திராதிபராய் இருந்தவருமான மிஸ்தர் கிலின் பார்லோ M. A. என்னும் கருணை முகிலானவர் இந்தியாவின் க்ஷேமத்தை உத்தேசித்துப் பொழிந்திருக்கும் அமிர்த வருஷமாகிய "Industrial India" (இண்டஸ்டிரியல் இந்தியா) என்னும் கிரந்தத்தை "இந்தியக் கைத்தொழில் முயற்சி" என்று நாமம் சூட்டி இனிய தமிழ் நடையில் பொருத்தமாய் மொழிபெயர்த்துப் பாலர் ஸ்திரீகள் முதல் யாரும் வாசித்து அறிந்துகொள்ளுமாறு தயார் செய்து அச்சிடப்பட்டிருக்கிறது. இந்தப் புஸ்தகத்தை வாசிக்கும் ஒவ்வொரு மாணுக்கரும், ஒவ்வொரு வியாபாரியும், ஒவ்வொரு கடைக்காரரும், ஒவ்வொரு தொழிலாளியும், ஒவ்வொரு மிராசுதாரும், பின்னும் மற்றெந்தத் தொழிலிலாயினும் அமர்ந்திருக்கும் ஒவ்வொருவரும் வாசித்துத் தெரிந்துகொள்ள வேண்டிய மேன்மையான விஷயங்கள் இதிலடங்கி யிருப்பதால் ஆங்கிலேய புஸ்தகத்தின் விலையாகிய ரூ. 1—8—0 ஐ இதற்கும் ஏற்படுத்தாமல் யாவரும் இந்தப் புஸ்தகத்தை வாங்கி வாசித்துப் பயனடைய வேண்டுமென்கிற எண்ணத்துடன் நல்ல கடிதாசியில் அச்சிட்டு நன்ருய்ப் பயிண்டு செய்வித்து ரூ. 1 ஆக இதன் விலையை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. வெளியூரார்களுக்குத் தபால் சார்ஜு பிரத்தியேகம்,

இது ஆங்கிலேய புஸ்தகத்தின் சரியான மொழிபெயர்ப்பாய் இருக்கிறபடியால் சர்க்கார் பரீக்ஷைகளாகிய Translation Lower and Higher இவைகளுக்காக வாசிக்கிறவர்களுக்கு மிகவும் உபயோகமுள்ளதாகவுமிருக்கும்.

இந்தப் புஸ்தகம் அடியிற்கண்ட இடங்களில் விலைக்குக் கிடைக்கும்.

தஞ்சாவூர் தெற்கு வீதியிலிருக்கும், மகா-ா-ா-ஸ்ரீ
T. கோதண்டராம ஐயங்கார் அவர்கள் B. A. M. L.
ஹைக்கோர்ட்டு வைக்கீல், தஞ்சாவூர்.

தஞ்சாவூர் தெற்கு வீதியிலிருக்கும் சுதேச பண்டசாலை.

தஞ்சாவூர் எல்லையம்மன் கோவில் தெருவிலிருக்கும் புஸ்தகவியாபாரம் மகா-ா-ஸ்ரீ D. K. சுப்பயாநாயிடு அவர்கள்.

கும்பகோணம் கடலங்குடித்தெருவிலிருக்கும் ஜவளிவியாபாரம் மகா-ா-ா-ஸ்ரீ T. A. M. பாலசுந்திரம் செட்டியார் அவர்கள்.

G. S. மணியாஅண்டு கம்பனியார், மேலவீதி, தஞ்சாவூர்.

# INTRODUCTION

THE present volume makes no higher pretensions than to be a mere translation of that admirable little book—Glyn Barlow's, "Industrial India". Still the translator's task has not been an easy one. The original written as it is, by a master in the art of pleasant style and flowing diction will easily baffle the attempts of any ordinary translator; and the author of the present translation must be congratulated that he has succeeded so far. Literal even to a fault, the translator has kept his purpose steadily in view—even sacrificing a certain ease and smoothness in style, to bring out a strict and exact translation.

About the usefulness of the book one need not write much. The book in its English garb needs no introduction at any rate to the English knowing public of these parts. It is so very widely known and so deservedly popular that any words in praise of it will be wholly superfluous. Though he does not quote any facts and figures or grapple with the situation in quite a 'statistical' manner, Mr

Barlow has sifted the problem of Indian Industrial revival with a thoroughness that leaves nothing to be desired. He has dealt with the question in an open and broad minded spirit, and shown himself in every way worthy of our regard for him as an earnest and sincere well-wisher of India. For, while pointing out to us our draw-backs, he has no less forcibly shown us our good parts; while criticising us for our weaknesses he has also shown us our possibilities. His criticism has not been merely destructive, but he has given us a constructive scheme—though in out-line—as to the ways in which we might develop India's resources and that too in a way that we might combine patriotism with trade. Such a book then will be eminently useful, if translated, to our non- English-knowing brethren; for, without taxing their intellect or memory with any list of facts and figures, they can understand at a perusal of the book, the present degraded condition of their motherland—and what is more useful—of its future possibilities if properly worked out. A study of the book will certainly not fail to set the reader athinking and inspire him with the hope that if he makes an effort and works, he will contri-

bute in his own tiny way, towards the redemption of his dear Motherland. It is therefore earnestly wished that the book will be largely used by the class of people for whom it is intended and make them resolve that after all " the land of the White Moghul" shall be " no fairy dream".

In conclusion, the translator and the undersigned offer our sincerest thanks to Messrs. G. A. Natesan & Co , who have the copyright of the English treatise for the kind permission that they have most readily accorded for the translation of the book into Tamil.

Our warmest thanks are also due to Messrs. G. S. Maniya & Co., for the excellent printing and get up of the book as well as for the promptness with which they carried the work through the press.

TANJORE,
30 - 6 - 07.

T. KOTHANDARAMA IYENGAR,
*High Court Vakil,*
TANJORE.



# SELECT OPINIONS.

இவ்வூர் முன்சீப்கோர்ட் ஹெட்கிளர்க் ம-ள-ள-ஸ்ரீ T. R. சீனிவாச ஐயங்காரவர்களால் மொழிபெயர்க்கப்பட்ட "இந்தியக் கைத்தொழில் முயற்சி" என்னும் இச்சிறிய புத்தகத்தைப் பார்வையிட்டேன். இதிலடங்கிய விஷயங்கள் யாவும் இலகுவான இனிய செந்தமிழ் நடையில் எழுதப்பட்டிருப்பதைப்பார்க்கும் தமிழ் அபிமானிகள் ஒவ்வொருவரும் சந்தோஷிப்பார்களென நம்புகிறேன். அன்னிய பாஷையில் எழுதப்பட்டிருக்கும் நூல்களைத் தமிழ்ப்படுத்துவோர் கருத்துகளைத் தெளிவாய் விளக்குவிக்க ஏற்ற தமிழ்ப் பதங்களிருந்தும் அறிந்துகொள்ளாமல் பல அன்னிய பாஷைகளின் சொற்களைக் கலந்தும் கருத்தை வெளிப்படுத்த முடியாமல் தத்தளிக்கும் இக்காலத்தில், கூடியவரையில் ஆங்கில நூலின் கருத்து தெளிவாய் விளங்கும் வண்ணம் மொழிபெயர்த்திருப்பது ஐயங்காரவர்களின் தமிழ்ப் பயிற்சியின் வல்லமையை நன்றாக வெளிப்படுத்துகின்றது. சிறியவர் முதல் பெரியவர் வரையும் இந்நூலின் பயனை எளிதாகத் தெரிந்துகொள்ளும்படி செய்த இத்தமிழ்மொழி பெயர்ப்பாசிரியருக்குத் தமிழ்நாட்டாரனைவரும் நன்றிபாராட்டக் கடமைப்பட்டிருக்கின்றோம்.

15—7—07.
தஞ்சை.

முத்துசாமி. ஆபிரகாம் பண்டிதர்,
கருணாநிதி வைத்தியசாலை.
தஞ்சாவூர்.

தஞ்சை, முதலாவது கிரேட்பிளீடர்
**S.** சோமசுந்தரம் பிள்ளை B. A., B. L.
இயற்றிய
அறுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்.

---

*சீர்திருந்தி நம்மிந்து தேயத்தார் கைத்தொழிலிற்*
*சிறப்புற்றோங்க*
*பேரறிவோன் கிளின்பார்லோ துரையிரங்கி ஆங்கிலத்திற*
*பேசுநூலை*
*பார்வளர முகிலினங்கள் கடனீரை மழைநீராய்ப்*
*பயக்குமாபோல்*
*தேரறிவோன் புகழ்ச்சீனி வாசனற்செந் தமிழ்நடையிற்*
*செய்தேதந்தான்.*

---

I have read through portions of the translation of Glyn Barlow's 'Industrial India' by Mr. T. R. Srinivasa Iyengar and found them to be excellant. Tamil is everything that can be desired. The translator in spite of the numerous difficulties he has had to encounter has done his work in an eminently satisfactory manner.

TANJORE, 20—7—07. K. S. SRINIVASEN, *Pleader.*

---

I have read Mr. T. R. Srinivasa Aiyengar's translation of Glyn Barlow's "Industrial India" with pleasure and profit. The translator has an admirable command of the Tamil language, and his style is direct, chaste and true, so that the ideas of the author have not suffered in translation. T. RAGHAVIAH,

TANJORE. 21—7—07. *Personal Assistant to the Collector of* TANJORE.

On a perusal of Mr. T. R. Srinivasa Aiyengar's translation of "Industrial India" by Mr. Glyn Barlow I feel I must express my opinion that the translation is faithful and has been very carefully done.

It is not only the English educated Indians to whom the appeal is addressed by Mr. Barlow but all who take a lively and abiding interest in the welfare and progress of this ancient land among whom countless are the gentlemen ignorant of English and to whom this translation of Mr. Srinivasa Aiyangar would be invaluable as it is calculated to inspire them with a spirit of noble enterprise pregnant with immense possibilities in the future for the decaying industries of India.

I think it is the duty of every one who is a true patriot to read, reflect and act upon the thoughts conveyed in the publication.

Wishing unlooked for success to the publisher.

I remain,

T. JANAKIRAMAYYA,<br>
*Assitant Inspector of Schools,*<br>
TANJORE.

TANJORE.<br>
22—7—07.

---

# விவரமான பொருளடக்கம்.



# இந்தியக் கைத்தொழில் முயற்சி.

## I

## வியாபாரத்தில் சுதேசாபிமானம்.



சுவேத மொகலாயரின் தேசமானது ஓர் விநோத மானசொப்பனம் அல்ல. அது இருபதாம் நூற்றாண் டிலுள்ள உண்மையான பொருளேயாம். ஆனால், சொல்வளமுள்ளவர்கூட அதைப்பற்றி அன்னியன் ஒருவனுக்கு விவரமாய்ச் சொல்லமுடியாதபடி, அது அவ்வளவு சிறப்பாயும் அளவற்றதாயும் இருக்கிறது. சாமானிய இந்தியனும், தான் வசிக்கிற தேசமானது அளவற்றதாய் இருப்பதை யறியமாட்டாமல், தானி ருக்கிற மூலையே இந்தியா வென்றெண்ணுகிறான். தெற்கு வெளியிலுள்ள குடியானவனுக்கோ இந்தியா வானது, எப்பொழுதுங் கோடைகாலமாகவே யிருக் குந் தேசமாயும், பெரும்பாலும் ஆடைகள் கேவலம் மரியாதையின்பொருட்டோ, அல்லது வீணான ஆடம் பரத்தின் பொருட்டோ வேண்டியதாயும், விறகு உரு சியான ஆகாரத்தைச் சமைப்பதற்குமட்டும் வேண்டி யதாயுமுள்ள தேசமாயும் இருக்கிறது. ஹிமோத்பரு வதத்தின் சாரல்களில் வசிக்கும் பஹாரிக்கோ வென் றால், இந்தியாவானது சீதளமான மாரிகாலம் நீடித்தி

ருக்கும் தேசமாயும் தான் பிரதிதினம் சாப்பிடும் ரொட்டிக்கு கோதுமை மா எப்படி இன்றியமையாததோ, அதுபோல, குளிரடக்கமான கம்பளமுங் குளிர்காயவிறகும் அவ்வளவு அவசியமாயுள்ள தேசமாயும் இருக்கிறது. அஸாம் தேசத்தைச் சேர்ந்த காசியாவிற் பிறந்த கூலிவேலைக்காரனுக்கோ வென்றால் இந்தியாவானது ஏராளமாய் மழைபெய்யும் தேசமாயுந், தன்னுடைய குடும்பக் குடிசையின் மேன்கூரையானது, பிரவாகமாகப் பெய்யும் மழைத்தாரைகளைத் தாங்கும்படி ஜாக்கிரதையாயும் தடிப்பாயும் மேயப்படவேண்டிய தேசமாயும் இருக்கிறது. மேற்றிசை மைதானங்களில் உள்ள ரஜபுத்திரனுக்கோ வென்றால், அது, மழையென்பதே தெரியாத தேசமாயும்,குடும்பக் குடிசையானது, கண்ணவிக்கும்படியான மணல்மாரியையும், நெருப்புக்காற்றையும் தடுத்து இரட்சிக்கவேண்டிய தேசமாயும் இருக்கிறது. அது ஒருவனுக்கு தானியம் நிறைந்த தேசமாயும், மற்றொருவனுக்கு அரிசி நிறைந்த தேசமாயும், ஒருவனுக்கு உப்பு நிறைந்த தேசமாயும், மற்றொருவனுக்கு நிலக்கரி நிறைந்த தேசமாயும், ஒருவனுக்கு பருத்தி நிறைந்த தேசமாயும், மற்றொருவனுக்கோ கம்பள ஆடுகள் நிறைந்த தேசமாயும் இருக்கிறது.

இந்தியாவை அரசுரிமைக்கடுத்த வொரு ராஜ்ஜியமாகப்பார்த்தாலும் சரி, இந்தியாவை இயற்கையால் அமைக்கப்பட்ட தேசமாகப் பார்த்தாலும் சரி, அது

நானுவிதமாயிருக்கும் விஷயத்தில் சமமாகவேயிருக்கிறது. இந்தியாவில், பலஜாதிகளாக சுமார் 30கோடி ஜனங்கள் இருக்கிறார்கள். இந்தக்கோடிக்கணக்கான ஜனங்களிற் சிலர், மகா சுவேத மொகலாயப் பிரபுவால் நேரே ஆளப்பட்டவர்களாயிருக்க, மற்ற ஜனங்கள் மகத்தான மொகலாய நாயகனுடைய அடிமைகளாக அரசுபுரியும், அனேக பந்தியான மகுட மன்னர்களால் ஆளப்படுகிறார்கள். மகாராஜாக்களும் கேக்கவார்களும்—நைஜாம்களும் நவாப்களும்—இராஜாக்களும் குமார்களுமாய்—இருக்கும் இந்திய பிரபுக்களை யாரால்எண்ணமுடியும்!

ஆனால் இவற்றிலெல்லாம் பெருமை பாராட்டத்தக்கதாய் ஏதேனும் இருக்கிறதா? அரசர்களும் ஜனங்களும் தங்கள் தேசமானது ஈடேறும்படி,வேலை செய்யாத வரையில், தேசமானது அவலற்றதாயிருப்பதைப் பற்றியாவது, அதன் நூற்றுக் கணக்கான அனேகலட்சம் ஜனங்களைப் பற்றியாவது அதன் மகுட மன்னர்களின் சிறப்பைப் பற்றியாவது, என் பெருமை பாராட்டவேண்டும்! ஈடேற்றமானது உள்ளேயிருந்து வருகிறது; இந்தியாவும் தனக்குள்ளேயே தனக்கு உண்டாகவேண்டிய நன்மைகளைப்பற்றி எதிர்பார்க்கவேண்டும். இந்தியா வானது, ஏராளமான பொருள் வருவாய்களுள்ள தேசமாக விருக்கிறது. அடையத் தகுதியான எந்த வஸ்துவும் இந்தியாவில் உண்டாக்கக்கூடாததாயில்லை. ஒவ்வொரு சிதோஷ்ண

ஸ்திதியும், ஒவ்வொரு நிலவளமும் இந்தியாவின் விஸ்தாரமான பிரதேசத்தில் அடங்கியதாய் இருக்கிறது. இந்தியாவானது காட்டுப்பாங்கான சொற்ப விளைபொருள்களை விற்க ஒரு சந்தையைத் தேடவேண்டிய அவசியமுள்ளதும், பினிஷியா தேசத்திலிருந்து சாமான்களைக் கொண்டுவரும் பினிஷிய வியாபாரியை வாழ்கூறி அழைக்க வேண்டியதுமான, ஒரு அற்ப தேசமல்ல. தனக்கு இயற்கையால் கொடுக்கப்பட்டிருக்கிற வருவாய்களின் செழிப்பினாலும், தன்னுடைய கூலியாட்கள் வேலைசெய்ய உடன்படும் கூலிக்குறைவினாலும், இந்தியாவானது-கொடிய வரிகளெல்லாம் இருந்தும்!-அன்னியருடைய போட்டியை எதிர்த்துத் தனக்கு வேண்டிய ஆவசியகமான வஸ்துக்களையும், காமியவஸ்துக்களையும் தன்னுடைய எல்லைக்குள்ளேயே யடையக் கூடும். இது ஒரு வீண் சொப்பனம் அல்ல. ஆனால் அரசர்களும், ஜனங்களும் எழுந்திருந்து வேலைசெய்யவேண்டும். இல்லாவிட்டால் இந்திய ராஜ்ஜியமானது-வர்த்தக விஷயமாய் யோஜித்தால்—நிர்மூலமாக்கப்படும். கோதர்களாலும், ஹூணர்களாலும், தாக்கப்பட்டபடியால் ரோமன் இராச்சியமானது, அழிந்துபோயிற்று. இப்பொழுது அதேமாதிரியாக அந்தக்கோதர்களும்,ஹூணர்களும்,அன்னியசாமான்களின் ரூபமாய், இந்தியாவுக்குள் மேலு மேலும் வந்துகொண்டிருக்கிறார்கள். அன்னியவருகையைத் தடுக்கவும், தன்னுடைய சொந்த ஆதிபத்தியத்தை ஸ்தாபிக்

கவுஞ்சங்கற்பித்துக்கொண்டு—இந்தியாவானது எழு ந்திருந்து வேலை செய்யவேண்டும்.

ஆகையால், இந்தியாவில் தொழில்முயற்சியும், வியாபாரமும் விருத்தியடையும்படி தானொத்தாசைசெய்வது இந்தியனுக்கு சுதேசாபிமானமுள்ள விஷயமாகவிருக்கிறது. இவ்வாறு வியாபாரத்தோடு சுதேசாபிமானத்தைச் சேர்க்கலாமென்றும்—ஒரே காலத்தில் தன்னுடைய சுதேசாபிமானத்தைக் காட்டிக்கொண்டே தான் பணத்தையுஞ் சம்பாதித்துக் கொண்டிருக்கலாமென்றும்—தன் மனதில் வைத்துக் கொள்வதே, ஓர் இந்திய வியாபாரி அல்லது கைத்தொழிலாளிக்கு ஓர் தூண்டுதலாக விருக்கும். இந்தக் கருத்தானது இந்தியாவில் ஒருவாறு புதிதாய் இருக்கலாம். ஏனென்றால், பணஞ் சம்பாதித்தல் இந்தியாவில், ஒரு விதத்திலும், எப்பொழுதும், சுதேசாபிமானமுள்ள காரியமாய் இருக்கவில்லை. இதற்கு உதாரணமாக, ஒரு வைக்கீல் மனஸ்தாபமில்லாத இடத்தில், ஒருவிவகாரத்தை வுற்பத்தி செய்து, ஒரு யோக்கியமான சுதேசியைப் பணச்செலவுள்ள வியாச்சியங்களில் இழுத்துவிட்டு, சந்தோஷத்தாற் கொக்கரித்தால், அவர் ஒரு விதத்திலும், சுதேசாபிமானத்தோடு பணஞ் சம்பாதிப்பவர் ஆகமாட்டார். தானிய வியாபாரி ஒருவன் சுபாவமாயுண்டான வொருபஞ்சத்தையாவது—அல்லது தன்னாலும் தன்னைப் போன்ற வியாபாரிகளாலும் உற்பத்திசெய்யப்பட்டதாயிருக்கும் ஒரு பஞ்ச

த்தையாவது-கண்டு சந்தோஷித்து 100-க்கு 100-வீத
ம்லாபம் வைத்துப்பசியான கூலிவேலைக்காரர்களுக்கு,
ஒன்றுக்கு முக்காலாகத்தன்னுடைய தானியத்தை அ
ளந்து கொடுத்தால், அவன் ஒருவிதத்திலும், சுதேசா
பிமானத்தோடு பணஞ் சம்பாதிப்பவ னாகமாட்டான்.
ஒரு சாவுகார் பஞ்சத்தில் அடிபட்ட குடியானவனி
டம், பந்தகப் பத்திரத்தை கையெழுத்து செய்யும்படி
கொடுக்கும்பொழுது, தான் அதிற்கண்டிருக்கும் உயர்
ந்த வட்டியினாலும், பத்திரத்தில் எழுதியிருக்கும் க
பட வாசகங்களினாலும், அந்தக் குடியானவனுடைய
நெல்வயலானது, சீக்கிரம் தனக்குச் சித்திக்குமென்று
நினைத்துக் கொக்கரித்தால், அந்த சாவுகார் சுதேசா
பிமானத்தோடு பணஞ் சம்பாதிப்பவ னாகமாட்
டான். இவ்வாறு பணஞ்சம்பாதித்தலானது, ஒரு
விதத்திலும் சட்ட விரோதமில்லாமல் இருக்கலாம்.
ஆனால் அது முற்றிலும் வெறுக்கத் தக்கதாயிருப்ப
துமன்றி, யெவ்விதத்திலும் சுதேசாபிமானமற்றதாயு
மிருக்கிறது. இவர்களைப்போன்ற மனிதர்களை, தன்
னுடைய சொந்த லாபத்தைக் கருதும்பொழுதே, தன்
னுடைய தேசத்தின் நன்மையையுங் கருதி, ஒரு உப
யோகமான தொழிலை,-அதாவது தத்தேசக்குறைவைப்
பூர்த்திசெய்வதும், வேலையில்லாதவர்களுக்கு வேலை
யைக் கொடுப்பதும், ஜில்லாவிலுள்ள கூலியை உயர்த்
துவதும், தேசத்தின் மதிப்பை அதிகப்படுத்துவது
மான ஒருதொழிலை-ஏற்பாடுசெய்கிறவன் அல்லது ஏற்
பாடுசெய்ய ஒத்தாசை செய்கிறவனோடு ஒப்பிட்டுப்

பாருங்கள். அப்படிப்பட்ட மனிதன் ஒரு இராசாவை விட அதிகபணக்காரன் ஆகக்கூடும். மேலும் அவன் தன்னுடைய தொழிலிலுள்ள சுதேசாபிமானத்தினால் பெருமையடைந்து, தன்னுடைய நன்மைக்காக உழைப்பது போலவே, தன்னுடைய தேசத்தின் நன்மைக்காகவும், தான் உழைப்பதாக நினைப்பதினால், ஒரு கண்யமான சந்தோஷத்தையும் அடையலாம். வியாச்சியங்களை யுண்டுபண்ணுவதும், பஞ்சங்களை யுண்டு பண்ணுவதும், கடன் செலுத்த வகையில்லாதவர்களை யுண்டுபண்ணுவதும், ஒரு விஷயம்; உபயோகமுள்ள சாமான்களை யுண்டுபண்ணுவதோ, முற்றிலும் வேறான மற்றொரு விஷயம். மேலே சொன்ன வைக்கீலும், தானிய வியாபாரியும், சாவுகாருங்கூட, தந்தம் தொழில்களில் மிகுந்த சுதேசாபிமானத்தைக் காட்டலாம். வைக்கீலுடைய தொழிலோ அத்தியந்தம் மேன்மையுஞ் சுதேசாபிமானமுமுள்ள ரீதியைச் சேர்ந்ததா யிருக்கிறது. வாதிக்கு வக்கீல் செய்யவேண்டிய கடமை, தீங்கை நீக்கி நியாயம் புரிவதும், பிரதிவாதிக்கு அவர் செய்யவேண்டிய கடமை, துன்பமடைந்தவனை நியாயஞ்சொல்லித் தப்புவிப்பது மாகும். ஆனால், தம்முடைய தேசத்திற்கு அவர்செய்யவேண்டிய கடமையோ வென்றால், தம்முடைய கட்சிக்காரனுக்குத் தாம் செய்யவேண்டிய கடமையைவிட, அதிகமாகவே யிருக்கிறது. அவர் ஜனங்களால் அங்கீகரிக்கப்பட்ட தலைவரா யிருப்பதால், நியாய சபைகளுக்கு வெளியே, கைத்தொழில் முயற்சிகளைப் பற்றிய ஏற்

பாடுகளை ஆதரித்து விருத்தி செய்வதில் தமது தேச த்திற்குந் தமக்கும் உதவி யுள்ளவரா யிருக்கக்கூடும். தானிய வியாபாரியின் தொழிலானது, இந்திய கிரகஸ்த முறைக்கு மிகவும் அவசியமான அம்சமா யிருக்கிறது. மேற்சொல்லிய தானிய வியாபாரி, சுயநயமான எண்ணங்களை விட்டுச் சூதான சங்கங்களிற் சேராமல், தனியே யிருந்து, தன் தேசத்தின் வியாபாரத்தையும் வருவாய்களையும் விருத்தி செய்வதில் உதவி செய்வதால், அவன் உண்மையான சுதேசாபிமானி யாகலாம். சாவுகா ரோவென்றால்தேவையுள்ளவர்களுக்குதேவையுள்ள நேரத்தில்உதவி செய்கிறவர் அவர்தான்; முயற்சிசெய்யத் துணிந்தவர்கள் செய்ய ஆரம்பித்த காரியங்களை விருத்தியாகச் செய்கிறவர்களும், இந்தசாவுகார்களே. மேற்சொல்லிய சாவுகார் யோக்கியமாயுப், நியாயமான பிரதிப்பிரயோஜனத்தைக் கருதியும் வேலைசெய்து அறியாமையாலுள்ள வீண்செலவை ஆதரியாமல் மறுப்பாரானால், அவர் செய்யும் வேலையானது அவருடைய தேசத்தின்நன்மைக்கே யாகலாம். இவற்றையெல்லாம் விடதமக்குண்டான இலாபத்தில் மிகுதியான சில பாகத்தை உபயோகமுள்ளதொழில் முயற்சிகளில் வட்டிக்கு விட்டால், அந்தசாவுகாரும் ஒரு சுதேசாபிமானியாகலாம்.

ஆனால் தொழில் முயற்சிக்குரிய தந்திரங்களில், பொய்யான சுதேசாபிமான மொன்றும் இருக்கக்கூடாது. சுதேசாபிமானம், தொழிலாளியின் இருதய

த்தி லிருக்க வேண்டுமே யொழிய, அவனுடைய விள ம்பரங்களி லிருக்கக்கூடாது. அவனுடைய தொழிலா னது அதினுடைய யோக்கியதாபட்சத்தினலேயே நி லைநிற்க வேண்டியதே யொழிய நல்லதல்லாத சாமான் களை, இந்தியாவில் அவைகள் செய்யப்பட்டிருக்கிற காரணத்தினல் மட்டும் தேசத்தார் வாங்கவேண்டுமெ ன்று கெஞ்சும் முறைபாடுகளைச் செய்யக் கூடாது. இப்படிப்பட்ட கெஞ்சும் முறைபாடுகள் இப்பொ ழுது நம்முடைய தேசத்தில் இல்லாமலிருக்கவில்லை. ஒருவனுடைய சரக்குகள் இந்தியாவில் செய்யப்பட் டிருக்கிற விஷயத்தைப் பிரசித்தப் படுத்துவதில் யா தொரு குற்றமுமில்லை. மேலும் சுதேசவியாபார யுத்தத்தில், விளம்பரக்கொடியைநாட்டுவது உசிதமே யாகும். ஆனல் சுதேசாபிமானமுள்ள தொழில்முய ற்சியுடையோன், கபடமாய்க் காசுபறிக்கச் செய்யும் தனுக்குகளைச் சாவதானமாய் நீக்கி—தன்னுடைய நன்மையோடு இந்தியாவின் நன்மைக்காக—தன்னு டையதொழிலை ஊக்கமாயும் ஆடம்பரமில்லாமலும் பரிபாலிக்கவேண்டும்.

தொழில் முயற்சியில் சுதேசாபிமானமுள்ளவன், தான் உண்டாக்குகிற சரக்குகள், உயர்ந்த தரமாக விருக்கும்படி, ஜாக்கிரதை யெடுத்துக்கொள்ள வேண் டும். ஏனென்றல், "இந்தியாவிற் செய்யப்பட்டது" என்று சீட்டு ஒட்டப்பட்ட தன்னுடைய சரக்குகள் வாங்குகிறவனுக்கு அதிர்ப்தியை உண்டாக்கினல், அவ

ன் இந்தியாவின் அபிவிருத்திக்கு விரோதமாய் வேலை செய்பவன் ஆவான். உதாரணமாக, இந்தியாவிற் செய்யப்படும் நெருப்புக்குச்சிகள் பற்றுகிறதில்லை யென்றும், இந்தியாவிற் செய்யப்படும் அரக்குகள் உருகுகிறதில்லை யென்றும், இந்தியாவிற் செய்யப்படும் கத்திகள் இறகு சீவுகிறதில்லை யென்றும், இந்தியாவிற் செய்யப்படும் விளக்குசிமினிகள் விசேஷமாய்ச் சீக்கிரம் உடையக்கூடியவைகளா யிருக்கின்றன வென்றும், அனுபவசித்தமாய், இந்திய மகாஜனங்கள் பொதுவான அபிப்பிராயங் கொள்ளும் பட்சத்தில் இந்திய கைத்தொழிலாளிகள் நன்மையடையவேண்டியதற்காகவே, நல்லதல்லாத சாமான்களை விடாமல் உபயோகிக்கும்படி அவ்வளவு பொறுமையாய், மகாஜனங்கள் சுதேசாபிமானத்தை வகிப்பார்களென்று நினைக்கக்கூடாது. மிகவும் உயர்ந்த தரமான சரக்குகளை இந்தியாவிற் செய்யக் கூடுமென்பதற்கு ஏராளமாய் ருசு விருக்கிறபடியால், இப்படிப்பட்ட சரக்குகளிலேயே, இந்தியாவின் நம்பிக்கைகள் நிலைபெறவேண்டும். இல்லறத்துக்குரிய முறையில் உயர்ந்த தரமான சாமான்களை அன்னிய போட்டியை எதிர்க்கும்படியான விலையிற் செய்து,சீக்கிரமாகவோ, அல்லது,தாமதித்தோ, நிச்சயமாய்த், தனக்குக் கிடைக்கும்படியான பிரயோஜனத்திற்காக பொறுமையாகக் காத்திருக்கும் கைத்தொழிலாளியே, இந்தியாவின் காரிய சித்தியையும் தன்னுடைய காரியசித்தியையும் அமைப்பவனாகிறான். சீக்கிரத்தில் லாபம் சம்பாதிக்க வேண்டுமென்ற ஆசை

யினால், செப்பாகமில்லாமலும் எறிந்துவிட்ட சாமான் களைக்கொண்டும் செய்யப்பட்ட சரக்குகளை, தேசத்தில் விற்கிறவன், இந்தியாவின் அபிவிருத்திக்கு ஒரு பிரதிபந்தகனா யிருப்பதுமல்லாமல் அவன் அதிசீக்கிரத்திற் காரியஹானியை அடைவதும் நிச்சயம். தன்னுடையவும் இந்தியாவினுடையவும் காரியசித்தியை அடையவிரும்பும் சுதேசாபிமானமுள்ள தொழில்முயற்சியுடையோன் சேகரிக்கவேண்டிய தென்னவென்றால், இந்தியாவிற் செய்யப்பட்ட உயர்ந்த தரமான சரக்குகளேயாம்.

ஆனால் சுதேசாபிமானமெல்லாம் கைத்தொழிலாளியிடத்தில் மட்டும் இருக்கவேண்டியதல்ல. ஏனென்றால் சரக்கு வாங்குவோரிடத்திலும் சுதேசாபிமானமிருக்க இடமிருக்கிறது. இந்தியாவின் அதிர்ஷ்டஹீனத்தினால் சாமான்களின் குணத்தைப் பற்றிக் கொஞ்சமேனும் கவனியாமலே தன்னுடைய சுதேசத்திலுண்டான சாமான்களில்விசுவாசகாதகமான வெறுப்பும் அன்னியதேசத்திலுண்டான சாமான்களில் விசுவாசகாதகமான விருப்பும் உள்ளவர்களாய்ச் சரக்கு வாங்குவோரில் ஒரு வகுப்பார் இந்தியாவி லிருக்கிறார்கள். அப்படிப்பட்ட ஒருவன் தன்னுடையபிரீதியை யடைய சுதேசத்திற்குண்டாயிருக்கிற பாத்தியத்தைக் கீழ்மைத்தனத்தால் மதியாமல், இந்தியசாமான்கள் விற்குங் கடைத்தெருவைஅலட்சியஞ் செய்வதுபோல நடித்து, ஐரோப்பாவிற் செய்யப்பட்ட சாமான்களை

வைத்துக்கொள்வதால் மேலான நாகரீகமும் மேலான ஞானமுமிருப்பதாகத் தனக்கு ஒருகௌரவ முண்டாகுமென்று நினைத்துக்கொண்டு, அப்படிப்பட்ட ஐரோப்பிய சாமான்களிடத்தில் கோணலாய் ஒரு பெருமையைப்பாராட்டுகிறான். வாங்குகிறவனுடைய சுதேசாபிமானமானது அன்னியதேசத்திற்செய்துபோட்டியாய்க்கொண்டுவரப் பட்டிருக்கிற சாமானைவிட குணங்குறைந்த அல்லது விலையுயர்ந்த இந்திய சாமானை அங்கீகரிக்கும்படி அவனைத் தூண்டவேண்டுமென்பது அவசியமில்லை. அப்படி வரையறையில்லாமல் அங்கீகரிப்பதினால், இந்திய வியாபாரமானது, சீக்கிரம் நஷ்டமாய் முடிய ஹேதுவாயிருக்கும். ஆனால், அன்னிய தேசத்திற் செய்து போட்டியாய்க் கொண்டுவரப் பட்டிருக்கிறசாமானைப்போலவே, அவ்வளவுகுணமுள்ளதாய், இந்தியாவிற் செய்யப்படும் சாமானிருந்தால்—அது விலையும் நயமாகவே யிருக்கும் - அதை வாங்குகிற இந்தியன் அதைத் தெரிந்தெடுப்பதினால், தன்னுடைய தேசத்திற்குந் தனக்கும் நியாயத்தைத்தான் செய்துகொள்ளுகிறான்.

இந்தியாவுக்கு வேண்டிய ஒவ்வொரு சாமானையும் தானே சேகரித்துக் கொடுக்கும்படி இந்திய வியாபாரத்திற்கு க்ஷேமகாலம் வருகிறவரையில், சரக்கை உண்டுபண்ணுகிறவனும், வாங்குகிறவனும், இந்தியாவின் நன்மைக்காகவும், தங்களுடைய நன்மைக்காகவும், யேகோபித்து வேலைசெய்யவேண்டும். வியாபா

ரத்தில் சுதேசாபிமானமோ ஒரு மகத்தான விஷயம். வர்த்தகச்சங்கத்தின் சட்டதிட்டங்கள், வர்த்தகக் கணிதம், கணக்கு எழுதி வைக்கும் முறையில் இரட்டைப் பதிவு, பண்டமாற்றுதலட்டவணை யாகிய இவைகளை விட மிகவும் மேலான விஷயமா யிருக்கிறது. ஒவ்வொரு மனிதனும் – அவன் எந்தத் தொழிலைச் செய்தாலும் சரி, எந்த வியாபாரத்தைச் செய்தாலும் சரி – தன்னுடைய சுதேசாபிமானத்தைக் காட்டக் கூடிய அநேக சந்தர்ப்பங்களைச் செய்துகொள்ள வேண்டும். "நான் இன்று என்னுடைய மனைவி மக்களின் தேவைகளைப் பூர்த்திசெய்யவும், விருத்தாப்பியம் மழைநாள் இவைகள் வரும்பொழுது உதவும்படியான ஏற்பாடு செய்துகொள்ளவும் வேலைசெய்தேன். அதே சமயத்தில் என்னுடைய தேசத்தின் நன்மையின் பொருட்டும் சில காரியம் செய்திருக்கிறேன்" என்று, ஒவ்வொரு தினத்தின் முடிவிலும் தனக்குள்ளே சொல்லிக்கொள்ளக்கூடிய மனிதனே பாக்கியவான்.



## II

### கூட்டுத்தொழில்.

இந்திய வியாபாரமானது ஜாஸ்தியான அளவில் விருத்தியாகவேண்டுமானால், "யேகோபித்த கூட்டு வியாபாரச் சங்கமுறை", முதல்முதல் உற்பத்தியாக வேண்டும். இந்தியாவில் பிரத்தியேக வர்த்தகக் கூட்டமானது பெரிய முயற்சிகளிற் பணம் செலவிடத் தகுந்த ஐவேஜியுள்ளதா யிருக்கிறதில்லை. ஆகையால் பெரிய முயற்சிகளைச் செய்ய ஆரம்பிக்க வேண்டுமானால், தன்னுடைய பணத்தை, யேகோபித்த கூட்டு வியாபாரகாரியங்களில் வட்டிக்கு விடும்படி, இந்தியர்களுக்குக் கற்பிக்கவேண்டும். ஓதுக்குப் புறமாயிருக்கிற ஆயிரக்கணக்கான இந்திய கிராமங்களில், காரிய சித்தியாகும் தொழில் முயற்சிக்கு வேண்டிய சாதனங்கள் மறைந்து கிடக்கலாம். ஆனால் கிராமவாசி ஒருவனுக்கும் தனியே ஒருபெரிய முயற்சியிற் பணம் செலவிடத் தகுந்த ஐவேஜியாவது, தைரியமாவது, இல்லாமையினால், அந்த முயற்சியும்—அத்துடன் அதில் வரக்கூடிய லாபமும்—புதைந்து கிடக்கிறது. அப்படிப்பட்ட சந்தர்ப்பங்களில், அதற்கு வேண்டிய கைம்முதலைத் தங்களுக்குள்ளேயே பங்குவீதமாகச் சேர்த்துப்பிறகு ஒருகாரியநிர்வாகசபையை நியமித்து, அந்தச் சபையாரைக் கொண்டு ஒரு மானேஜரை நியமித்து, அது வரவர விருத்தியடையும்படி ஜாக்கிரதை

யாயப பார்த்துவந்து, லாபத்தை எதிர்பார்க்கும்படி, கிராமவாசிகள் கற்றறிய வேண்டும். அதாவது தொழில் முயற்சி அபிவிருத்தியாக, "யேகோபித்த கூட்டு வியாபாரச்சங்கத்தை" ஏற்படுத்த அவர்கள் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதே. ஆனால் இந்திய கிராமங்களிற் போலவே இந்திய பட்டணங்களிலும், படித்தவர்களும் யேகோபித்த கூட்டு வியாபார முயற்சிகளிற் பணம் வட்டிக்குவிடப் பின்தாங்குகிறார்கள். சுபாவத்திலேயே வர்த்தகத்தில் ஞானமிருக்கிற சங்கதி வெளிப்டையா யிருக்கிற பம்பாய், கல்கத்தா இவைகளிலும், இவற்றைச் சுற்றிலுந் தவிர, இந்தியர்கள் ஏற்படுத்தியதும், இந்தியப்பங்குக்காரர்கள் அதிகமாயிருப்பதுமான, யேகோபித்த கூட்டு வியாபாரச் சங்கங்கள் மிகவும் சொற்பமாகவே யிருக்கின்றன. மேற்சொல்லிய பின்தாங்கலிருக்கிற வரையில் இந்தியமுயற்சியானது பிரத்தியேக நபரிடத்திலும், பிரத்தியேக வர்த்தகக் கூட்டத்தாரிடத்திலுமே, இருக்கவேண்டியதா யிருக்கிறது. பெரிய முயற்சிகள்உற்பத்தியாவதற்குக் காலதாமதமுமுண்டாகும். இந்தப் பின்தாங்கலுக்குக்காரணம் சுலபமாய்க் காணக்கூடியதா யிருக்கிறது.

ஒருகாரணம் என்னவென்றால், இந்தியாவில் ஸ்பரிசிக்கப்படத்தக்க செல்வத்தில்— அதாவது, அந்தச் செல்வத்திற் குடையவன், அதை எந்தக்காலத்திலும் தன் கண்ணால்பார்க்கக்கூடியபடி திரவியம், அல்லது, நகைகள், அல்லது வீடுகள், அல்லது, நிலங்

கள், ஆகிய இந்த உருவமாக இருப்பதில்—ஆசை யுண்டாயிருக்கிற விஷயமாக விருக்கிறது. ஸ்பரிசிக் கப் படத்தக்க செல்வத்திலுள்ள இந்த ஆசையானது, கழிந்த நாட்களின் - அதாவது, தொழில் முயற்சியில் யேகோபித்தல் என்பது தெரியாதிருந்த நாட்களின், தக்குகளும், பிண்டாரிகளும், கொள்ளைக்காரர்க ளும், கூட்டம் கூட்டமாய்ச் சுற்றிலும் நிறைந்திருந்த அமைதியற்ற காலம் - இடைக்கிடையே தத்தேசத் தலைமைக்காரனும் வீட்டுக்குட் புகுந்து சூறையாடு வதற்காகத் தன் மலைக்கோட்டையை விட்டுப் புறப் பட்டு வருகிற காலம்-ஆகிய அந்த நாட்களின் சேஷ மா யிருக்கிறது. கழிந்துபோன அப்படிப்பட்ட கட் டுக்கடங்காத நாட்களில் தக்கு, அல்லது, கொள்ளைக் காரனால் அபகரித்துக் கொண்டுபோக முடியாதபடி நிலரூபமாய்த் தன்னுடைய செல்வத்தை வைத்துக் கொள்ளுவது உசிதமென்று கிராமவாசிகள் நினைத்த தில் என்ன ஆச்சரியமிருக்கிறது. அவனிடத்தில் பணமோ, நகைகளோ விருந்தால், பணத்தைப் பூமியி லாவது சுவற்றிலாவது குழிதோண்டிப் புதைப்பதும், நகைகளைத் தன்வீட்டுக்குள்ளிருக்கும் மனைவியின் கா லிற் போட்டுத் திருகாணிகொண்டு திருகிவைப்பதும் என்ன ஆச்சரியம். தொழில் முயற்சியில் யேகோபித் தல் என்பது இந்தியாவில் ஏறக்குறைய இன்னமும் புது விஷயமாகவே யிருக்கும் இந்த நாட்களிலும், அந்தப் பழய கிராமவாசிகளின் சந்ததியார்களுக்கு, இப்போதும், தங்கள் பணத்தைக்கொண்டு நிலம் வாங்

துவதிலும், அல்லது எப்படியோ, தங்கள் செல்வத்தை ஸ்பரிசிக்கப்படத்தக்க ஒரு ரூபமாய வைத்துக்கொள்ளுவதிலும், இயல்பாகவே ஒரு ஆசையுண்டாயிருப்பதைப் பற்றி, ஏன் ஆச்சரியப்பட வேண்டும். ஆனால் ஏகோபித்தலுக்கு ஆரம்பகால முண்டாயிருப்பதை, இந்தியர்கள் கண்டறியவேண்டும். ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்கு போக்குவரவு இல்லாமல் இருந்ததும், ஒரு பொழுதும் தன் வயலுக்கப்பால் ஒருவனும் போகாமலிருந்ததும்; ரெஸ்தாக்கள் - அப்பொழுதிருந்த ரெஸ்தாக்கள் - முற்றிலும் யாத்திரைக்காரர்களுக்கும், அற்பசாமான்களைக் கொண்டு திரிந்து விற்பவர்களுக்கும், கொள்ளைக்காரர்களுக்குமே, சௌவுகரியமாயிருந்ததுமான, முற்காலங்களில் ஒவ்வொருவனும் தன்னுடைய சொந்தத் தென்னை, பனைமுதலிய மரங்களின் நிழலில்வசிப்பதும், தன்னுடைய சொந்த நிலங்களைச் சாகுபடி செய்து கொண்டு வரவர அவைகளை விருத்திபண்ணுவதும், உலகத்திலுள்ள மற்றவர்களைத் தங்களைத் தாங்களே கவனித்துக்கொள்ளும்படி விட்டுவிடுவதும், நன்மையாகவேயிருந்திருக்கும். ஆனாலிப்பொழுது காலங்கள் மாறிப்போய்விட்டபடியால், படித்த மனிதர்கள் தங்களுக்கு உசிதகாலம் நேர்ந்திருப்பதை உணரவேண்டும். இன்றைக்கும் நிலமானது நல்ல ஆட்சியாகவேயிருக்கலாம். ஆனால் அது பழைய நாட்களிலிருந்தது போல ஆட்சிக்கு அவசியமான ஸ்திதியாயிருக்கவில்லை. ஏனென்றால் தக்குகளும், பிண்டாரிகளும்,

கொள்ளைக்காரர்களும் தொலைந்தார்கள். இந்தக் காலங்களில், தத்தேசத் தலைமைக்காரர்களில் - வரி வசூல் செய்கிறவர்களைத் தவிர-ஒருவனும் குடியிருப்பு வீட்டுக்குள் புகுந்து சூறையாடுவ தில்லை. மேலும், இப்பொழுது ஏற்பட்டிருக்கும் தீர்வைகளாலும், அவைகளை அடிக்கடி மாற்றுவ தாலும், முன்போல நிலத்தில் பணம் போடுவது அவ்வளவு லாபகரமா யில்லாதபடியால், பணத்தை வட்டிக்கு விடுகிறவன் நிலத்தையே விரும்பக் கூடியதாயில்லை. பணத்தையும்,நகைகளையும் பற்றியோ வென்றால், படித்த இந்தியன், அப்படிப்பட்ட வட்டிமுடக்கமான உடைமைகள் சிலாக்கியமில்லை யென்பதை உணர்ந்திருப்பது நிச்சயம். எவ்விதத்திலும் அவன் நிலத்தை வைத்துக்கொள்ளட்டும். நாமெல்லாரும் நிலத்தையே பிரதானமாய் நம்பினவர்களா யிருப்பதால், அது ஒரு பெரிய ஆட்சியேயாம். ஆனால், அவன் தன்னுடைய நன்மைக்காகவும், தன்னுடைய தேசத்தின் நன்மைக்காகவும் தேசத்தினுடைய அபிவிருத்தியில் தான் செய்யவேண்டிய பாகத்தைச் செய்யத் தயாராகவு மிருக்கட்டும்.

வர்த்தகத்திலும், தொழில்முயற்சியிலும் ஏகோபிக்காமற் பின்தாங்குவதற்கு மற்றொரு காரணம் என்னவென்றால், இந்தியாவில், அல்லது எவ்வளவானாலும் இந்தியாவின் சில பாகங்களில், பணத்தை வட்டிக்குப் போடும் தொழிலானது, ஒரு விதத்திலும், அந்தத் தொழிலுக்குரியசாவுகாருடைய ஏக சுதந்தி

ரமாகவே யிராத விஷயமாக விருக்கிறது. மிராசுதா ர்கள், குமாஸ்தாக்கள், கடைக்காரர்கள், வியாபாரிகள், பள்ளிக்கூட வுபாத்தியாயர்கள், வைக்கீல்கள், இவர்க ளில்எவரும்தந்தம் தொழிலில் அமர்ந்திராதபொழுது, வட்டிக்குப் பணம் கொடுப்பவர்களா யிருப்பது,எவ்வ ளவு அசம்பாவிதமாக விருக்குமோ அவ்வளவு சம்பா விதமாகவே யிருக்கிறது. இப்படிப்பணம் வட்டிக்குக் கொடுத்தலானது, பெரும்பாலும் தெஸ்தவேஜி யேற் பாட்டின்பேரில், ஏறக்குறைய ரகஸ்யமான விதமாய்ச் செய்யப்படுகிறது. ஆனால் விவகார சாஸ்திரம் போன்ற கண்யமான தொழிலில் அமர்ந்திருக்கிறவர் களும்,உத்தியோகத்தில் அமர்ந்திருக்கும் நேரங்களைத் தவிர மற்ற நேரங்களில், ஜங்கம ஈட்டின் பேரில் பணம் கடன்கொடுக்கும் தொழிலையே செய்வதைப் பார்ப்பது, முற்றிலும் அருமையாக விருக்கவில்லை. நியாயசபையில் பிரசங்கம் செய்யக் காலை 11 மணிக்கு எழுந்திருந்து நிற்கும் நியாயவாதி ஒருவர், அரைமணி நேரத்திற்கு முன் ஒரு பெண்பிள்ளையின் வெள்ளிப் பாதசரத்தை நிறுத்து அந்த ஈட்டின்பேரில் நாலணு வட்டிக்கு 10ரூபாய் கடன் கொடுப்பதை உற்று அறி வதற் கரிதா யிருக்கிறது! ஆனால் அப்படிப்பட்ட தொழிலானது, எவ்வளவு பொருந்தாததாக விருந் தாலும் தீர்மானமாகவே, லாபகரமா யிருக்கிறது. 10 ரூபாய்க்கு மாதம் ஒன்றுக்கு அணு 4 என்பது, வரு ஷம் ஒன்றுக்கு 100க்கு 30 வீதம் ஆகிறது. இது வும், வெள்ளிப் பாதசரம் போன்ற ஸ்பரிசிக்கப்படத்

தக்க ஈட்டின்பேரில் இருப்பதால், அது - அந்த விஷயத்தின் பெயரொன்றைத் தவிர-சந்தேக மில்லாமல், விரும்பப்படத் தக்கதாகவே இருக்கிறது. ஆனால் இப்படிப்பட்ட வேலையானது கைத்தொழில் முயற்சியின் அபிவிருத்திக்கு ரொம்பவும் விரோதமா யிருக்கிறது. ஏனென்றால், ஸ்பரிசிக்கப்படத் தக்க ஈட்டின் பேரில் 100க்கு 30 வரையில் இலாபம் அடையக் கூடிய மனிதன், 10 வந்தால் தெளிவான காரியசித்தி யென்று மதிக்கப்படுகிறதும், ஏக பாச்சியம் செலுத்தப் படுவதற்குமுன்னேயே கடன்செலுத்த வகையற்றதாய்ப் போவது சம்பாவிதமாய் இருப்பதுமான, ஒருகாரியத்தில் தன்னுடைய பணத்தை வட்டிக்கு விடத் தாமதிப்பது ஸகஜந்தான். ஒவ்வொருவருடைய அபிப்பிராயப் பிரகாரம் யோஜித்தால், பணத்தை வட்டிக்கு விடுவதைப் பற்றிக்குற்றங் கூறுவதில் யாதொரு பிரயோஜனமு மில்லாமலிருக்கலாம். ஆனால் ஈட்டின் பேரில் பணம் வட்டிக்குவிடுவதிலும், வட்டி ஜாஸ்தியாக விருந்தாலும், உண்மையில் வரும்படியானது, அது வெளிப்படையாய்த் தெரிகிறதுபோல், அவ்வளவு ஜாஸ்தியா யில்லை யென்று நாம் எடுத்துச் சொல்லலாம். ஈட்டின் பேரில் வட்டிக்குக் கொடுப்பவனிடத்தில் வழக்கமாய்க் கடன் வாங்குகிறவர்கள் வந்து கொண்டும் போய்க்கொண்டு மிருந்தாலும், அவனுடைய முதலில் ஏராளமான பாகம் அபேக்ஷிக்கிறவர்களில்லாமலே எப்பொழுதும், கையில் தங்கி யிருக்கிறது. இவ்வாறாக ஈட்டின் பேரில் கடன் கொடுப்ப

வன் தன்னுடைய பணத்தை வருஷம் 1க்கு 100க்கு 30 வீதமாய் வட்டிக்குக் கொடுத்தாலும், அவனுடைய மொத்த முதலிலிருந்து அவனுக்கு வரும் வட்டியானது, மிகவும் கொஞ்சமாகவே-சில வேளைகளில், கடன் வாங்கிறவர்களுடைய எண்ணிக்கைக்குத் தக்கபடி 20 அல்லது, 15 அல்லது, 10வீதமாகவே-இருக்கும். இதற்கு மாறாக, கைத்தொழில் முயற்சியில் வட்டிக்கு விடும்பட்சத்தில், வட்டிக்கு விடுகிறவன் சம்பந்தப்பட்டவரையிலாவது, வட்டிக்கு விடப்பட்ட முதலில் எவ்வளவும், வட்டி கொடுக்காமல் இருப்பதில்லை. மேலும், பங்குக்காரனுக்கு மேல் விசாரணை செய்யவேண்டிய தொந்தரவுகள் இல்லை. ஒரு மனிதன் தன்னுடைய குழந்தையின் வளைகளின் ஈட்டின் பேரில் கொஞ்சம் பணம் கடன் வாங்க வேண்டுமென்று தலைவாசலில் வந்து காத்துக்கொண்டிருக்கிறான் என்ற ஒரு செய்தியால் இடையூறில்லாமல், நியாய சபைக்குப் புறப்பட வேண்டிய நேரத்திற்கு முன் வரையில், ஒரு நியாயவாதி தன்னுடைய விவகாரக் குறிப்பைப் படித்துக் கொண்டிருக்கலாம்! கவனிக்க வேண்டிய மற்றொரு விஷயம் என்னவென்றால், பணம் வட்டிக்குக் கொடுப்பவனுடைய முதலானது, அதற்கியல்பாயுள்ள பொருமானத்தைவிட ஒரு பொழுதும் ஜாஸ்தி யாகிறதில்லை. வருஷத் துவக்கத்திலிருந்த நூறு ரூபாய் வருஷக் கடைசியில் நூறு ரூபாய் பொருமான முள்ளதாகவே யிருக்கிறது. இதற்கு மாறாக, தொழில் முயற்சியில் பணத்தை வட்-

டிக்கு விட்டால் பங்குகளின் உண்மையான பொருமானம் ஜாஸ்தி யாகலாம். அப்பொழுது, பணத்தை வட்டிக்கு விட்டவன் வட்டியினால் மாத்திரம் அல்லாமல், தன்னுடைய முதலின் அதிகரித்த பொருமானத்தினாலும் இலாபம் அடைகிறான். உதாரணமாக, ஒரு புதிய முயற்சியில் ஒருவன் 100 ரூபாய் வட்டிக்கு விடுவதாய் வைத்துக்கொள்ளுவோம். அந்த முயற்சி அநுகூலமுள்ளதாயிருந்து, முதல் வருஷக் கடைசியில் 100க்கு 8 வீதம் கொடுப்பதாய் வைத்துக் கொள்ளுவோமானால், அப்பொழுது அவனுடைய பங்கின் பொருமானம் சுமார் 120 ரூபாயாக இருப்பது அசம்பாவிதமல்ல. அப்படியானால், அவன் அடையும் வட்டியானது உண்மையில் 100க்கு 8 வீதம் அல்ல, ஆனால் 28 வீதமே யாகும். இவ்வாறு தொழில் முயற்சியினால் சில வேளையிற் கிடைக்கும் லாபமானது அளவுக்கதிகமா யிருக்கிறது. உதாரணமாக, வங்காளத்திலுள்ள நிலக்கரிச் சுரங்கங்களை ஆராய்ந்து பாருங்கள். முக்கியமாய் காட்ரூஸ் ஜேரய்யா சுரங்க மென்னும் ஒரு சுரங்கத்தை ஆராய்ந்து பார்ப்போம். சுமார் 6 வருஷங்களுக்கு முன் காட்ரூஸ் ஜேரய்யா சங்கத்தின் பங்குகளை ஆதி விலையான ரூபாய் 10 வீதம் வாங்கக்கூடிய தாயிருந்தது. பிறகு இந்திய நிலக்கரிக்கு ஒரு கிராக்கி உண்டானதினால், காட்ரூஸ் ஜேரய்யா சங்கத்தின் பங்குகள் அதிவேகமாய் விலையுயர்ந்து, வருஷம் 1க்கு நூற்றுக்கு 40 வீதம் ஒரு பாச்சியம் கொடுக்கப்பட்டிருக்கையிலும் பங்கு ஒன்றுக்கு 42 வீதம் வாங்

கவும் விற்கவும் பட்டன. ஆனால் இதுமட்டு மல்ல. அந்தச் சங்கத்தாருக்குச் சொந்தமான நிலக்கரி வயல்கள், அவர்கள் சௌகரியமாய் வேலைசெய்யக்கூடியதை விட ஜாஸ்தியாக விருந்தன. ஆகையால் அவர்களுடைய நிலத்தில் ஒரு பாகத்தை, சீப்பூர் நிலக்கரிச் சுரங்கமறுக்கும் சங்கமென்னும் ஒரு புதிய சங்கத்தினிடத்தில் விற்றார்கள். இந்தப் புதிய சங்கத்தார் அதன் விலைக்குப் பதிலாக மேற்சொல்லிய காட்ருஸ் ஜெரய்யா சங்கத்தின் ஒவ்வொரு பங்குக்காரருக்கும் எல்லாச் செலவும் நீங்கலாக, அந்தச் சங்கத்தில் அவனுக்குள்ள ஒவ்வொரு 4 பங்குக்கும் சீப்பூர் சங்கத்தில், ஒவ்வொன்றும் ரூபாய் 5 பொருமானமுள்ள 4 பங்குகளைப் பகிர்ந்து கொடுத்தார்கள். இந்தப் புதிய பங்குகளுக்கு கிராக்கி யுண்டாகி மிகவும் கொஞ்சகாலத்திற்குள் மேலே சொன்ன 5 ரூபாய் பொருமானமுள்ள பங்குகள் 14 ரூபாய் வீதம் வாங்கவும் விற்கவும்பட்டன. ஆதி சங்கத்தில் மொத்த விலை ரூபாய் நூற்றுக்குப் பத்துப் பங்குகள் வாங்கியிருந்த வொரு மனிதனுடைய லாபத்தை ஆராய்ந்து பாருங்கள். அவனுடைய நூறு ரூபாயானது 420 ரூபாய் பொருமானமுள்ள தாயிற்று; இதைத் தவிர, அவன் 40 ரூபாய் ஒரு பாச்சியம் அடைந்திருப்பது மல்லாமல் புதிய சங்கத்தில் 112 ரூபாய் பொருமானமுள்ள 8 பங்குகளும் அவனுக்குக் கிடைத்திருந்தன. அந்த வருஷத்தில் அவனுடையஆதி ரூ. 100, ரூ. 572 க்குச் சமானமாக விருந்தது. பணம் வட்டிக்குக்

கொடுப்பவனெனுடைய லாபத்தை இத்துடன் ஒப்பிடலாம். மிகுந்த லாபம் அடைந்த அநேக சங்கங்களில் ஒன்றாக அதிசீக்கிரம், காட்ரூஸ் ஜேரய்யா சங்கம் ஆயிற்று. ஆனால் அதுதான் அவைகள் எல்லாவற்றையும் விட, அதிக இலாபமடைந்த சங்கம். இந்த இந்திய நிலக்கரிச் சங்கங்களின் காரிய சித்திபூரணது, ஒரு அபூர்வமான விதமாயிருக்கிறதென்று நாம் சேர்த்துச் சொல்ல வேண்டியிருக்கிறது. இந்திய முதலாளி, தனக்கு நல்ல இலாபம் வருமென்று நம்பிக்கையிருந்தாலும், இந்த மாதிரியாய்த் தான் ஒவ்வொரு நாளும் வட்டிக்குவிடக் கூடுமென்று எதிர்பார்க்கக் கூடாது. மகத்தான பாக்கியம் கிடைக்கு மென்று எதிர்பார்க்கக் கூடிய வியாபாரங்கள் யாதொரு பாக்கியமும் கொடுக்காமலே அடிக்கடி முடிவடைகின்றன. ஆகையால் முதலாளி ஜாக்கிரதையா யிருக்கவேண்டும். இந்திய நிலக்கரிக்குத் திடீரென்றுண்டான கிராக்கிக்கு முக்கியகாரணம், தென்ஆபிரிக்கா யுத்தத்திலுண்டான முட்டுப்பாடாக விருக்கிறது. இப்படி அதிசயமாக வுண்டான கிராக்கியானது, யுத்தம் முடிந்தவுடன் முற்றிலும் இல்லாமற் போய், அநேக வர்த்தகர்கள் நாசமடைந்திருக்கலாம். ஆனால், உண்மையில் இப்படி ஏற்படவில்லை. ஏனென்றால் தென் ஆப்பிரிக்காவின் கிராக்கிகள், செலவிடுவோர்களால் அதுவரையில் ஒருவாறு அலட்சியம் செய்யப்பட்டிருந்த இந்திய நிலக்கரிக்குத் தகுந்த விளம்பரமாக விருந்தது.

வர்த்தகத்திலும் தொழில் முயற்சிலும் ஏகோபிக்காமற் பின்தாங்குவதற்கு மூன்றாவதுகாரணம் என்னவென்றால், பணத்தைத் துணிந்து ஒரு விஷயத்தில் செலவிடுவதில் இந்திய சுதேசிகளுக்கு சுபாவமாயுள்ள கோழைத்தனமாகவே யிருக்கிறது. இந்த சுபாவமான கோழைத்தனம் இந்திய சுதேசிகளில் அநேகர், பழமையான ஏகோபித்த கூட்டு வியாபாரச் சங்கங்களில் மிருந்த நஷ்டமடைந்த விஷயத்தினால் அதிகரித்திருக்கலாம். சூடு கண்ட பூனை அடுப்பண்டை போகாதென்று பழமொழி யிருக்கிறது. உதாரணமாக, 1809-ம் வருஷத்தில் வங்காளத்தியத் தங்கச் சுரங்கங்களின் கதையை ஆராய்ந்து பாருங்கள். வங்காளத்தில் ஒரு ஜில்லாவில், தங்கம் நிறைந்திருக்கிறதென்று ஒரு வதந்தி உண்டாயிற்று. சங்ககர்த்தா ஒருவன் அந்த ஸ்தலத்தி லிருந்தான். எண்ணிறந்த தங்கச் சுரங்கமறுக்கும் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டன. அந்தச் சுரங்கங்களிலுள்ள தங்கம் இவ்வளவென்று, மகத்தான அறிக்கைப் பத்திரிகைகள் வெளிவந்தன. மனதைக் கவரும்படியான வங்காளத் தங்கப் பாளங்கள் கல்கத்தாவிற் காண்பிக்கப்பட்டன. பங்குகளின் விலை அதிவேகமாய் உயர்ந்தது, அல்லது, உயர்த்தப்பட்டது. செல்வவந்தர்களான ராஜாக்களும், நவாப்புகளும், இவர்களைப் போன்ற மற்றவர்களும் ஜாஸ்தியாய் வாங்கும்படி தூண்டப்பட்டார்கள். பிறகு வெளிப்பட்டது பயங்கரமான உண்மை. செல்வமான தங்கச் சுரங்கங்களிற் செல்வமான தங்கமில்லை. பங்குகளின் விலை,

ஒன்றுமில்லாமற் போயிற்று. சிலருக்குப் பணம் சேர்ந்தது. ஆனால் செல்வவந்தர்களான ராஜாக்களும், நவாப்புகளும்,இவர்களைப் போன்ற மற்றவர்களும் அழுதார்கள், புலம்பினார்கள், பல்லைக் கடித்தார்கள். தென்னிந்தியாவில் வைனாடு தங்கச்சுரங்கங்களில் லாபத்தை எதிர்பார்த்திருந்த 1882-83 இந்த வருஷங்களில், இதே மாதிரியாக நேர்ந்தது. ஆனால் அங்கே சுரங்கங்கள், ஒரு விதத்திலும் கட்டுக் கதையா யிருக்கவில்லை. பணம் நஷ்டமடைந்தவர்கள், பெரும்பாலும், இங்கிலாந்தி லுள்ள ஆங்கிலேய பங்குக்காரர்களே தவிர இந்தியாவிலுள்ள இந்திய பங்குக்காரர்களல்ல. என்றாலும், இந்தியா முழுவதிலும், இதைப் பற்றிய செய்தி பரவிற்று. அந்தச் சுரங்கங்கள், முன் காலத்தில் இந்திய சுதேசிகள் வேலைசெய்த புராதனமான தங்கச் சுரங்களாக விருந்தன. இந்திய சுரங்கமறுப்பவர்களால் மேற் புறத்திலுள்ள தங்கம் மட்டும் எடுக்கப்பட்டிருக்கிறதென்றும், இக்காலத்திய யந்திரங்களினாலும், ஆழ்ந்து சுரங்கமறுப்பதினாலும், அந்தச் சுரங்கங்களிலிருந்து மகத்தான பாச்சியம் அடையலாமென்று ஒரு நம்பிக்கை உண்டாயிருந்தது. இந்த நம்பிக்கையில் நியாய விரோதம் ஒன்றுமில்லை. காரியங்களும் வேகமாக நடந்துவந்தன. பங்களாக்களும், கொட்டகைகளும் ஏற்படுத்தப்பட்டன. சுரங்க மறுப்போர்கள் ஐரோப்பாவிலிருந்து கொண்டுவரப் பட்டார்கள். பளுவானவும் விலையுயர்ந்தனவுமான யந்திரங்கள் சீமையிலிருந்து தருவிக்கப்பட்டன. அந்தப்

பளுவான யந்திர சாமான்களை வைஞடு மலைகளின் மேற் கொண்டுபோய்ச் சேர்ப்பது காலதாமதமுள்ள தும் அதிகச் செலவுள்ளதுமான விஷயமாயிருந்தது. இந்த யந்திர சாமான்களிற் சில, நத்தை ஊர்வது போல் வழியில் வந்துகொண்டிருக்கும் பொழுதே, ஏற்கனவே வேலைக்காரம்பம் செய்த சுரங்கங்கள் காரி யஹானியை யடைந்து, அந்த முயற்சியானது உடனே முடிவடைந்து விட்டது. வைஞடு மலைகளில் அலைந்து திரிகிறவொருவன் இன்றைக்கும், இங்குமங்கும்பெரிய யந்திர சாமான்கள் துருப்பிடித்துக் கிடப்பதைப் பார் ப்பது அசம்பாவிதமல்ல. அப்படிப்பட்ட ஜனசஞ் சார மில்லாத விடங்களில் அவை கிடைப்பதின் தாத் பரியம் என்னவென்று ஆச்சரியப்படுவான். 21 வரு ஷங்களுக்குமுன், வழியிற் கூலியாட்கள்விட்டுப்போன யந்திரங்கள் அவைகளாம். அவைகள் முறிந்துபோன ஏகோபித்த கூட்டுவியாபாரச் சங்கங்களின் ஞாபகக் குறியா யிருக்கின்றன. இந்தியர்களால் ஏற்படுத்தப் பட்ட அநேக ஏகோபித்த கூட்டுவியாபாரச் சங்கங்க ளும் அதைரியப்படுத்தக் கூடிய வைகளாயிருந்தன. கண்ணாடி செய்யும் சாலைகள், நெருப்புக்குச்சி செய்யும் சாலைகள், கடிதாசி செய்யும் சாலைகள் முதலிய சாலை கள் இந்திய முயற்சியால் ஏற்படுத்தப்பட்டு கொஞ்ச நாளிருந்து, பிறகு இருந்தவிடம் தெரியாமற் போன வைகள் எவ்வளவென்று யாரால் அறியக் கூடும். இன் றைக்கும் தன்னுடைய பணத்தை ஏகோபித்த கூட்டு வியாபாரச் சங்கமாகிய நிச்சயமில்லாத ஈட்டில்

வட்டிக்கு விடுவதைக் காட்டிலும் சுவற்றிற் குழி தோண்டிப் புதைப்பதும், அல்லது வருஷம் ஒன்றுக்கு 100-க்கு சுமார் 30 விகிதம் வட்டிக்கு நிலத்தின் பேரில், அல்லது நகையின் பேரில் கடன் கொடுப்பதும் சிலாக்கிய மென்று இந்திய முதலாளி நினைப்பதில் என்ன ஆச்சரிய மிருக்கிறது. இதற்கெல்லாம் சரியான பதில் என்னவென்றால், இந்தத் தொழில் முயற்சித் தந்திரங்களிற் சில, ஏன் முறிந்து போயின வென்பதைப் பற்றிப் பேசித்தெளிவதாகும். சென்ற சில வருஷங்களுக்குள்ளே நேர்ந்த இப்படிப்பட்ட ஆபத்துகளி லெல்லாம் மேலானதாகிய வங்காளத்திய விநோதமானதங்கச் சுரங்கங்களில் நேர்ந்த நஷ்டங்களைப் பற்றி யோஜித்தால், இந்த சந்தர்ப்பத்திற் பணம் போட்டவர்களெல்லாம், சங்கம் ஸ்தாபிக்கிறவர்களுடைய துற்போதனையினால் மோசம் போனர்களென்று சொல்லலாம். மேலும் தங்கச் சுரங்கமறுத்தலானது, உத்தமமான சௌகரியங்களிருந்தாலும், முற்றிலும் அதிர்ஷ்ட வசமான காரியமா யிருப்பதுந் தவிர உபயோகமுள்ள உலோகங்களி லொன்றுமிராத தங்கத்தை உண்டாக்குவதினால் உலகத்திற்குண்டாகும் பிரயோஜனம் மிகவும் அற்பமாகவே யிருக்கிறது. இந்திய முதலாளிக்குச் சிபார்சு செய்யப்பட வேண்டிய தொழில் முயற்சியின் மாதிரி இதல்ல. தங்கச் சுரங்கமறுத்தலானது, அதிர்ஷ்ட வசமான காரியமா யிருக்கிறது. ஏனென்றால் ஒரு சுரங்கத்தில எவ்வளவு தங்க மிருக்கிறதென்று முன்னடி சொல்ல வொருபொழுதும் முடியாது. சுரங்கத்

தில் எவ்வளவு நூறுயிரம் டன் நிறையுள்ள நிலக்கரி யிருக்கிறதென்று முன்னுடியே சொல்லக் கூடிய விதமாய், ஒரு நிலக்கரிச் சுரங்கத்தில் நிலக்கரியானது ஓடியிருக்கிறது. ஆனால் தங்கம் ஓடியிருக்கிற திக்கையும் அளவையும் ஒருவருங் கண்டறிய முடியாது. ரொம்பவும் எதிர்பார்க்கக் கூடிய அடுக்கானது திடீரென்று முடிந்துபோ யிருக்கலாம். ஆகையால் தங்கச் சுரங்க மறுப்பது, ஏறக்குறைய, சூதாட்டத்திற்குச் சமமாகவே யிருக்கிறது. தங்கச் சுரங்கமறுப்பதின் அதிர்ஷ்டவசமான ரீதியை, மைசூர் ராஜ்ஜியத்தில் ஒரே ஜில்லாவிலுள்ள சில சுரங்கங்களின் விலைகளை ஒப்பிட்டுப் பார்ப்பதினுற் காணலாம். பங்குக்காரருக்கு செல்வத்தைக் கொடுத்தன சில; பங்குக்காரருக்கு நஷ்டத்தைக் கொடுத்தன சில. உதாரணமாக, சாம்பியன் ரீப் சங்கத்தில் ஒரு பங்கின் ஆதி விலை 10 ஷில்லிங்குகளாக விருந்து, 1903 வரு டிசம்பர் மாஸம் 24ௗ, அதன் விலை 8 பவுனுயிற்று. பாலகாட் சங்கத்தில் ஒரு பங்கின் ஆதி விலையானது 1 பவுனுக விருந்து,1903 வரு டிசம்பர் மாஸம் 24ௗயில், அதன் விலை 18 ஷில்லிங்கு 6 பென்ஸாகக் குறைந்தது. காரேர் மைசூர் சங்கத்தில் ஒரு பங்கின் ஆதி விலையானது 5 ஷில்லிங்குகளாக விருந்து, 1903 வரு டிசம்பர் மாஸம் 24ௗ,3 பென்ஸாகக் குறைந்தது. தங்கச் சுரங்கமறுப்பது போன்ற அதிர்ஷ்டவசமான முயற்சிகளி லல்லாமல் உண்மையான தொழில் முயற்சிகளில் தன்னுடைய கவனத்தைச் செலுத்தும்படி இந்திய முத

லாளி போதிக்கப்பட வேண்டுமென்று நாம் மறுபடியும் சொல்லலாம். ஆனல், பிரேரேபிக்கப்பட்ட ஒவ்வொரு ஏகோபித்த கூட்டு வியாபாரச் சங்க விஷயத்திலும் தன்னுடைய வாச்சாலர்களான காரியக்காரர்களைக் கொண்டும், பளபளப்பான விளம்பரப் பத்திரிகைகளைக் கொண்டும் தன்னுடைய சங்கத்திற்குப் பங்குக்காரர்களைச் சேர்க்க நாடும் சங்க கர்த்தாவினல் ஏமாற்றப்படாமல் முதலாளி ஜாக்கிரதையாயிருக்கவேண்டும். ஷேக்ஸ்பியர் என்னும் கவிச் சக்கரவர்த்தியால் இயற்றப்பட்ட "கிங் ஜான்" என்னும் நாடகத்தில் பாஸ்டார்ட் என்பவன் (2-வது அங்கம் 2-வது களம்) பின் வருமாறு சொல்லும் பொழுது, ஒரு சூதான ஏகோபித்த கூட்டு வியாபார விஷயத்தை ஆதரிக்கும் நவீன சங்க கர்த்தாவை உத்தேசித்துச் "சரக்குப்பிரபு" வென்று விவரமாய்ச் சொல்லி யிருப்பதாய் நாம் எண்ணலாம்.

.................................."அவன்
மாயப் பேய்,விசு வாச விதியை
தேய வின்னுஞ் செய்யுந் தரகன்,
தன்னின் வாக்குத் தத்தந் தெறிக்க
உன்னி நாளு முறைப்போன், உயர்ந்த
அரச ரேழை யான பேர்கள்
சிரசு நரைத்தோர் சிறப்புடை இளைஞர்
மங்கை மார்கள் மற்று ளோரையும்
எங்கும் வெல்லு மினிய பார்வை
உள்ள வந்த வுயர்ந்த குலினன்,
கொள்ளல் விற்றல் கூறுஞ் சரக்கே."

ஆனால் உண்மையில் சங்க கர்த்தாக்களில் நல்ல மாதிரி யானவர்களும், கெட்ட மாதிரி யானவர்களு மிருக்கிறார்கள். முதலாளி அவர்களைப் பகுத்தறிய வேண்டும். பிரேரேபிக்கப்பட்ட சங்கமானது நேர்மையான தென்றும், அதன் விசாரணையை வகித்தவர்கள் செல்வாக் குடையவர்களாயும், ஐவேஜி யுள்ளவர்களாயும், கண்ய முள்ளவர்களாயு மிருக்கிறார்களென்றும், பிரேரேபிக்கப்பட்ட தந்திரமானது காரியசித்தி யடையக் கூடுமென்றும், அவன் நிச்சயமாய்த் தெரிந்து கொள்ளவேண்டும். இந்த விஷயங்களெல்லாம் அவனுக்குத் திருப்திகரமா யிருந்தால் அவன் தன் பணத்தை வட்டிக்கு விட்டு நன்மையை எதிர்பார்த்திருக்கலாம். மறுபடியும் ஷேக்ஸ்பியரி லிருந்து ஒப்பிட வேண்டி யிருக்கிறது. பெண் கல்வியானது விருத்தி யடைந்திருக்கு மிந்நாட்களில் நம்முடைய கோழைத் தனமுள்ள முதலாளிகளிற் சிலருடைய மனைவிமார்கள் மாக்பெத்து சீமாட்டியைப் போலப் பொல்லாதவர்களா யில்லாமல், அவளைப் போலத் தைரியசாலிகளா யிருந்து, தங்கள் புருஷருடைய காரியங்களில் அதிகமான கவனத்தைச் செலுத்த அப்பியாசப்பட்டுத் தங்களுக் குண்டாகும் சந்தர்ப்பங்களை பிரயோஜனப் படுத்திக்கொள்ளும்படி அவளைப் போலத் தங்கள் புருஷருக்கும் போதிப்பார்களென்று நாம் நம்பலாம். ஸ்திரீகள், சரீரத்துக் குண்டாகும் அபாயத்தைக் கண்டு பயப்படுவது சகஜமானாலும், ஒரு முயற்சியிற் புருஷர்களை விட

எப்பொழுதும் அதிக தைரிய முள்ளவர்களா யிருக்கிறார்கள். இந்த தைரியமானது மூடத்தனத்தினாலுண்டாகாமலிருந்தால், அது விசேஷமான நன்மையையுண்டாக்கும். மாக்பெத்து சீமாட்டி பொல்லாத்தனம் ஒன்றைத் தவிர மற்றப்படி மேன்மையானஸ்திரீயே. அவள் தன்னுடைய கோழைத்தனமுள்ள புருஷனை நோக்கி "இந்த முயற்சியை" உண்மையாகச் செய்து முடிக்க உத்தேசிக்காத வரையில் தன்னிடத்திற் சொல்லஎன்ன அவனைத் தூண்டிற்றென்று கோபமாய்க் கேட்கும்பொழுது அவள் ஒரு தொழிலுக்குரிய தந்திரத்தைச் செய்யும்படித் தன் புருஷனை ஏற்புறுத்தும் ஒரு இந்திய சீமாட்டியாகவிருந்தால் மிகவும் சந்தோஷமாயிருக்கும். கோழைத்தனத்தைத் தன் புருஷன் வெளியிட்டுச் சொன்ன பொழுது அவள் சொல்லிய பதிலானது ரொம்பவும் நேர்த்தியா யிருக்கிறது.

மாக்பெத்து— நாம் தவறுவோமானால்

மாக்பெத்து சீமாட்டி— நாம் தவறுவோம்

ஆனால் குத்தாகிறவிடத்தில், உன்னுடைய தைரியத்தையெல்லாம்திரட்டிக்கொள். நாம் தவறமாட்டோம்.

அந்தப் பதிலைக் கோழைத்தனமுள்ள எல்லாத் தொழில் முயற்சியுடையவர்களும் நன்றாய் மனதில் வைத்துக் கொள்ளலாம். சிறிய கண்ணாடி செய்யும் சாலைகளும், நெருப்புக் குச்சி செய்யும் சாலைகளும் மற்றும், இவை போன்ற சாலைகளும் ஸ்தாபிக்கப்பட்டுப் பிறகு முறிந்து போயிருப்பதற்குக் காரணம், சம்பந்தப்பட்ட தொழில் முயற்சியின் தன்மைகளைப்

போதுமானபடி தெரிந்துகொள்ளாமலும், தொழிலா ளியிடத்தில் அத்தொழிலுக்கு வேண்டிய ஞானமில்லா மலும், தொழிலுக்கு வேண்டிய சாதனங்களைச் சேகரிக்கவும், அந்தச் தொழில் அரிஷ்டநிவாரண மாகி இலாபம் வர ஆரம்பிக்கிற வரையில் தொழிலை நடத்துவதற்கும் வேண்டிய கைம்முதல் இல்லாம லும், ஒரேவிதியாய், மேற்சொல்லிய சாலைகள் ஆரம் பஞ் செய்யப்பட்டிருந்த விஷயமாகவே யிருக்கிறது. "தொழிற்சாலை" யென்று பெயரை வைத்து ஒரு அசுத்தமான குடிசையில் ஒரு கேவலமான மேஜைக்கு எதிரே உடைந்த நாற்காலியில், பாதியுடம்பைத் திற ந்து போட்டுக்கொண்டு, உட்கார்ந்திருக்கும் குமாஸ் தாவே அதன் பிரதிநிதியாகவும், தரையில் உட்கார்ந்து கூச்சலிட்டு, அற்ப வேலை செய்துகொண்டிருக்கும் 3 அல்லது 4 கூலியாட்களே அந்தத் தொழிற் சாலை யின் வேலைக்காரர்களாகவும், ஏற்பட்டிருக்கிற இம்மா திரியான தொழிற்சாலை, காரியசித்தி யடையும் தொ ழிற் சாலை ஆக மாட்டாது. காரிய சித்திக்குச் சிறப் பான உத்தியோக சாலைகளும், நீராவி யந்திரங்களும் அவசியமாயிருக்கவேண்டியதில்லை. ஆனால் நம்பிக்கை யுண்டாக்கப் போதுமானபடி, விஷயங்க ளெல்லாம் கௌரவ முள்ளவைகளாயிருக்கவேண்டும். ஒழுங்கின மான அற்பச் சங்கங்கள் முறிந்துபோனநிமித்தம் தொ ழில் முயற்சியில் அவநம்பிக்கையுண்டாகக் கூடாது.

வழக்கமாய் இந்தியாவில் பரவி யிருக்கிற பொ துவான அவநம்பிக்கையான சுபாவமே, கூட்டுத்

தொழிலின்மைக்கு மற்றொரு காரணமா யிருக்கிறது. இதுவே மிகவும் முக்கியமான காரணமாயுமிருக்கிறது. ஒருவன் மற்றெல்லாரிடத்திலும் அவநம்பிக்கை கொள்ளுகிற இந்தச் சுபாவமானது விசனிக்கப்படத் தக்கதாயிருக்கிறது. இந்திய மகா ஜனங்களின் மனோ நிலைமை சாதாரணமாய் இந்த மாதிரி யிருக்கிறதென் பதை மறுக்க முடியாது. தாழ்ந்த சாதியார்களிடத் திலாயினும் பொதுவாயுள்ள அவநம்பிக்கையான சுபா வமே, தேசத்தாரின் மனப்பித்தாய் முற்றிலு மில்லை யென்று மறுதளிக்கவும் முடியாது. இந்தியாவி லுள்ள ஒரு சுயம்பாகியானவன் தான் கடைத் தெரு வில் வாங்கின சாமான்களைப் பற்றித் தன்னுடைய எஜமானி யிடத்தில் உண்மையான கணக்குக் கொடுப் பது முட்டாள்த்தனமென்று நினைத்துக் கொள்ளுகி றான். ஒரு சுவரெழுப்புவதில், தான் செலவழித்த பணத்தைப் பற்றித் தன் என்ஜினீரிடத்தில் உண்மை யான கணக்கைக் கொடுப்பது முட்டாள்த்தன மல்ல வென்று நினைத்துக் கொள்ளுமொரு கீழ்ப்பட்ட உத் தியோகஸ்தனுக்கு "ஸி. ஐ. ஈ" என்னும் பட்டம் இந் தியா கெவர்ன்மெண்டார் கொடுக்க வேண்டும். இது போலவே ஒரு ஏகோபித்த கூட்டு வியாபாரச் சங்கத் தின் மானேஜரும் தன்னுடைய விசாரணைத் தலைவர்க ளிடத்தில், அவர்களுடைய பாக்கி ஜாப்தாவை உண் மையானபடி கொடுப்பது முட்டாள்த்தன மென்று ஏன் நினைத்துக்கொள்ள மாட்டானென்று, அவநம் பிக்கையுள்ள முதலாளி கட்சி பேசுகிறான். விசார

ணைத் தலைவர்கள் விஷயத்திலும், இந்த அவநம்பிக்கையான முதலாளி சில சங்கதிகளைச் சொல்லுவான். கோவில் விசாரணைக் கர்த்தர்களும் கோவில் ஐவேஜி விஷயத்தில் அயோக்கியத்தனமாயிருக்கிறார்களென்று -சரியாகவோ, பிசகாகவோ - பழமொழியாய், ஏற்பட்டிருக்கிறது. தன்னுடைய கிராமக் கோவிலின் விசாரணைக் கர்த்தர்கள், அந்தக் கோவிலின் ஐவேஜிகளைச் சொந்த உபயோகப் படுத்திக்கொண்டு விட்டார்களென்று ஒருவனுக்கு நம்பிக்கை யுண்டாயிருந்தால், ஏகோபித்த கூட்டு வியாபாரச் சங்க விசாரணைத் தலைவர்களும், அந்தச் சங்கத்தின் முதலைச் சொந்த உபயோகப் படுத்திக் கொண்டுவிடுவார்களென்று பயந்து அந்தச் சங்கத்தில் தன் பணத்தைப் போடத் தயங்குவானென்பதில் யாதொரு ஆச்சரியமு மில்லை. குற்றஞ் சொல்ல முடியாத நேர்மை யுள்ள கண்யமான மனிதர்கள் இந்தியாவில் வெகு பேர்கள் கூட்டமா யிருக்கிறார்கள் என்பது சொல்லாமலே பொருந்து மாயினும், இந்தப் பொதுவான அவநம்பிக்கையான சுபாவம் இருந்துகொண்டே யிருக்கிறது. ஒரு மனிதனுக்கும் மற்றொரு மனிதனுக்குமுள்ள நம்பிக்கை யின்மையானது, ஏகோபித்த கூட்டு வியாபாரத்தின் அபிவிருத்திக்கு, அவசியம், ஒரு பெரிய இடைஞ்சலாக விருக்க வேண்டும். இந்த விஷயத்தில் முதலாளிக்குச் சொல்லவேண்டிய நல்ல புத்திமதி என்னவென்றால் அவன் நன்றாய் விழித்துக் கொண்டிருக்க வேண்டும்; தன்னைச் சேர்ந்த மனிதர்க

விடத்தில் நியாயமான நம்பிக்கை வைக்கும்படி கற்றிய வேண்டும். நன்றாய ஒழுங்குபடுத்தப் பட்டிருக்கிற ஒரு சங்கத்தில் ஏமாற்றுவது யாருக்கும் எளிதல்லவென்று அவன் ஞாபகத்தில் வைத்துக் கொள்ள வேண்டும். ஒரு ஏகோபித்த கூட்டு வியாபாரச் சங்கத்தின் முதலை நிர்வாகஞ் செய்வதற்கும், கோவில் ஐவேஜியை நிர்வாஹஞ் செய்வதற்கும் ரொம்பவும் வித்தியாச மிருக்கிறது. அனுபோகமும் நல்ல கண்யமுமுள்ள மானேஜரின் கீழ் ஒழுங்குபடுத்தப்பட்ட சிப்பந்திகளிருப்பதாலும், சமாராய் ஜாஸ்தியான, விஜாரணைத் தலைவர்க ளிருப்பதாலும் உத்தரவாதமுள்ள கணக்குப் பரிசோதகர்க ளிருப்பதாலும், ஒவ்வொருவரும் தம் தம் கடமையைச் செய்துவந்தால், மோசஞ்செய்யும் எத்தனங்கள் கண்டுபிடிக்கப் படாமலிருப்பது ஏறக்குறைய அசாத்தியமான விஷயமாக விருக்கும். மேலும் பங்குக்காரனுக்குத் தன்னுடைய பாக்கி ஜாப்தா வரும். வருஷத்திற் கொரு முறை அல்லது ஆறு மாதத்திற் கொரு முறை சபைகூடும் பொழுது தன் மனச் திர்ப்தி யாகிற வரையில் விசாரணைத் தலைவர்களைப் பரீக்ஷை செய்யலாம். இதுவுந் தவிர, தான் முதலாளி யென்னும் அதிகாரத்தினால், புத்தி சொல்லப் போவதுபோல் போய் அடிக்கடி மானேஜரைத் தொந்தரை செய்யலாம். இந்தியாவில் வர்த்தகத்திலுள்ள அவநம்பிக்கையான இந்தச் சுபாவத்திற்கு மிகவும் முக்கியமான காரணம் இந்தியாவில் அனேகமாய் ஒவ்வொரு விற்றல் வாங்கல் விஷயத்திலும் நடத்

தப்படும் "விலை கூறுதல்" ஆகிய கீழ் நாட்டுக் குரிய முறையே என்று சொல்லலாம். ஒரு கடைக்காரன் தன்னிடத்தில் வழக்கமாய் வாங்குகிறவனுக்கு, ஒரு சாமானை 20 ரூபாய் விலை சொல்லிக் கடைசியாக 15 ரூபாய்க்கு அவனிடம் விற்றால், வழக்கமாய் வாங்குகிறவன் தன்னிடத்தில் ஜாஸ்தி விலைக்கு அந்தச் சாமானை விற்க எத்தனப்பட்டா னென்று நினையாமலிருக்க முடியாது. ஆகையால் அவன் கடைக்காரனிடத்தில் கொஞ்சம் அவநம்பிக்கையோடேயே யிருப்பான். கடைத் தெருவிலிருக்கும் சொற்பக் கடைக்காரன் விஷயத்திலும் மூட்டையைத் தூக்கிக் கொண்டு தெருத் தெருவாய் விலை கூறி விற்கும் அற்ப வியாபாரி விஷயத்திலும், வாங்குகிறவன் அறிவில்லாதவனு யிருந்தால், அவனைக் கண்டிப்பாய் ஏமாற்ற விற்பவன் தயாராயிருக்கும் விதமானது ரொம்பவும் அநியாயமா யிருக்கிறது. விற்பவன் ஒரு சாமானுக்கு ஒரு ரூபாய் விலை சொல்லிக் கடைசியாய் 4 அணுவுக்கு விற்பான். வாங்குகிறவன் மூட்டாளா யிருந்து, யோஜியாமல், ஒரு ரூபாயை உடனே எடுத்துக் கொடுத்தால், விற்போன் கொஞ்சங் கூட அனுதாப மில்லாமல், தன் பையில் போட்டுக்கொண்டு விடுவான். ஐரோப்பாவிலிருந்து இந்தியாவுக்குப் புதிதாய் வருபவர்கள் அனுபவத்தினால் விவேகியாகிற வரையில் அநேகந் தரம் இந்த மாதிரியான சங்கடத்திற் குள்ளாகிறார்கள். இந்தியாவின் அதிர்ஷ்ட ஹீனத்தினால் இந்த மாதிரியாகவே சொற்பக் கடைகள் மட்டுமல்ல, அனேகம்

பெரிய கடைகளும், தங்கள் தொழிலை நடத்திவருகின்றன. இந்தக் கோட்பாடானது, வாங்குவோன், விற்போன் ஆகிய இருவர்களுடைய யோக்கியதையையும் கெடுக்காமலிராது. ஏனென்றால் அவர்களில் ஒவ்வொருவனும், மற்றவனை வஞ்சிக்கத் தன்னால் இயன்றவரையிற் செய்யத் தூண்டப்படுகிறான். உண்மையாகவே, வாங்குவோனும் விற்போனைப்போலவே, பெரும்பாலும், அயோக்கியனாக விருக்கிறான். "உபயோகமில்லாதது, உபயோகமில்லாதது என்று வாங்குவோன் சொல்லுகிறான். தனதிருப்பிடம் போய்ச் சேர்ந்ததும் அவன் பெருமை பாராட்டிக்கொள்ளுகிறான்." இவ்வாறு (பழமொழிகள் 20,14) 3000 வருஷங்களுக்கு முன்னே, கீழ் நாடுகளில் கடை வைப்பதைப் பற்றி வசைச் சொல்லாகச் சொன்ன விவரணத்தில் சாலமன் என்பவர் எழுதினார். இந்தியக் கடைகளைப் பற்றி நேற்றைய தினம் அவர் எழுதுவதாயிருந்தாலுங்கூட அவ்வாறே எழுதியிருக்கலாம். இங்கிலாந்திற்போலவே இந்தியாவிலுமுள்ள ஒரு கண்யமான ஐரோப்பியர் கடையில், சாமான் தேவையுள்ள ஒருவன், உள்ளே போய் விலையைக் கேட்டு அந்த விலை தனக்குச் சரியென்று தோன்றினால் அந்தச் சாமானை வாங்குவான்; அல்லது அது ரொம்பவும் கிராக்கியாக விருக்கிறதென்று நினைத்தால் மரியாதையாய் மன்னிப்புக் கேட்டுக்கொண்டு போய்விடுவான். இந்தச் சங்கதிக்கு ஒரு நிமிஷத்துக்குமேற் செல்லாது. இந்த இரு தரத்தாரில் ஒருவரும் மற்றொருவரை வஞ்சிக்க முயலவில்லை. இந்

தச் சத்ருமான நடவடிக்கையை இந்தியக் கடைத் தெருவில் நடக்கும் நடவடிக்கையோடு ஒப்பிட்டுப் பாருங்கள். ஒரு மனிதன் ஒரு குடை வாங்க விரும்புகிறானென்று வைத்துக் கொள்ளுவோம். இந்த நடவடிக்கையில் அவன் சொல்லுகிற அல்லது நடத்துகிற பொய் எவ்வளவென்று நாம் எண்ணுவோமாக. குடையும் மற்றச் சாமான்களும் விற்கும் ஒரு கடைக்கு அவன் போகிறான்; குடையைப் பற்றித் தான் ரொம்ப ஆவலாயிருப்பதாகக் காட்டிக் கொண்டால் கடைக்காரன் அதன் விலையை ஜாஸ்தியாகச் சொல்லுவானென்று பயந்து கொண்டு தனக்கொரு கெடிகாரம் தேவையென்று பாசாங்கு பண்ணுகிறான் (முதலாவது பொய்); மறுபடியும் கடையிலிருக்கிற கெடிகாரங்கள் தனக்கு வேண்டிய மாதிரியாயில்லை என்று பாசாங்கு பண்ணுகிறான் (இரண்டாவது பொய்); பிறகு பேச்சோடு பேச்சாய், தனக்கு அடுத்த மாசத்தில் ஒரு குடை தேவையாயிருக்கலாமென்று (மூன்றாவது பொய்), ஒரு குடையின் விலையை விசாரிக்கிறான். கடைக்காரன் "மூன்று ரூபாய்" என்று சொல்லுகிறான். வாங்குவோன், பரிகாசமாய்ச் சிரித்துக் கொண்டு, ஒரு ரூபாயை எடுத்துக் கொடுக்கிறான். கடைக்காரன், அவமதிப்பாக மூக்காலுறுஞ்சிக் கொண்டு, தன் விலையை $2\frac{1}{2}$ ரூபாய் வரையில் குறைத்து அதற்கொரு தம்படி குறைந்தாலும் கொடுக்கமாட்டேனென்று சபதம் பண்ணுகிறான். வாங்குவோன் ரூபாய் 1-8-0 வரையில் விலையை உயர்த்தி அதற்குமேல்

ஒரு தம்படி கூடக் கொடுக்கமாட்டேனென்று சபதம் பண்ணுகிறான் (நான்காவது பொய்); இப்பொழுது ஒரு ஒழிவுண்டாகிறது. கடைக்காரன் விற்கச் சம்மத மில்லாதவன் போல் குடையை எடுத்து அப்பால் வைக்கிறான். வாங்க இஷ்ட மில்லாதவன் போல், வாங்குவோம் அப்பாலெப்படி நடக்கிறான் (ஐந்தாவது பொய்); இவ்விருவர்களில் யார்தான் ஜாஸ்தியாகப் பிடிவாதம் பிடிக்கிறானென்பது கேள்வி. வாங்குவோன் ரொம்பதூரம் போய் மறுபடியும் ஒரு விலை கேட்கலாமென்று திரும்பிப் போக எத்தனப்படுகையில் தனக்கொரு கிராக்கி நிச்சயமாய் இல்லாமற் போய்விடுமென்று பயந்து, கடைக்காரன் "இரண்டு ரூபாய், இறண்டு ரூபாய்" என்று கூச்சல் போடுகிறான் மனதிற்குள் குதூகலமாயும், ஆனால், முகத்தில் உதாசீனக் குறிப்போடும் வாங்குவோன் திரும்பிவந்து (ஆறாவது பொய்), "ரூ. 1-12-0" எடுத்துக்கொடுக்கிறான்; "எடுத்துக்கொள்" என்று கடைக்காரன் சொல்லுகிறான். அப்பொழுது அவன் முன் விற்ற குடையைப் பார்க்கிலும் 4 அணா அதிகம் தனக்குக் கிடைக்கிறதென்று தனக்குள்ளே திருப்தியடைகிறான். கடைசியாக வியாபாரம் முடிவடைகிறது. இந்த வியாபாரம் செய்து முடிவதற்குள், வாங்குவோன் குறைந்தது ஆறு பொய் சொல்லியோ, நடத்தியோ இருக்கிறான். கடைக்காரன் எத்தனை பொய் சொல்லியிருக்கிறானென்று நாம் எண்ணிப் பார்க்க வில்லை. இந்த மாதிரி கடைத் தெருவில் இடை விடாமல் நடக்கிறது. இந்த மாதிரியாகவே,

ஆனல், வெவ்வேறு விதமாய், அநேக பெரிய கடைக ளிலும் நடக்கிறது; இவ்வாறு நடப்பதினல் வர்த்த கத்தி லொரு அவநம்பிக்கை விருத்தி யடையாம லிரு க்க முடியாது. இந்த மாதிரி விலை கூறி வியாபாரம் நடத்துகிற இடங்களி லெல்லாம் அயோக்கியத்தன மிருக்க எப்பொழுது மொரு ஹேது வுண்டாகிறது. இங்கிலாந்திலும், மீட்கப்படாத ஜங்கம நட்டுக் கடை கள், பழய சாமான்களை யேலத்தில் விற்கு மறைகள், குதிரை வியாபார முற்றங்கள் ஆகிய சில இடங்களில் இந்த விலை கூறும ஏற்பாடானது நடந்து வருகிறது. இப்படிப்பட்ட இடங்களெல்லாம், சாதாரணமாய் மோ சம்நடக்கும் இடங்களென்று பிரசித்தி பெற்றிருக்கின் றனவென்பது உண்மையான விஷயம். இந்தியாவில் கண்யமுள்ள வியாபாரிகள் அநேகர், "கரார்விலைக்கு" விற்கும் உத்தமமான ஏற்பாட்டை ஆரம்பித்திருக்கி றார்கள். இவ்வாறு கரார் விலைக்கு விற்கும் ஏற்பாடு ஒரு வாறு வேரூன்றி விட்டால் சிறிய வஞ்சனை செய்வதற் குண்டாகும் பெரிய தூண்டுதல் தொலைந்து, வர்த்த கத்தில் நம்பிக்கையானது இப்பொழுதிருப்பதை விடப் பலமாக உண்டாகும். இந்தத் தலைமுறையி லுள்ள வாலிபர்கள், ஒருவரை மற்றொருவரும் தங் களைத் தாங்களும் அதிகமாய் மதிக்கும்படி செய்யக் கூடிய மதசம்பந்தமான படிப்பும் சன்மார்க்கமான படிப்பும் இந்தியாவில் மிகவும் கொஞ்சமா யிருப்பது பரிதபிக்கத் தக்கதே ஆனல் எவ்வகையான படிப்பும், நேர்மையான நடத்தையைச் சுபாவமாகவே உண்டாக்

கும் என்று நம்பக் கூடியதா யிருப்பது, கொஞ்சம் ஆறுதலாக விருக்கிறது. எந்தத் தேசத்திலும் அயோக்கியமான மனிதர்க ளிருக்கிறார்கள். எந்தத் தேசத்திலும் ஏகோபித்த கூட்டு வியாபாரச் சங்கங்களிற் பணம் போட்டவர்கள் ஒவ்வொரு காலங்களில், ஏமாற்றப் படுவதால் மகாஜனங்களின் நம்பிக்கையானது, கொஞ்ச காலம் கலக்கப்படுகிறது. ஆனால் அது கொஞ்ச காலத்திற்குத்தான். அதற்குப் பிறகு, வட்டிக்கு விடுவோர்கள் எப்பொழுதும் ஒவ்வொரு மனிதனும் அயோக்கிய னென்று நினைக்கிறதில்லை.

தங்கள் குடும்பத்திற்காகப் பொருள் சம்பாதிக்க வேண்டுமென்ற தர்மமான ஒரு ஆசையால் மட்டுமல்லாமல், தங்கள் தேசத்தினுடைய வருவாய்களை அபிவிருத்தி செய்ய வேண்டுமென்ற சுதேசாபிமானமுள்ள ஒரு ஆசையாலும் தூண்டப்பட்டவர்களாய், இந்தியர்கள் ஒவ்வொரு பட்டணத்திலும், ஒவ்வொரு பெரிய கிராமத்திலும், தொழில் முயற்சியில் ஏகோபித்துச் சேருங் காலமே இந்தியாவிற்கு க்ஷேம காலமாயிருக்கும்.



# III—கைத்தொழிற் பொருட்காட்சிகள்.

## III



சுதேசாபிமான முள்ள தொழில் முயற்சியைப் பற்றிப் பேசுவதும் தொழில் முயற்சியில் ஏகோபித்தலைப் பற்றி கிராம வாசிகளுக்குப் பிரசங்கம் செய்வதுவெல்லாம் மிகவும் அழகாகவே யிருக்கிறது; ஆனால், கிராமவாசிகள் - நாட்டுப்புறப் பட்டண வாசிகளைப் பற்றிச் சொல்லவேண்டிய தில்லை - தொழில் முயற்சியென்றால் தங்களுக்குத் தலைமுறை தத்துவமாய் வந்திருக்கிற தொழிலைத் தவிர வேறெதுவா யிருக்குமென்று கூட அறியாமலிருக்கிறபடியால், இப்படிப் பேசுவதினாலும் பிரசங்கம் செய்வதினாலும் கொஞ்சங் கூட உபயோகமில்லை யென்று இதனை வாசிப்போர் ஒருக்கால் ஆட்சேபிக்கலாம். அவனுடைய ஊழியக்காரர்கள் அவனுடைய வயல்களை உழுது விரை விதைத்துக் கவலை மாடுகளைக் கேணியின் சரிவில்முன்னும்பின்னுமாக வோட்டித் தண்ணீர் பாய்ச்சித் தானியங்களை அறுத்துக் கொடுக்கிறார்கள்; அவனுடைய பெண்பிள்ளைகள் மாவரைக்கிறார்கள் ; அவனுடைய குழந்தைகள் காக்கைகளை ஓட்டுகின்றார்கள்; வாணியர் வீடுகளில் எண்ணெய் ஆட்டும் செக்குகள் கிரீச்சென்று கத்திக்கொண்டிருக்கின்றன ; கிராமத் தச்சர்கள் கதவு நிலைகளையும் மாட்டு வண்டிகளையும் செய்கிற முற்றத்தில் மரத்தை வெட்டுகிற சப்தமும் அறுக்கிற சப்தமும் கேட்கிறது;கிராமக் கொல்லன், திண்ணை

யில் உட்கார்ந்துகொண்டு மண்ணெண்ணெய்த் தகரங்களைச் செம்மட்டியால் அடித்துத் தகர விளக்குகளாகவும், தகர டப்பிகளாகவும், மற்றும், ஒவ்வொரு கிராமத்திற்கும் அவசியமான தகர உருப்படிகளாகவும் செய்யும் சப்தம் காதைச் செவிடாக்குகிறது. "தொழில் முயற்சியா!" "இதைவிடத் தொழில் முயற்சியென்னவேண்டும்? தொழில் முயற்சியின் அபிவிருத்திக்கு என்ன இடமிருக்கிறது?" என்று கிராம வாசி சொல்லுகிறான்.

இதை வாசிப்போர் தம்முடைய கிராம வாசிக்கு ஒரு நன்மை செய்ய விரும்பினால், அவர் தம்முடைய கிராமாந்தர சினேகிதனை அடுத்த கைத்தொழிற் பொருட் காட்சியைப் போய்ப் பார்க்கும்படி போதிக்கக் கடவர். நன்றாய் ஒழுங்கு படுத்தப் பட்ட பொருட் காட்சியானது கிராம வாசி ஒருவனுக்குக் கிடைக்கக் கூடிய மிகவும் நேர்த்தியான பொருட் பாடமாக விருக்கிறது; ஏனென்றால், ஒரு காட்சியில்-தன் கிராமத்தை விடப் பெரிதா யிராதவொரு சுற்றுக்குள் - தேசத்திலுள்ள ஏறக்குறைய வெல்லாத் தொழில் முயற்சிகளைப் பற்றிய அறிவானது அவனுக் கேற்படுகிறது; இந்திய நாஷேனல் காங்கிரஸ் என்னும் மகா சபை செய்திருக்கிற முக்கியமான வேலைகளில் ஒன்று, இராஜ்ஜிய தந்திர சம்பந்தமாய் அது கூடும் சபைகளுக் கோர் அம்சமாகக் கைத்தொழிற் பொருட் காட்சிகளை ஏற்படுத்தி யிரு

ப்பதே யாகும். அதனுடைய வருஷாந்தர இராஜ்ஜிய தந்திர சம்பந்த சபைக்குச் சார்பாய் வருஷாந்தரக் கைத்தொழிற் பொருட் காட்சி ஸ்திரமாய் ஏற்படுமென்பது, காங்கிரஸ் சபையின் எழுத்து மூலமா யில்லாத கோட்பாடுகளி லொன்று யிப்பொழுதிருக்கிறது. காங்கிரஸ் மகா சபை கூடும் இடத்தை அனுசரித்து இந்தியாவிற் பற்பல இடங்களில் ஏற்படுத்தப்படும் இந்தக் கண்காட்சிகளைப் போய்ப் பார்ப்பதினால், இந்தச் சந்தர்ப்பத்தை உபயோகப் படுத்திக்கொள்ளும் லட்சக் கணக்கான ஜனங்களுக்கு அறிவு விருத்தியாகவும், நோக்கங்கள் விசாலமாகவுங் கூடுமாகையால், கைத்தொழிற் பொருட் காட்சிகளைப் பற்றிச் சுருக்கமாய்த் தெரிந்துகொள்வது உபயோகமாயிருக்கும்.

இந்தியாவிற் கைத்தொழிற் பொருட் காட்சியைப் பற்றிய சரித்திரத்தைச் சுருக்கமாய்ச் சொல்லலாம். ஈஸ்டு இண்டியா கம்பெனி யாருடைய ஆளுகையின் கடைசியான சில வருஷங்களில், தேசத்தில் தொழில் முயற்சிக்கு ஆரம்ப காலமாயிருந்தது. இந்தியாவிலுள்ள ராஜாங்கத்திய மராமத்து வேலைகளுக்கு ஆதிகர்த்தாவா யிருந்த டால்ஹௌஸி பிரபுவானவர், கவர்னர் ஜெனரலா யிருந்தார். அவருடைய ஆளுகைக் காலத்தில் எண்ணிறந்த தொழில் முயற்சிக்குரிய தந்திரங்கள் காரியசித்திக்குக் கொண்டுவரப்பட்டன. 1853-ம் வருஷத்தில் பம்பாயிலிருந்து கடற் கரைக்குச்

சில மயில்களுக் கிப்பாலிருக்கும் டாணுவுக்குப் போகும் இந்தியாவின் பிரதம இருப்புப் பாதை திறக்கப்பட்டது. 1854-ம் வருஷத்தில் இராஜாங்கத்திய மராமத்திலாகா ஏற்படுத்தப்பட்டு, அதே வருஷத்தில் மகத்தான கங்கைக் கால்வாயில் படகுகள் முதல் முதல் பிரவேசித்தன. 1855-ம் வருஷத்தில் சென்னப்பட்டணத்திலும் கல்கத்தாவிலு முள்ள இருப்புப் பாதைகளில் தொடர்வண்டிகள் ஓட ஆரம்பித்தன. அந்த வருஷத்திலேயே-தொழில் முயற்சியின் அமைதியைச் சமீப காலத்தில் நிறை குலைக்கும் பயங்கரமான கலகத்தைப் பற்றி யாதொரு எண்ணமு மில்லாதிருந்த காலத்தில் - இராஜதானித் தலை நகரங்களில், கைத்தொழில் பொருட் காட்சிகள் நடந்தேறின. அவைகளை, ஒவ்வொரு இராஜதானியின் எல்லைப் பாகங்களிலும், அங்கங்கே காரிய விசாரணை சபைகள் ஏற்படுத்தி, உத்தமமான விதமாய் இராஜாங்கத்தார், ஒழுங்கு படுத்தினார்கள். எண்ணிறந்த பேர்கள் காட்சிப் பொருள்களை அனுப்பினார்கள். ஒவ்வொரு வகையான காட்சிப் பொருள்களுக்கும் சமர்த்தரான பஞ்சாயத்துகளை நியமித்தார்கள். அவர்களுடைய வேலையானது கீர்த்தி முத்திரைகள் கொடுப்பது மட்டுமல்லாமல் ஒவ்வொரு வகுப்புகளைப் பற்றியும் அறிக்கைப் பத்திரிகைகள் எழுதுவதாகவு மிருந்தது. இந்த அறிக்கைப் பத்திரிகைகளை இன்றைக்கும் காணலாம்; இன்றைக்கும்-50 வருஷங்களாயிருந்தும் - அவற்றிற் சில, படிப்பவர்க்கு மிகுந்த அறிவைக் கொடுக்கத் தக்கவை

களா யிருக்கின்றன. ஒரு கைத்தொழிற் பொருட காட்சியானது, அந்தந்தக் காலத்தின் தொழில் முயற்சியின் சித்திரப் படமானது, சிறிதாயும், ஆனால், சரியாயும், பிரதிபலிக்கிற கண்ணாடி யென்றும், ஒரு பொருட் காட்சியின் அறிக்கைப் பத்திரிகையானது அந்தக் கண்ணாடியிற் பதிந்திருக்கும் உருவத்தை வெளிப்படுத்தும் "பொட்டகிராப்" (ஒளிப் படம்) என்றும் சொல்லலாம். அந்தப் பிராசீன பொருட் காட்சிகளைப் பற்றி அதிகாரிகளால் தயாரிக்கப்பட்ட அறிக்கைப் பத்திரிகைகளால், 50 வருஷங்களுக்கு முன்னால், இந்தியாவில், தொழில் முயற்சி யிருந்தபடி, அதை யறியத் தக்க வுட்பார்வை நமக்குண்டாகிறது. அவைகளால் குறிப்பிடப்படுங் கருத்தென்ன வென்றால், இந்தியாவில் இந்த நாளைய ஜனங்களுக்கு, பொதுவாய் 50 வருஷங்களுக்கு முன்னிருந்த தங்கள் முன்னோர்களை விட, உபயோகமுள்ள தொழில்களில் ஜாஸ்தியாகப் பழக்க மில்லாம லிருந்தாலும், இப்பொழுது, மேற்சொல்லிய கைத்தொழில்களில் பிரத்தியேக நபர்களுக்கு ஞானமானது முன்னிருந்ததைவிட ஜாஸ்தியாகவே யிருக்கிறது. அந்தப் பிராசீன கைத்தொழிற் பொருட் காட்சிகளுக்கு யாதொரு இந்தியனும், நாட்டுப்புறமான பித்தளைப் பாத்திரங்களையும், மண் பாத்திரங்களையும், கையால் நெய்யப்பட்ட அலங்காரமான வஸ்திரங்களையும், இவை போன்ற மற்றவைகளையும் தவிர வேறு உபயோகமான தொழிலைச் சேர்ந்த காட்சிப் பொருள்களை அனுப்பியதாகத் தெரிய

வில்லை. மேலே சொல்லிய காட்சிப் பொருள்கள் தம் தம் வகையில் அழகானவைகளா யிருந்தாலும், அவை களில் வேற்றுமையில்லாமல் ஒரே ரீதியாக விருந் தன. இதற்கு மகத்தான எதிரிடையாக விருந்தது; சென்னபட்டணத்தில், சமீபகாலத்தில், 1903-4 இந்த வருஷத்தில், கூடிய காங்கிரஸ் சபையைச் சேர்ந்த பொருட் காட்சி. இந்தப் பொருட் காட்சிக்கு; இந் திய சுதேசிகள், அத்தியந்தம் நவீன ரீதியான எண் ணிறந்த காட்சிப் பொருள்களை அனுப்பினார்கள் அவைகளில், அப்ரகத் தகட்டால் மூடப்பட்டனவும் பருவானவும் திருடர் உடைக்க முடியாதனவுமான பெட்டிகள் முதல் உள்ளே பட்டுக் கொடுத்து விக் வைத்த அழகான நகைப் பெட்டிகள் ஈறாகவும், ராஜாங் கத்துக்குரிய சிறப்பான வண்டிகள் முதல் விளையாட்டு மாட்டு வண்டிகள் ஈறாகவும், விநோதமான வாசனை டட் கள் முதல் பட்டணங்களிலுள்ள சாக்கடை நாற்றப் போக்கிகள் ஈறாகவும், வெண்ணெய்க் குடங்கள் முதல் ஊதாக் கரும்பு மசிக் கூடுகள் ஈறாகவும் இருந்தன 1855-ம் வருஷத்தில்,சென்னப்பட்டணத்தில் ஏற்படுத் திய பொருட் காட்சியில், பெரும்பாலும் சென்னப் பட்டணம் இருப்புப் பாதை இஞ்சினீர்களாய் இருந்த யாந்திரிக வேலைகளைப் பற்றிய பஞ்சாயத்தார்கள் தங் கள் அறிக்கைப் பத்திரிகையில், சுதேசிகள் யாதொரு விதமான யாந்திரிகப் பொருட்களையும் காட்சிக்குக் கொண்டுவராததைப் பற்றி, ஒரு விதமான சமாதா னம் எழுதவேண்டியது அவசிய மென்று உணர்ந்தார்

கள். இந்திய சுதேசிகள் ஏற்கனவே உபயோகித்து வந்ததை விட மேலான ஆயுதங்களுக்குத் தேவையானது அதுவரையி லுண்டாக வில்லை யென்றும் தப்பெண்ணங்களும், மற்ற இடஞ்சல்களும், இடையிலுண்டாயின வென்றும் அவர்கள் சொன்னார்கள். ஆனால்

"நவீனக் கருவிகளை வழக்கத்திற் கொண்டுவருவதற் கிதுவரையி லிடஞ்சலா யிருந்த தடைகளை, இப்பொழுது, கொஞ்சம் கொஞ்சமாய், படிப்பும், பிரத்தியேக நபருடைய முயற்சியும், போக்கடிக்கும்."

என்று தாங்கள் நம்பியதை வெளியிட்டார்கள்.

1855-ம் வருஷத்திய இந்தப் பொருட் காட்சிகள், உத்தமமான காரியசித்திகளைப் பெற்றிருந்தனவென்று வெளிப்படையாகத் தெரிகிறது. ஏனென்றால், வட பாகத்தில் படைச் சேவகர்களுடைய பெரிய கலக முண்டானதற்கு மூன்று மாதம் முன்னால் 1857-ம் வருஷத்தில், சென்னப்பட்டணத்தில் ஏற்பட்ட மற்றொரு பொருட் காட்சியில், யந்திரக் காட்சியானது, "மிகவும் சிறப்பான தோற்றத்தை" பெற்றிருந்த தென்று பஞ்சாயத்தார் கண்டார்கள். அவர்கள் பின் வருமாறு எழுதினார்கள்.

"குறைந்தது, சென்னப்பட்டணத்திலாயினும், மற்றும் ஐரோப்பியருடைய தொழிலும் முயற்சியுமுள்ள விடங்களுக்குச் சமீபங்களிலாயினும், சுதேசிகளுடைய தப்பான வெண்ணங்கள், ஐரோப்பியர்களுடைய சாமர்த்தியத்தினாலும் சாஸ்திரத்தினாலும் ஏற்பட்ட மேலான யந்திரங்களாலும், சூத்திரங்களாலும் மறைந்து வருகின்றன. இதை, ஐரோப்பியரு

டைய வேலைத் தரத்திற்குப் பிரதியாக முயற்சிக்கப்பட்டு, ஒருவாறு பலித்திருப்பதாய், சுதேசிகள் பொருட் காட்சிக்கு அனுப்பியிருந்த காட்சிப் பொருட்களே, ருஜூப் படுத்துகின் றன. ஆனால் அப்படிப் பலிதமாக்க உபயோகிக்கப்பட்ட உபாயங்களும், உபயோகிக்கப் பட்ட முறைகளும், அநேக விதங்களிற், குறைவாயும், குறைவாகக் காணப்பட்டதாயு மிருந்தன. ஆதரணை யேற்பட்டு, ஐரோப்பிய யந்திரங்களை மிகவும் சாதாரணமாய் உபயோகத்துக்குக் கொண்டு வந் தால், (கைத்தொழில் முயற்சிக்குரிய யந்திரங்களும் ஆயு தங்களுமாகிய) இந்த மிகவும் முக்கியமான பிரிவான யந்திர முயற்சிகள் உறுதியாய் அபிவிருத்தி யாகும்படி இத்தேசத் திய சுதேசிகள், இன்னும் சில வருஷங்களுக்குள்ளே, ஒரு மகத்தான அபிவிருத்தியை யுண்டாக்குவார்கள் என்பதில் யாதொரு சந்தேகமுமில்லை''.

அந்தப் பழைய பஞ்சாயத்தார்களெல்லாரும் காலஞ் சென்றிருக்கலாம். அவர்களில் ஒருவராயினும் 1903—4 இந்த வருஷத்தில் சென்னப்பட்டணத்தில் ஏற்பட்ட பொருட் காட்சியை வந்துபார்க்கக்கூடியதா யிருந்திருக்குமானால் பெரிய பட்டணங்களிலாயினும், தங்களுடைய உத்தேசங்கள் நிறைவேற ஆரம்பித்து விட்டன வென்று தெரிந்துகொண்டிருப்பார்கள். இந் தியாவிற் பெரிய பட்டணங்களில் தற்காலம் உண் டாயிருக்கும் அபிவிருத்தியின் மிகுதியான பாகம் அந் தப் பிராசீன பொருட் காட்சிகளின் பலத்தினு லுண் டாயிற்றென்பதில், உண்மையாகவே, யாதொரு சந் தேகமு மில்லை. இந்தப் பழைய காலத்தியக் கைத் தொழிற் பொருட் காட்சிகளைத் தவிர எண்ணிறந்த

இடங்களில் விவசாயப் பொருட் காட்சிகளும் உண்டாயிருந்தன. விவசாயப் பொருட் காட்சிகள், கொஞ்ச காலம் வரையில், அடிக்கடி, ஏற்பட்டு வந்தன. ஆனால் அவைகள் அதிகச் செலவு பிடித்ததுமன்றி, நியாயாதிகாரிகளுக்கு மிகுந்த தொந்தரவுமுண்டாக்கின வென்பதிற் சந்தேகமில்லை. டால்ஹௌஸி பிரபுவின் ஊக்கமானது அவருக்குப் பின்னால்வந்த இராஜப் பிரதிநிதிகளிடத்திற்பதியவில்லை,—ஆயினும்அவர்களிற் சிலர், அபிவிருத்திக்கேற்ற வேலைகளைச்செய்தார்கள்,—ஆகவே, பொருட்காட்சிகள், வரவர அரிதாய்ப் போய்விட்டன; சென்னப்பட்டணத்தில், கடைசியாக விவசாயப்பொருட்காட்சி ஏற்பட்டு இப்பொழுது 20 வருஷங்கள் ஆய்விட்டன. லங்காஷயரில், பஞ்சுத்தொழில் திடீரென்று குறைந்த நிமித்தம், பம்பாயில், பஞ்சு முயற்சிகள் திடீரென்று அதிகரித்து, அதை அனுசரித்து மற்ற முயற்சிகளும் அபிவிருத்தியான 1860-ம் ஆண்டு வாக்கில் ஒரு மகத்தான தேசாந்தரப் பொருட் காட்சி ஏற்படுத்த, பம்பாயில் உற்சாகத்தோடு கருதினார்கள். ஆனால் வர்த்தகத்தில் அபிவிருத்தியைப் பற்றி ஜாஸ்தியாக நினைக்கப்பட்டதனால், ஒரு அதைப்புண்டாயிற்று. ஒரு பார்ஸீ தனவானான மகா-ள-ள-ஸ்ரீ பைராம்ஜி காமா வென்பவருக்கு 30 லக்ஷம் பவுன் முழுகிப்போய் விட்டதாக அறிக்கை யிடப்பட்டது. மற்றவர்களும் முழுகிப்போய் அளவற்ற துன்பமுண்டானபடியால், உத்தேசிக்கப் பட்ட பொருட் காட்சியானது, நிறைவேறாமல் விடப்பட்டது. கல்கத்தாவில்

1884-ம் வருஷத்தில் ஏற்பட்ட தேசாந்தரப் பொருட் காட்சியானது, மிகவும் வாய்ப்பானதா யிருந்தது. 1903-ம் வருஷத்தில் டில்லியில் நடந்த தர்பாரில் பொருட் காட்சியும் நடத்தப்பட்டது. இந்தப் பொருட் காட்சிகளெல்லாம், சந்தேகமில்லாமல் மிகுந்த நன்மைக்காகவே ஆயின. எல்லாவற்றையும் விட மிகவும் பலிதமானவை காங்கிரஸ் மகா சபையைச் சேர்ந்த கைத்தொழிற் பொருட் காட்சிகளேயாம். ஏனென்றால், அவைகள் சுதேசீயமான ஏற்பாடுகளா யிருப்பதாலும், அவைகளுக்குப் பொய்யான உத்தியோக ஜன்யமான களை யிருப்பதுபோலக் காணப்படும்படி சர்க்கார் உத்தியோகஸ்தர்களுடைய சூத்திரதாரத்துவ மில்லாம லிருப்பதாலும், அவைகள் இந்தியாவில்—விசேஷித்து இந்தியர்களால்—செய்யக்கூடியவைகளின் உண்மையான காட்சிகளா யிருக்கின்றன இந்தப் பிற்காலத்தியப் பொருட் காட்சிகளிற் பிரதம காட்சியானது 1901-ம் வருஷம் டிசம்பர்மீ த்தில், கல்கத்தாவில், திறக்கப்பட்டது; இரண்டாவது, அகமதாபாத் பட்டணத்தில் 1902-ம் வருஷம் டிசம்பர் மாசத்திலும், மூன்றாவது சென்னப்பட்டணத்தில் 1903-ம் வருஷம் டிசம்பர் மாசத்திலும் திறக்கப்பட்டன கடைசிப் பொருட் காட்சியானது மூன்றிலும் முதன்மையாக விருந்த விஷயம், அபிவிருத்திக்கு ஓர் குறிப்பாயிற்று. காங்கிரஸ் மகா சபையைச் சேர்ந்த பொருட் காட்சிகள் இன்னமும்வருஷத்திற்கு வருஷமதிக சிறப்பாக நடந்தேறி, இந்தியாவின் அபிவிருத்திக்கு வேண்

டிய மகத்தான காரியங்களைச் செய்யுமென்று நாம் நம்பலாம்.

பொருட் காட்சிகளைப் பற்றி விசாரிக்கையில் (1) ஒழுங்குபடுத்துவோர்கள் (2) காட்டுவோர்கள் (3) பார்ப்போர்கள் ஆகிய இவர்கள் விஷயமாகப்பொருட் காட்சிகளை ஆராய்ந்து பார்க்கலாம்.

ஒழுங்குபடுத்துவோர்களைப் பற்றி, ஒரு பொருட் காட்சியை ஏற்படுத்தும்படி தீர்மானம் செய்யப்பட்டால் அதற்குவேண்டிய எத்தனங்களைக் கூடிய வரையில் நியாயமானபடி முன்னாலேயே, செய்ய ஆரம்பிக்கவேண்டுமென்று நாம் சொல்லலாம். ஒரு பொருட் காட்சியைப் பற்றி மேல்விசாரணை செய்தவர்களுக்கே, அது மட்டில்லாத வேலை கொள்ளுமென்றும், காட்சிப் பொருள்க ளடங்கிய மூட்டைகள் கடைசி நேரம் வரையில் வந்துகொண்டிருந்தால், ஒழுங்கீனமாய்ப் போகக் கூடுமென்றும், தெரியவரும். ஒழுங்கீனமான காட்சியைப் பார்ப்போர்களுக்கு அதினுடைய பிரியமும் மதிப்பும் மிகவும் குறைந்து போகும். பொருட் காட்சிக்காகக் குறிப்பிடப்பட்டிருக்கிற தினம் சமீபிக்கிற வரையில் வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யாமல் தூங்கும்படி விட்டுவிட்டால், சம்பவிப்பது குழப்பமே தவிர வேறொன்றுமல்ல. காட்சிப் பொருட்களை அனுப்பும் நாட்டு வேலைக்காரர்களோடு, ஏறக்குறைய நேரே சம்பந்திக்கிற ஜில்லா சபையாராகிய, ஜில்லாவிலிருந்து காட்சிப்பொருட்களைச்சேகரித்தனுப்புவோர்களுக்கு, முன்னடியே வேலைக்காரம்பம் செய்ய வேண்

டிய அவசியத்தைப் பற்றி, முக்கியமாய் வற்புறுத்திச் சொல்ல வேண்டும். பொருட் காட்சி ஏற்படப்போகிற தென்றும், அதில் அவர்கள் சம்பந்தப்பட வேண்டு மென்றும், நாட்டு வேலைக்காரர்களுக்குச் சொல்லி, அவர்களை எழுப்புவதற்கு, விசேஷ காலதாமத மாகிறது. ஆகையால் அவர்களைச் சந்திப்பதில் கொஞ்ச மேனும் தாமதம் ஏற்பட்டால், அநேக காட்சிப் பொருட்கள் கிடைக்காமற் போகும். ஏனென்றால், தங்களுடைய சாமர்த்தியத்தைக் காட்டும்படி தங்களுக்குச் சந்தர்ப்பம் ஏற்பட்டிருப்பதைக் கடைசியாக உற்றறிந்து, வேலைக்காரர்கள் காட்சிப் பொருட்களை அவசரமாக வேலை செய்யக் கடைசி மாதத்தில் ஆரம்பித்து, என்ன பிரயாசைப்பட்டும், குறித்த காலத்திற்குள் வேலை முடியாம லிருப்பதைத்தான் காண்பார்கள். 1851-ம் வருஷத்தில், லண்டன் நகரத்தில் நடத்திய "மகத்தான பொருட் காட்சியைப்" பற்றி, 1849-ம் வருஷத்தில் அதைச் செய்து முடிக்கும் விதத்தை நிச்சயிக்கப்பட்டது. 1850-ம் வருஷம் ஜனவரி மாதம் 3-ம் தேதியில் கையொப்ப ஜாப்தாக்கள் வெளி வந்தன. பொருட் காட்சியானது 1851-ம் வருஷம் மே மாதத்தில், அதாவது, பிரதம ஏற்பாடுகளைச் செய்த இரண்டு வருஷங்களுக்குப் பிறகும், கையொப்ப ஜாப்தாக்கள் வெளிவந்த 16 மாதங்களுக்குப் பிறகும் திறக்கப்பட்டது. மேலும், அந்தப் பொருட் காட்சியானது ஆறு மாதம் திறந்து வைக்கப்பட்டிருந்தது. ஆகையால், அதைத் திறந்த சில தினங்களுக்குள், காட்

சிப் பொருட்கள் முற்றிலும் குறைபற்றவைகளாயிரா விட்டாலும், குறைவாயிருந்ததைச் சீர்ப்படுத்தத் தகுந்த சாவகாச மிருந்தது. இந்தியாவிற் சில தினங்களே திறந்து வைத்திருக்கும் பொருட் காட்சி விஷயத்திலோ வென்றால், முதல் தினத்திலேயே எல்லாப் பொருட்களும் ஒழுங்காய் அமைச்சுப்படவேண்டும். இல்லாவிட்டால் அந்தப் பொருட் காட்சியானது கெட்டுப் போகும். ஆகையால் எவ்வளவு சீக்கிரமாக எத்தனங்கள் ஆரம்பிக்கப் படுகின்றனவோ, அவ்வளவு நன்றாகப் பொருட் காட்சியானது இருக்கும். பார்ப்பவர்களுக்குப் பார்த்துத் தெரிந்துகொள்வது இலகுவாக விருக்கும்படியாய், எல்லாவற்றையும் அமைக்க வேண்டியதை மற்றோர் விஷயமாகச் சொல்லலாம். "நெய்யப்பட்ட வஸ்திர வகைகள்", "யந்திரங்கள்", "வீட்டுத் தட்டு முட்டுசாமான்கள்"—என்று இவ்வாறிருக்குந் தொகுதிகளுக்குத் தக்கபடி வெவ்வேறு தொகுதியான காட்சிப் பொருட்களைப் பார்க்கப்போகும் வழியைச் சுட்டிக் காட்டும்படி,—ஆங்கிலேய பாஷையிலும், தேச பாஷையிலும்—பெரிய எழுத்துக்களால் அச்சிடப்பட்ட குறிப்புப் படங்கள் அமைத்திருக்க வேண்டும். ஜாப்தாவில் சங்கதிகள் தெரியும்படியிருப்பதுடன், இடைக்கிடையே மனங் கவரும்படியான குறிப்புகள் அடங்கி யிருக்கவேண்டுமே தவிர, மிகவும் விரிவாக விருக்கக் கூடாது. 1903-04 இந்தவருஷத்தில், சென்னப்பட்டணத்தில் நடத்தியபொருட் காட்சியில்-இது பெரும்பாலும் நன்றாய் ஒழுங்குபடுத்

தப்பட்ட காட்சி யென்று நாம் குறிப்பாய்ச் சொல்லலாம்—ஜனங்களிடம் விற்கப்பட்ட ஜாப்தாவில் ஒவ்வொரு பிரத்தியேகக் காட்சிப் பொருளின் பெயரையும் காண வெத்தனித்ததாக விருந்தது. உதாரணமாக, அடியிற்கண்டபடி 27-வது பக்கத்தின் தலைப்பில் சில வரிகள் இருந்தன.

| ரிஜிஸ்தர் நம்பர். | அனுப்புவோரின் பெயர். | பொருட்களின் விபரம். | தொடர்ச்சியான நம்பர். |
|---|---|---|---|
| 467 | இந்தியன் ஸ்டோர்ஸ், லிமிடெட், கல்கத்தா. | 1 ஜோடிபார் கோசங்கள். | 2834 |
| 467 | இந்தியன் ஸ்டோர்ஸ், லிமிடெட், கல்கத்தா. | வேர்வையுண்டாக்கி (கம்பளி). | 2835 |
| 467 | இந்தியன் ஸ்டோர்ஸ், லிமிடெட், கல்கத்தா. | 6 உள்ளங்கி (கம்பளி). | 2837 |
| 467 | இந்தியன் ஸ்டோர்ஸ், லிமிடெட், கல்கத்தா. | 3 பாலரகிளவாகுல லாய்கள் (கம்பளி). | 2838 |
| 467 | இந்தியன் ஸ்டோர்ஸ், லிமிடெட், கல்கத்தா. | இரண்டுஜோடி கம்பளி ஹஸ்த கோசங்கள். | 2839 |

இந்த மாதிரியான விஷயம் இந்த ஒரே வர்த்தகச் சங்கத்தின் காட்சிப் பொருட்களைப் பற்றி மூன்று பக்கங்களில் நிறைந்திருந்தது. பொதுவாய், நெய்யப் பட்ட வஸ்திர வகைகள் விஷயமாய், வாஸ்தவத்தில், டஜன் கணக்கான பக்கங்களில் நிறைய விருந்தது. அது பெரும்பாலும் ஜவளிக் கடைக்காரனுடைய விலை ஜாப்தா அல்லது ஏலம் நடத்துவோனுடைய ஏல ஜாப்தாவைப் போல விருந்ததே தவிர, உசிதமாய்ச் சங்கதி தெரிவிக்கும் ஜாப்தாவாக இருக்க வில்லை. இந்த வர்த்தகச் சங்கத்தின் காட்சிப் பொருட்கள் மூன்று பக்கங்களைக் கவராமல் ஒரு வரியில்

அடியிற் கண்டபடி அடங்கியிருந்தால், அந்த ஜாப்தாவானது மிகவும் அனுகூலமாகவே இருந்திருக்குமென்பது நிச்சயம்.

| ரிஜிஸ்தர் நம்பர். | அனுப்புவோரின் பெயர். | பொருட்களின் விபரம். | தொடர்ச்சியான நம்பர். |
|---|---|---|---|
| 467 | இந்தியன் ஸ்டோர்ஸ், லிமிடெட், கல்கத்தா. | கட்டிக்கொள்ளும் வஸ்திரம், வகையரா. | 2834-4111 |

இந்த மாதிரி சுருக்கிச்சொல்வதினால் பாதகோசங்களையும், ஹஸ்த கோசங்களையும் போலப் பார்த்தவுடன் தெரிந்து கொள்ளக்கூடாத பொருட்களைப் பற்றி, விவரமான குறிப்புகளைப் பதிய ஜாஸ்தியாய் இடம் கொடுக்கும். ஒவ்வொரு பிரத்தியேகப் பொருளுக்கும் அதனுடைய நம்பரைக் கண்ட சீட்டு ஒட்டப்பட்டிருக்குமல்லவா; அந்தச் சீட்டில் சாதாரணமான எழுத்தினால் ஏதாயினும் உபயோகமுள்ள விவரத்தை வரைந்து வைக்கலாம். சிரத்தையுடன் பார்ப்பவர், தம்மிடத்தி லிருக்கிற ஜாப்தாவைப் பக்கம் பக்கமாகத்திருப்பிப்பார்த்து சிரமப்படாமல், அந்தச் சீட்டை வாசித்துப் பார்த்து உபயோகமானதைத் தெரிந்து கொள்ளலாம். விற்பனை விஷயத்திற்காக ஒவ்வொரு பொருளைப் பற்றியும் உத்தியோகஸ்தரின் ஜாப்தா ஒன்று இருக்குமென்பது நிச்சயம். ஜனங்களுக்காக உத்தேசிக்கப்பட்ட ஜாப்தாவானது அந்த உத்தியோகஸ்தரின் ஜாப்தாவுக்குச் சரியான நகலா யிருக்கவேண்டிய தவசியமில்லை. ஒழுங்குபடுத்துவோர்கள் கவனிக்க வேண்டிய மற்றொரு விஷயம் என்னவென்றால், தங்களுடைய அங்கிகாரத்திற்கு அனு

ப்பப்பட்ட—செய்பாக மில்லாத கைவேலையின் மாதி
ரிகள், மதியீனமான கற்பனைகள், தொழில் ஞான
மில்லாமல் எழுதப்பட்ட சித்திரங்கள் ஆகிய- உபயோ
கமில்லாத பொருட்களுக்கிடந் தேடத் தாங்கள் கட
மைபட் டிருப்பதாகப் பொருட் காட்சியின் காரிய
விசாரணை சபையார் நினைக்கக் கூடாது. பொருட்
காட்சியில் காண்பிக்கப்படுகிற பொருட்கள் ஜனங்க
ளுடைய மனதைக் கவரும்படியான மாதிரிகளாயிருக்
கவேண்டும். கீழ்த்தரமான பொருட்கள், பொருட்
காட்சியினால் அடையக் கூடிய படிப்பனையின் பிரயோ
ஜனத்தைக் கெடுத்து விடும். இந்தியாவில், உண்மை
யிலேயே, இன்னமும் பொருட் காட்சிகளானவை,
ஜனங்களைப் பற்றிக்கொள்ள வில்லை யென்று சொல்லு
கிறது போல் இருப்பதாலும், நாட்டுப்புறக் காரிய வி
சாரணை சபையாரும், நாட்டுப் புறத்திலிருந்து காட்
சிக்குப் பொருட்க ளனுப்புவோர்களும், பொருட்களை
யனுப்பும்படி தூண்டப்பட வேண்டியதா யிருப்பதா
லும், இனிமேல் காட்சிக்குப் பொருளனுப்புவோர்க
ளாகக்கூடிய வர்கம் பேர்கள் அதைரியமடைந்து
பொருட் காட்சிகள் பாழாய்ப் போய்விடுமென்று ப
யந்து, தாங்கள் உண்மையில் அங்கீகரிப்பவைகளைவிட
மற்றும் அநேகங்களைக் காரிய விசாரணை சபை
யார் அங்கீகரிக்க வேண்டிய தவசியமாயிருக்கிறது.
மேலும், ஒரு கைத்தொழிற் பொருட் காட்சியில்
காரிய விசாரணை சபையார், "ஒவ்வொரு மனிதனுக்கும்
தன்னுடைய யோக்கியதையைக் காட்டுவதற்கு ஒரு

சந்தர்ப்பத்தைக் கொடுக்க வேண்டும்'' என்று ஒருவாறு இஷ்டமுள்ளவர்களா யிருப்பார்கள். ஆனால், கைத்தொழில் வேலைக்காரர்களும், தங்களுடைய பொருட்களை அங்கிகரிக்கும்படி செய்துகொள்வது தங்களுக்கொரு கீர்த்தி யென்றும்,மேன்மையான தென்பதற்கு ஒரு அளவு இருக்கிற தென்றும், அந்த அளவுக்குக் கீழ்ப்பட்டால் கீர்த்தி தங்களுக்குண்டாக மாட்டா தென்றும் உற்றறியும்படி செய்ய வேண்டும். மற்றொரு விஷயமாய் யோஜித்தால்—ஒரு பொருட் காட்சியின் உத்தேச மென்ன வென்றால், கூடிய வரையில் ஜாஸ்தி யானபேர்கள் வந்துபார்த்துத்தெரிந்துகொள்ளவேண்டு மென்பதே. அவர்கள் வாசற்படியிற் செலுத்தும் பணத்தைப் பற்றிச் சொல்ல வேண்டிய தில்லை. பார்ப்பவர்களிற் பேர்பாதிக்கு மேல் ஜாஸ்தியானவர்களை, அறிவைப் புகட்டும் பொருட்களை விட விநோதமான பொருட்களே, இழுக்கின்றன வென்பதைக் காரிய விசாரணை சபையார் தம் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும். அடைப்பு அடைக்கப்பட்ட இடத்தைச் சுற்றிலும் கொடிகளை நாட்டியிருப்பதும், அந்த ஸ்தலத்தில் மகிழ்ச்சியாய்ப் பொழுது போக்குக்கு வேண்டியவைக ளிருப்பதும் பருத்திக் கொட்டை நீக்கும் யந்திரம் அல்லது பிரசித்தமான தண்ணீர் இறைக்கும் யந்திரத்திற்கு யாதொரு சம்பந்த முமில்லை. ஆனால் ஆபரன் கிராமத்து மாதா கோவிலில்,

''பரிகாசம் செய்ய வந்த மூடர்கள் பஜனை செய்யத் தொடங்கியது''.

போலவே ஒரு கைத்தொழிற் பொருட் காட்சியி

லும் தமாஷ் பார்க்கவந்த மூடர்கள் முடிவில் யந்திரங்களை ஆராயும்படி நேரலாம். மற்றொரு விஷயமாக யோஜித்தால், ஒரு புறத்தில், வித்தியா விஷயமாய் உபயோக மில்லாத பொருட்களை அங்கீகரிப்பது விரும்பத்தக்க தல்ல வென்றாலும், விசேஷமாய் எச்சரிக்கையாக விருக்க வேண்டிய விலைபெற்ற பொருட்களை அங்கீகரிப்பது மற்றொரு புறத்தில் விரும்பத்தக்க தல்லாததா யிருக்கிறது என்று சொல்லலாம். ஏனென்றால் விலைபெற்ற பொருட்கள், காட்சிக்காக ஏற்படுத்தி யிருக்கும் கட்டடத்தில் ஒரு அபாயகரமான இடத்தில் வைக்கப்பட்டிருக்கின்றன. ஒரு தினத்தில் அந்தப் பொருட் காட்சியைப் பார்க்க வரும் ஆயிரக் கணக்கான ஜனங்களில் வெகுபேர்கள் அயோக்கியர்களா யிருப்பார்கள். பகற் பொழுதில்நேர்த்தியான ஆபரணங்கள்பரப்பி வைத்திருப்பதைப் பார்க்கும் ஒரு அயோக்கிய மனிதன் இராத்திரியில் அவைகளை அபகரிப்பான். கட்டடம் அமைப்பது ஒரு மகத்தான உத்தரவாதமுள்ள காரியமா யிருப்பதால், முற்றிலும் மழைக்கு உறுதியாக விருக்கும்படித் தகுந்த என்ஜினீரிடத்தில் அந்த வேலையை ஒப்புவிக்க வேண்டு மென்று நாம் சொல்வது யுக்தமா யிருக்கும். திடீரென்று, எதிர்பாராதிருக்கும் பொழுது மழை தாரை தாரையாகக் கோடைக்கு உறுதியாகப் போட்டிருக்கும் மேன் கூரையைத் துளைத்துக் கொண்டு பரப்பி வைத்திருக்கும் விலையுயர்ந்த மஸ்லின்கள், சித்திரப் பட்டாடைகள், அழகான ஜோடிப்புகள் முதலான

வைகளின் பேரில் கொட்டி, அந்தக் காட்சியானது சேற்றிற் புரட்டிய வஸ்திர வகைகளாயும் ஊறவைத்த கட்டைகளாயும் துருப்பிடித்த உலோகங்களாயும் உருமாறிப்போய் முடிவடைந்தால் காட்சிக்குப் பொருட்கள் அனுப்பினோர்கள் மிகுந்த கூக்குர லிடுவது மல்லாமல்— திருநாள் உடைகளை உடுத்திக்கொண்டு பார்க்க வந்திருப்பவர்களை நாம் மறந்து போகக்கூடாது-பொருட் காட்சி அபிவிருத்தியாவதும் மிகவும் தாமதமாய் விடும். எப்படியாயினும், மழையினாற் கெடுதல் உண்டாகாமல் முற்றிலும் தடுத்தி ரட்சிக்க வேண்டியது மல்லாமல் அக்கினி பாதையுண்டாகாமல் தடுத்திரட்சிக்கக், கூடுமான வரையில், நல்ல ஏற்பாடுகளும் செய்து வைத்திருக்க வேண்டும். ஒழுங்குபடுத்துவோர்களுக்குச் சொல்ல வேண்டிய கடைசி வார்த்தை— அவர்கள் உண்மையில் ஒழுங்குபடுத்தப்பட்டவொரு சபையாக விருக்க வேண்டும். பொதுவான சபையில் உங்களுக்கு இஷ்டமானபடி ஜாஸ்தியாக, எவ்வளவு பேர்களானாலு மிருக்கலாம். ஏனென்றால் அந்தச் சபையி லிருப்பவர்க ளிடத்தில் விசேஷித்த கையொப்பங்கள் எதிர்பார்க்கப்பட் டிருக்கிறது! ஆனால், காரிய நிர்வாஹ சபையில் நல்ல வேலை செய்ய தகுதியானபடி குறைந்த சங்கியையான பேர்களே இருக்க வேண்டும். காரிய நிர்வாஹ சபையிலிருப்பவர்கள்கூட தம்மிஷ்டப்படி சொல்லும் அதிகாரங்களைத் தம்மில் ஒருவரிடம் ஒப்புவித்து, அவர் சொல்வதைச் சந்தேக மில்லாமல் நிறைவேற்ற மேற்போட்டுக்

கொள்ள வேண்டும். ஏனென்றால், முழுவதையும் ஓ
ரே மனதினால் உருவாக்கினால் அத்தியந்தம் உத்தமமா
யிருக்கும் விஷயங்களில், பொருட் காட்சியு மொன்று
க விருக்கிறது. பொருட் காட்சியைத் திறக்கும் நாள்
சமீபிக்கும் பொழுது பேசுவதற்கு நேரமில்லாமலும்,
கேட்கிற கேள்விகளுக்கு அந்த ஸ்தலத்திலேயே பதில்
சொல்ல வேண்டிய தவசியமானபடி அவ்வளவு அவ
சரமாய் வேலை செய்ய வேண்டியதாயும் ஏற்படும்.
மேலும் நாட்டாண்மைக்காரர், மிகவும் ஜாஸ்தியான
வேலையைச் செய்ய எத்தனப்படாமல்,காரிய நிர்வாஹ
சபையின் மற்ற அங்கத்தினர்களை முறையே தத்தம்
இஷ்டப்படி ஒவ்வொரு காட்சிப் பொருட் டொகுதி
யின் விஷயமாய்ச் செய்யும்படி தமக்குக் கீழ் அமைப்
பது உசிதமாகவே யிருக்கும். ஒரு பொருட் காட்சி
யைத் தயாரிப்பது மகத்தான வேலையா யிருக்கிறது.
அவைகளை ஒழுங்குபடுத்தும் விஷயத்திலும் ஜனத்
தலைவர்களுக்கு மகத்தான அனுபோகம் ஏற்படுமாகை
யால், பிற்காலத்திய பொருட் காட்சிகளும் மிகவும்
பிரயோஜனமுள்ளவைகளாக விருக்க வேண்டும்.

காட்சிப் பொருட்களை அனுப்புவோர்களைப் பற்
றிய விஷயம்- ஒரு பொருட் காட்சி நடத்துவதின்
உத்தேசம், தங்கள் பொருட்களை உயர்ந்த விலைக்கு
விற்கும்படி அவர்களுக்கு ஒரு சந்தர்ப்பத்தை உண்டு
பண்ணுவதற்காக அல்ல வென்றும், ஆனால், இந்தி
யாவிற் செய்யப்பட்ட தங்கள் பொருட்கள் எவ்வளவு
விலை நயமாயும் எவ்வளவு நல்லதாயு மிருக்கிற தென்

பதை ஜனங்களுக்குத் தெரிவிப்பதற்காகவே ஏற்படுத்தப்படுகிற தென்றும் அவர்கள் மனதில் வைத்துக் கொள்ள வேண்டும். அநேக சாமான்கள் வழக்கமாய் ஒரு பொருட் காட்சியில் விலைக்கு வாங்கப்படுவது நிச்சயமே. ஆனால் காட்சிப் பொருளை யனுப்புவோர் எதிர்பார்க்க வேண்டிய தென்ன வென்றால், பொருட் காட்சியில் உயர்ந்த விலையிற் சில விற்பனைகளைச் செய்வதைக் காட்டிலும் விலை சரசமான தம்முடைய சாமான்களைப் பற்றிய வொரு விளம்பரமே யாம். காட்சிப் பொருட்களை அனுப்புவோர்களில் இந்த சங்கதியைக் கவனியாம லிருப்பவர்களு மிருக்கிறார்கள். எண்ணிறந்த ஜனங்கள் பொருட் காட்சியைப் பார்ப்பதற்காக மட்டும் வருகிறார்களே யொழிய அந்தப் பொருட் காட்சி முடியும் வரையில் தாங்கள் வெளியே கொண்டுபோக முடியாத சாமான்களை வாங்குவதற்காக வருகிறார்களில்லை யென்று அவர்கள் மனதில் வைததுக்கொள்ள வேண்டும். ஆகையால் காட்சிப் பொருளை யனுப்புவோர்கள் எந்தச் சாமான்கள் அவற்றினுடைய மேன்மையினாலும், அவற்றின் நியாயமான விலையினாலும், ஜனங்களுடையமனதிற் பதியுமோ அப்படிப்பட்ட சாமான்களை ஜனங்கள் பார்க்கும்படி ஜாக்கிரதை எடுத்துக் கொள்ள வேண்டும். காட்சிப் பொருட்களை யனுப்புவோர்கள் தங்களுடைய இலாபத்தை உத்தேசித்துச் செய்யக் கூடிய மற்றொரு விஷயம் என்ன வென்றால், மனதைக் கவரும்படியான குறிப்புகளை எழுதி வைப்பதே யாகும். உதா

ரணமாக, "காட்டு விளைவு" என்னும் பொதுவான
தலைப்பின் கீழ் வைக்கப்பட்டிருக்கும் வெட்டுமரத்
துண்டொன்றை யாதோ வொரு மனங்கவராத "மரத்
துண்டு" என்று ஒருவரும் கவனித்துப் பார்க்காமலே
யிருக்கலாம். ஆனால், அந்த மரத்துண்டின் மேல்,
"சுற்றளவு 25 அடி 2 அங்குலமுள்ள தேக்குமரத்
துண்டு" என்று சுருக்கமாயும் தெளிவாயும் எழுதி
வைத்திருந்தால், கூட்டங் கூட்டமாய் ஜனங்கள் அ
தைப் பார்த்து, மரம் எவ்வளவு பெரிதா யிருக்கு
மென்று கவனித்து, ஆச்சரியப் பட்டுக்கொண் டிருப்
பார்கள். காட்சிப் பொருள் அனுப்புவோர், சில வே
ளைகளில் ஜனங்கள் பேசிக்கொள்வதைக் கேட்டு,
உபயோகமான நல்ல விஷயங்களை அறிந்து கொள்ள
லாம். அவன் தன்னுடைய பொருட் சாலையின் அரு
கில் நிற்கும் பொழுது அவனும் தங்களைப் போலக்
காட்சி பார்க்க வந்தவனென்று கூட்டத்தி லிருப்பவர்
கள் நினைத்து அவனுடைய பொருட்களைப் பற்றி
அவர்களிற் சிலர் பேசிக்கொள்ளலாம். அப்படிச்
சொல்லிய விஷயங்களிற் சில, கேட்கச் சகிக்க முடி
யாதவைகளாய் இருக்கலாம். ஆனால், அவன் அவை
களைத் தன் மனதில் வைத்துக்கொள்ள வேண்டும்.
ஏனென்றால் அவைகள் எதார்த்தமாய்ச் சொல்லப்
பட்ட குறைகளே யாகும். தன்னுடைய சொந்தக்
கைத்தொழிலைச் சீர்ப்படுத்தும் பொருட்டு,மேற்கண்ட
குறைகூறுதல்கள், நியாயமானவைகளா, அல்லவா, வெ
ன்று தனக்குள்ளேயே யோசித்துப் பார்க்க வேண்டும்.

காட்சி பார்ப்பவர்களைப் பற்றிய விஷயம்- பெரும் பான்மையோரை சிரத்தை யுள்ளவர்களாக மதிக்கக் கூடாது. 1903-04 இந்த வருஷத்தில், சென்னப்பட் டணத்தில் நடந்த பொருட் காட்சியில் எல்லாராலும் நன்றாய் மதிக்கப்பட்ட காட்சிப் பொருள்- சென்னப் பட்டணம் பைத்தியக்கார சாலையிலிருந்த--ஒரு பைத் தியக்காரனுடைய கைவேலையாக விருந்த தென்பது, ஜனங்களுடைய உருசிக்கு ஒருவாறான வகையாக விருக்கிறது. அந்தப் பைத்தியக்காரனுடைய காட்சிப் பொருளானது ஒரு பிராமண யாசகனையும், அவன் பெண்ஜாதியையும் போல மரத்தினால் ஆள் அளவிற் செய்து, வர்ணம் வைத்து, வஸ்திரம் உடுத்தப்பட்ட வொரு ஜோடி பிரதமைகளாக விருந்தது. பருத்திக் கொட்டை யெடுக்கும் யந்திரத்தை ஒருவரும் பார்க் காம லிருக்கலாம்; பிரசித்தமான சாக்கடை நாற்றம் போக்கியைக் கண்டு நிந்தித்து மூக்கா லுறுஞ்சிக் கொண்டு அப்பால் போய்விடலாம்; மகாராஜாவினு டைய தங்கமிலாம் பூசிய வண்டியைப் பார்த்தாச்ச ரியப்படாம லிருக்கலாம்; ஆனால், அந்தக்காட்சி தி னம் முழுவதும்,ஒரு நிமிஷ நேரமாவது, அந்தப்பைத் தியக்காரனுடைய பொருளைக் கூட்டங் கூட்டமாய் ஜனங்கள் பார்த்தாச்சரியப்படாம லிருந்த தில்லை. இதனால் பரவா யில்லை. அந்தக் காட்சி முழுவதும் அனைவருக்கும் ஒரு பொருட் பாடமாக விருக்கிறது. வினோதமாய்ப் பொழுதுபோக்க உத்தேசிப்பதைத் தவிர வேறொன்றையும் உத்தேசிக்காமல், திருநாட் சே லையை உடுத்திக்கொண்டு, கூட்டங் கூட்டமாய் வரும் ஸ்திரீகளுக்குங் கூட தாங்கள் அடைபட்டிருந்த அந்தப்புரங்களிலிருந்து கொஞ்ச நோம் வெளிக்கு

விடப்பட்டு, கூட்டத்தில் ஒருவர்மே லொருவ ரிடித்
துக்கொண்டும், சிகப்புப் பட்டுகளுடையவும், தங்கப்
பட்டுகளுடையவும், இராஜாங்க வண்டிகளுடையவும்,
தந்தத்தினுடையவும், பித்தளையினுடையவும், சிறப்
பைப் பார்த்துக் கொட்டாவி விட்டுக்கொண்டு அந்தப்
பைத்தியக்காரன் செய்து வைத்திருக்கும் யாசகர்க
ளைப் பார்த்துச் சந்தோஷித்து, ஒருவருக்கொருவர்
சொல்லிக்கொண்டு ஓலமிடுவதும் சுகமான அனுபவ
மாகவே யிருக்கும். ஆனால் நம்முடைய கிராமாந்தர
சுதேசாபிமானி, இதற்காக மட்டும் வரக்கூடாது.
எல்லா விதத்திலும் அவன் தன்னுடைய ஸ்திரீ ஜனங்
களுடன் காட்சியைச் சுற்றி நடந்து அவர்களுடன்
கலந்து உற்சாகமாய்ச் சந்தோஷப் பட்டுக்கொண்
டிருக்கட்டும். ஆனால் அவன் இவைகளை யெல்லாம்
விட, விவசாய சம்பந்தமான காட்சிப் பொருள்களை
யும்,கைத்தொழிற்சம்பந்தமானகாட்சிப் பொருள்களை
யும், சிரத்தையோடு பரீக்ஷித்து, இந்த யந்திரம், அல்
லது, அந்த யந்திரம், இந்தக்கைத்தொழில் அல்லது
அந்தக்கைத் தொழில் தன்னுடைய ஜில்லாவில் ஏற்ப
டுத்தப்பட்டால் இலாபகரமாயிராதா வென்று ஆராய்
ந்தறிய வேண்டும். அவன்காட்சியைச் சுற்றிச் சுற்றி
வரும் பொழுது "நான் இங்கேஇருக்கிறது, என்னு
டைய பொழுதுபோக்குக்காக மட்டு மல்ல, என்னு
டைய சொந்தப்பயிற்சிக்காக மட்டுமல்ல, ஆனால்,
என்னுடைய கிராமத்தின் நன்மைக்காகவும், என்னு
டைய தேசத்திற்கு நான் கொஞ்சம்ஒத்தாசை செய்
வதற்காகவுமே" என்று அவன் தனக்குள்ளேசொல்
லிக்கொள்ளக் கடவன்.

## IV

இதை வாசிப்போர் தமது கிராமாந்தர சினேகிதனை அடுத்த கைத்தொழில் பொருட் காட்சியைப் போய்ப் பார்ப்பதற் கிணங்கும்படி செய்திருப்பாரென்று, நாம் இப்பொழுது வைத்துக்கொள்ளுவோம். ஒருவேளை இதனை வாசிப்போரும், அவனுடன் கூட வருவார். ஆகையால் அந்தச் சந்தர்ப்பத்துக்குத் தகுந்தபடி பேசிக்கொண்டுபோய், வழியைத் தொலைப்பதற்காக, அப்படிப் பேசும் பேச்சைக் குறித்து, ஒருக்கால், உபயோகமா யிருக்கக் கூடிய சில பொதுவான கருத்துகளை, இங்கே அவனுக்குத் தெரிவிக்கப்படுகிறது.

இந்தியருடைய மனதானது கோரணியாய்க் கேள்விகளைக் கேட்க எத்தனப்படுகிறதே யொழிய விசாரணை செய்வதா யில்லை. அதாவது, இந்தியன் அநேக உபயோகமில்லாத கேள்விகளைக் கேட்கும்படித் தூண்டுகிற ஒரு நூதனமான விஷயத்தினால் ஏவப்படுகிறானே யொழிய, விஷயங்களைப் பற்றி அவைகள் ஏன் எதற்காக வென்றும் காரண காரியங்களின் சம்பந்த மென்ன வென்றும் தெரிந்துகொள்ளும் ஆசை, அவனுக்கு ஒரு பொழுதும் இருக்கிறதில்லை. அவன் ஒரு அன்னியனுடைய முகத்தை வெறிக்க வெறிக்கப் பார்த்து, மிகவும் பழகிய மாதிரியாய் அவனைச் சுட்டிய கேள்விகளை, அவ்வன்னியன் தானொரு சந்தேகிக்கப்பட்ட மனுஷனா யிருக்கவேண்டு

மென்றும் தன்னைக் கேள்வி கேட்கிறவன் உடுப்பில்லாத போலீஸ்க்காரனு யிருக்க வேண்டுமென்றும், நினைக்கும்படியாய்க் கேட்பான். ஆனால், இப்படிக் கேட்டதெல்லாம், புதுமையினாலேயே யொழிய, உபயோகமுள்ள விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற ஆசையினால் அல்ல. இவ்வாறு புதுமையில் அவாக்கொள்ளும் தன்மையானது, எல்லா வகுப்பு ஜனங்களிடத்திலுமிருக்கிறது. கீழ்ப்பட்ட வகுப்பினரிடத்திலோ வென்றால், புதிதாய் வந்த ஒரு தாதியானவள் தான் வந்து அரை மணி நேரம் கழிவதற்குமுன், எஜமானைப் பற்றியும், எஜமானியைப் பற்றியும், சின்ன எஜமானைப் பற்றியும், சின்ன எஜமானியைப் பற்றியும், வந்து பார்ப்பவர்களைப் பற்றியும் சமஸ்த விஷயங்களையும் சமையற்காரனைக் கேட்டுத் தெரிந்துகொண்டிருப்பதுமல்லாமல், அந்த எஜமானும், எஜமானியும், தங்களுக்கு மாத்திரம் தெரிந்த இரகஸ்யமென்று பிரியமாய் எண்ணி யிருந்த விஷயங்களையும், தெரிந்து கொண்டிருப்பாள். மேலான வகுப்பினருள்ளும், ஒரு சுதேச கனவான், ஒரு ஐரோப்பியனைப் போல் நடவடிக்கை நடத்திக் கொண்டிருந்தா லொழிய, கொஞ்சங் கூடக் கூச்சமில்லாமல், ஒரு ஐரோப்பிய கனவானை, அவர் சென்னப்பட்டணத்திற்குப் போக வேண்டிய காரியமென்ன வென்றாவது, அல்லது, அவருடைய கைக் கெடிகாரத்தின் விலை என்ன வென்றாவது, கேட்பார். ஒரு ஐரோப்பிய சீமாட்டி, இந்திய ஜாதியில் ஒரு சகோதரியைப் போய்ப் பார்க்கும் பொழுது, வழக்க

மாய் உட்படுகிற உத்தரப் பிரத்தியுத்தரங்கள், போய்ப் பார்ப்பவர்களுடைய தன்மைக்குத் தகுந்தபடி, பொழுதுபோக்காகவோ, அல்லது, சிரமமான பரீக்ஷையாகவோ, இருக்கும்.

ஒரு கதை, அது முற்றிலும் நிஜம் என்பதை, நாம் இதை வாசிப்போர்க்கு நிச்சயமாய்ச் சொல்லலாம்,—ஸ்திரீகள் சம்பந்தப்பட்ட வரையிலாவது,—இந்தியாவிற் புதுமையிலுள்ள அவாவானது, எவ்வளவு தூரம் போகக் கூடுமென்பதைத் தெளிவாய்க் காட்டுகிறது. ஓர் ஆங்கிலேய அதிகாரியானவர், ரொம்ப காலத்திற்கு முன்னல்ல, இந்தியாவின் ஓர் பாகத்திலுள்ள நாகரிகமில்லாத ஜில்லாவிற்குள், போர்ச்சேவகர்களைச் சேர்க்கும் வேலையாக அனுப்பப் பட்டார். அவர் தங்கியிருக்கும்படியான சத்திரமாவது, ஐரோப்பியர்களிருப்பிடமாவது இல்லாமையினால், முக்கியமான கிராமத்தில், ஒரு விதவையான இராணியினிடத்தில், அந்த ஜில்லாவின் அதிகாரி, அது விஷயமாய்த் தெரிவித்துக் கொண்டதின் பேரில், அந்த இராணியானவள், வந்திருக்கும் அதிகாரிக்கு அரண்மனை எல்லைக்குள், ஒரு வீட்டில், உபசரணை செய்தாள். அந்த அதிகாரி அங்கே ஒரு வாரம் தங்கியிருந்ததில், அவருக்கு வேண்டியவைகளை எல்லாம் ஜாக்கிரதையாய்க் கவனித்தும், ஜாக்கிரதையாய் நிரப்பியும், அத்தியந்தம் பக்ஷமாய் உபசரிக்கப்பட்டார். உபசாரமாக அவர் அந்த இராணியைக் கண்டு பேசினார். அப்பொழுது அவளுடைய குமாரன், பள்ளிக்கூடத்

தில் ஆங்கிலேய பாஷை கற்றறிந்த 14 அல்லது 15 வயதுள்ள சிறுவன், துவிபாஷிகனு யிருந்தான். அவர் வேலை முடிந்தவுடன், அரண்மனைக்குப் போய், அந்த சீமாட்டி பட்சமா யிருந்ததற்காக, அவளுக்கு மனப் பூருவமாய் வந்தனம் செய்து, சுப மொழி சொல்லித் திரும்பினூர். சரீர முயற்சியிற் பிரியமுள்ளவ ராகையால், அவர் அரண்மனையி லிருந்து ரயில்வே ஸ்டேஷனுக்குக் கால் நடையாகப் புறப்பட்டுப் போனூர். அவர் பாதி வழி போய்க் கொண்டிருக்கையில், அந்த இராணியினுடைய குமாரன் பின்னுல் வெகு அவசரமா யோடி வந்து, அவரைச் சந்தித்தான். ஏற்கனவே அவர் அரண்மனையில் அவனுக்குவந்தனம் சொல்லி விடை பெற்றுக்கொண்டாய் விட்டது. மரியாதையாய்த் தம்மை ஸ்டேஷனிலிருந்து அனுப்பும் படியாக, அச்சிறுவனைக் கடைசி நிமிஷத்தில் அனுப்பி யிருப்பதாய் நினைத்து, அச்சிறுவன் தம் பக்கத்தில் வர, அவர் மறுபடியும் நடந்துபோக எத்தனப்பட்டார். ஆனூல், அச்சிறுவன், ஏதோ தன் மனதில் வைத்துக் கொண்டிருப்பதாக வெளிப்படையாகத் தெரிந்த தின்பேரில், அவ்வதிகாரி அவனைத் தன் மனதி லிருப்பதைச் சொல்லும்படி கேட்டார். ஓடிவந்த ஓட்டத்தினூல் இன்னும் மூச்சுவிட முடியாமல், அந்தச் சிறுவன் சொன்னதாவது "ஐயா, தங்களுக்கு என்ன சம்பளம் கிடைக்கிற தென்று என் தாயார் அறிய விரும்புகிறுள்." இது உண்மையான கதை. இந்தச் சங்கதியை, சம்பந்தப்பட்ட அதிகாரி யிடத்திலிருந்து நேரில் தெரிந்துகொள்ளப் பட்டது. பிரிந்துபோகும்

ஒரு அதிதியைப் பின் தொடர்ந்துபோய், அவனு டைய சம்பளம் என்னவென்று விசாரித்து வரும்படி பிரத்தியேகமாய் ஒரு தூதனையனுப்பு மெண்ணமா னது இந்தச் சீமாட்டி யிடத்தில் மட்டுங் கண்ட ஒரே சம்பவமாய் ஒருக்காலிருக்கலாம். ஆனாலும் இந்தியா விற் புதுமையிலுள்ள அவாவானது இன்னவிதமாய் வேலை செய்யக் கூடு மென்பதைப் பற்றி இந்தக் கதை ஒரு சிலாக்கியமான உதாரணமா யிருக்கிறது.

விசாரணை செய்யுந் தன்மையானது, அதாவது,—எல்லா வஸ்துக்களுடையவும் காரண காரியங்களைத் தெரிந்து கொள்ள வெத்தனப்படுந் தன்மையானது—கோரணியாய்க் கேள்விகளைக் கேட்க வெத்தனப்படும் தன்மையை விட மிகவும் வித்தியாசமான ஒரு விஷய மாயிருப்பது மல்லாமல், அது இந்திய சந்ததியார்க ளாகிய ஜனங்களிடத்திற் குறைவாகவே யிருப்பது, மிகவும் விசனிக்கத் தக்கது. ஒரு உதாரணத்தை உற் றுப் பார்ப்போமாக. சென்னப்பட்டணத்தில், பத்து வருஷ காலமாக, மின் சார "டிராம்" வண்டிகள் ஓடிக் கொண்டிருக்கின்றன. ஆயினும்,—பள்ளிக் கூடத்தில் பரிஷ்காரமாய்ச் சாஸ்திரம் கற்பிக்கப் பட்டிருக்கிற மாணுக்கர்களைத் தவிர—சுதேச ஜனத் தொகையில், சொல்லுங்கால், ஆயிரத்தில் ஒருவன் கூட அவ்வண்டி கள் இயங்கும் விதத்தைப் பற்றி அற்ப விவரமாவது சொல்லத் தெரிந்தவன் கிடையாது.

இதற்கு மாருக, சாமானிய ஆங்கிலேயனும்—அவ னைப் போலவே ஐரோப்பாவில் மற்ற நாஞவிதமான

தேசங்களிலு முள்ள சாமானிய நகரவாசியும்—ஒவ்
வொரு வஸ்துவினுடையவும் காரணத்தைத் தெரிந்து
கொள்ள இச்சிக்கிறான். கடல் மார்க்கமாய் அவன்
முதல் முதல் பிரயாணஞ் செய்யும் பொழுது, அவன்
யந்திர மிருக்கும் அறைக்குள் குதித்து, யந்திரத்தைப்
பரிசோதிக்காம லிருக்க மாட்டான். அவன் ஏறிச்
செல்லும் தொடர்வண்டியின் யந்திரமானது திடீரெ
ன்று விழுந்துவிடும்படி சம்பவித்தால், ஒருவேளை
பழைய செருப்புப் பழுது பார்ப்போனா யல்லாமற்
பழைய யந்திரங்களைப் பழுது பார்ப்பவனாகத் தானி
ருந்தால் எப்படியோ அப்படியே, அவ்வண்டி நின்று
போனதற்குக் காரணத்தை விவரமாய் விசாரிப்பான்.
சென்ற தலைமுறையாரின் அந்தப் பிரசித்தமான கிரந்
தமாகிய, 'ஒவ்வொன்றையும் உள்ளும் புறமும் விசாரி'
என்னும் கிரந்தத்தை வெளிப்படுத்திய அந்த ஆங்கி
லேயர், தம்முடைய வமிசத்தாரிடத்திலுள்ள விசாரிக்
குந் தன்மையை அறிந்தவர். மேலும் "மானிட அறி
வின் திரட்சி" யடங்கி யிருப்பதாக "டையமஸ்"
என்ற பத்திரிகையில் அறிக்கையிடப்பட்ட "வித்தியா
மண்டலம்" என்ற கிரந்தம் மிகுதியாய் விலையாயிற்
றென்பதில் அதிசய மொன்று மில்லை. இவ்விசாரணை
பண்ணுந் தன்மையானது ஆங்கிலேயரிடத்திற் குழந்
தைப் பருவத்தின் துவக்கத்திலேயே வெளிப்படுகி
றது. ஒரு ஆங்கிலேயச் சிறுவனிடம் ஒரு கெடிகார
விளையாட்டுச் சாமானைக் கொடுத்தால், அநேக நாளா
வதற்கு முன் அதிலுள்ளே யிருப்பதைப் பார்க்கும்
பொருட்டு, "உள்ளே விசாரித்து" அதனுடைய இயக்

கதற்குக் காரணத்தைத் தான் தெரிந்துகொள்ள, அதை உடைத்துத் திறந்திருப்பான். மேலும், விசாரிக்குந் தன்மையானது, முடிவில்லாத கேள்விகளைக் கேட்கும்படி அவனை ஏவுகிறதுந் தவிர பிரதம காரணங்களைத் தெரிந்துகொள்ள அவனுக்குண்டாகும் ஆவலினால், தன்னுடைய மூத்தோர்களை யெல்லாம் முடிவில்லாத வினாவிடைகளினால் தொந்தரவு செய்வது வழக்கம். சாயங்கால வேளையிற் பொழுதுபோக்காகப் பத்திரிகை வாசிக்க அமரிக்கையாக உட்கார்ந்திருக்கும் ஒரு தகப்பனிடத்தில் அவனுடைய சிறு குமாரன், விளையாட்டில் அலுத்துப் போய்க் கூட விருந்தால், அந்தத் தகப்பனுடைய கதியானது துக்கமுள்ளதாகவே யிருக்கும். அங்கே நடக்கும் நடவடிக்கையை ஒரு நாடகமாகச் சொல்லுவோம்.

அரங்கம்: சல்லாபசாலை. தகப்பன் கணப்பண்டை அவருடைய சாய்வு நாற்காலியில உட்கார்ந்து கொண்டு சமாசாரப் பத்திரிகை படித்துக்கொண் டிருக்கிறார். அவருடைய குமாரனாகிய சிறுவன், தனக்கெதிரில் சித்திரப்படம் நிறைந்த ஒரு புஸ்தகத்துடன் மேஜையிலுட்கார்ந்துகொண்டு அந்தச் சித்திரப்படங்களை மதியாமல் கடிகாரத்தைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

சிறுவன் (கொஞ்ச நேரம் பேசாமலிருந்து) அப்பா!

தகப்பன்:— (அரசிறை வரும்படிக் குரிய இரகசியங்களைக் குறித்து ஆழ்ந்து யோஜித்துக் கொண்டிருப்பவர் முகத்தில் துன்பக் குறியோடு திரும்பிப் பார்த்து) நல்லது என்?

*சிறுவன்:—* *அப்பா! கடிகாரத்தைச் சுற்றும்படி செய்வதெது?*

*தகப்பன்:—* (பொறுமையாய், அச்சிறுவனுடைய மனதைக்-கூடிய வரையில் அவசரமாய்ச்-சீர்ப்படுத்த ஆசைகொண்டு) *ஏன், நீ அதைச் சுற்றுகிறாய்—விசையை இருக்குகிறாய். உனக்குத் தெரியுமல்லவா; பிறகு சக்கரங்கள் சுற்றுகின்றன.* (தம்முடைய பத்திரிகையைத் திரும்ப படிக்க ஆரம்பிக்கிறார்.)

*சிறுவன்:—* (கொஞ்ச நேரங் கழித்து) *அப்பா?*

*தகப்பன்:—* (வருத்தமுள்ள முகக் குறியுடன்) *நல்லது! மறுபடியு மென்ன?*

*சிறுவன்:—விசையாவது என்ன?*

*தகப்பன்:—* (பெற்றோர்க் குரிய பொறுமைக்கு ஒரு உருவாகியவர், பெருமூச்சு விட்டுப், பத்திரிகையைக் கீழே வைத்துவிட்டு, கடிகாரத்தை எடுத்துக், கண்ணாடி மறைவைக் கழற்றிக், கடிகாரத்தைத் திறந்து, விசையின் செய்கையை விரித்துச் சொல்லி, முன்னிருந்தபடி சாமான்களை வைத்துவிட்டு ஒரு பிராணத் தியாகி மனச் சமாதான மடைந்தபின் வகிக்கக் கூடிய அனுதாபத்தோடு, மறுபடியும் வாசிக்க ஆரம்பிக்கிறார்.)

*சிறுவன்:—*(பின்னுங் கொஞ்ச நேரங் கழித்து) *அப்பா?*

*தகப்பன்:—* (பல்லைக் கடித்துக்கொண்டு) *இன்னுமென்னடா வேண்டும்?*

*சிறுவன்:— ஒரு பக்கத்திலிருந்து மற்றொரு பக்கத்திற்கு ஆடிக்கொண்டிருக்கிற இந்தச் சிறிய தங்க வுண்டையைப் பற்றி நீ எனக்குச் சொல்லவில்லையே?*

*தகப்பன்:*— (கோபமாய் எழுந்திருந்து) ஏ, கடவுளே! இதென்னடா ஒரு—(கோபத்தை அடக்கிக் கொண்டு) பையா, இப்பொழுது நீ படுக்கைக்குப் போகும் நேர மாய்விட்டது. மற்றொரு நாள் அந்தச் சிறு தங்க வுண்டையைப் பற்றிய வெல்லாம் உனக்குச் சொல்லு கிறேன். (தாதியைக் கூப்பிட மணியை அடிக்கிறார்) இராத்திரி வந்தனம்!

ஒடிகாரத்தின் யந்திர பந்தங்களைப் பற்றிய வெல்லாவற்றையும் தெரிந்துகொள்ள விரும்பும்படி அச்சிறுவனைத் தூண்டுகிற தன்மையே, ஒருவேளை, அவனுக்கு வயது அதிகரிக்கும் பொழுது, நட்சத்திர மண்டலங்களைப் பற்றிய வெல்லாவற்றையுந் தெரிந்து கொள்ள விரும்பும்படி அவனைத் தூண்டி, அவனொரு பெரிய வானசாஸ்திரி யாகிறான்; அல்லது, பூமியின் மேற்பரப்பைப் பற்றிய வெல்லாந்தெரிந்துகொள்ளும் படித் தூண்டி, அவனொரு பெரிய பூலோக விலக்கணி, யல்லது, சாமர்த்தியமாய்ச் சுரங்க மறுக்கும் என் ஜினீராகின்றன்; அல்லது, திரவ வஸ்து, காற்று, இவற் றின் செயல்களைப் பற்றிய வெல்லாம் தெரிந்து கொள் ளத் தூண்டி, அவனொரு கீர்த்தி பெற்ற இரசாயன சாஸ்திரி யாகிறான்; அல்லது, பொதுவாய் யந்திரங்க ளுடைய செயல்களைப் பற்றிய வெல்லாம் தெரிந்து கொள்ளும்படித் தூண்டி, அவனொரு கற்பனா யுக்தி மானாகிறான்.

நால வறுதிக்கு வேண்டியபடி யோக்கியதையடைய விரும்பினால், இவ்விசாரிக்குந் தன்மையானது இந்திய

னும், முக்கியமாய் இந்திய மாணுக்கனும், அவசியம் பழகிவரவேண்டிய தன்மையாக விருக்கிறது. இந்தத் தன்மையானது இந்தியாவில் இவ்வளவு அருமையா யிருப்பதற்கு முக்கிய காரணங்களைத் தெரிவிப் பது, கஷ்டமா யிருக்க மாட்டாது. இந்தக் காரணங் களைப் பற்றிய ஒரு விசாரணையானது பிரயோஜன முள்ளதாகவே யிருக்கும்.

முதலாவது காரணத்தை, மதக் கோட்பாட்டிற் காணலாம். பிராமணர்களுடைய கோட்பாடுகளினுல், பிராமணருடைய மனதானது, எண்ணிறந்த தலைமு றைகளாக, ஆழ்ந்த தத்துவ ஞானத்திலேயே பிரிய முள்ளதா யிருக்கிறது. ஜனங்களின் தலைவர்களுக்குப் பிரகிருதி சம்பந்தமான அபிவிருத்திகளில் தூண்டுத லுண்டாக வில்லை. அத்துவைத வேதாந்த சாஸ்திரப் படிப், பிராகிருத வஸ்துக்கள் யதார்த்தத்தில் இல்லா தவைகளாக—கேவலம் மனதின் சங்கற்பமாக—இருக் கின்றன. எல்லாவற்றையும் அடக்கிக் கொண்டிருக் கும் சித்து ஒன்றைத் தவிர, வேறொன்றும் யதார்த் தத்தில் இல்லை. ஆகையால், பிராமணர் அசித்தைப் பற்றிய படிப்பில், கொஞ்சங்கூட கவனம் செலுத்துவ தில்லை. மேலும் கீழான சடப் பொருள்களின் காரிய ங்களைப் பற்றி விசாரிக்கும்படி மனதை விடுவ தில்லை. இதற்கு, மாருக முற்றிலும் அசித்து சம்பந்தமில்லா மல், தம்மை விலக்கிக் கொள்ளுவதே, தெய்வ பக்தி யுள்ள பிராமணருடைய அபிருசியாக விருக்கிறது. அவர் தம்முடைய மதசம்பந்தமாய்ச் செய்யும் உத்த

மடமான அப்பியாசங்களில்- யோகாப்பியாசத்தில் - ஒரு சமயத்தில் அநேக மணி நேரம் வரையில் உலகத்தைப் பாராமல் கண்ணை மூடிக் கொள்ளுவதே தம்முடைய காரியமாகச் செய்து, பகவானிடத்தில் வைத்த பக்தியின் வலிமையினால், பூமியை விட்டு மேற்கிளம்ப இச்சிக்கிறார். பரமாத்மாவில் ஐக்கியத்தை நாடும் இச்சையானது, உண்மையாகவே ஒரு உத்தமமான இச்சையாக விருப்பது மல்லாமல், தத்துவ ஞானத்தைக் காட்டிலும் சட வஸ்து வானது அத்தியந்தம் குறைந்த மதிப்புள்ளதா யிருப்பது முண்மையே. ஆனால், வஸ்துக்கள் இருக்கிறபடி நமக்கு முன்னு லிருக்கின்றன. சடவஸ்துக்கள் யதார்த்தமா யிருந்தாலும்,இல்லாவிட்டாலும்,அவைகள் நிச்சயமாகநடந்துவருகிற காரியங்களாயிருக்கின்றன. சரீரமானது ஒரு பிரதிபிம்பமாயிருக்கலாம். ஆனால், அதினுடைய துன்பங்கள் எவ்விதத்திலும் உண்மையாகவே யிருக்கின்றன. பசியும், தாகமும், பஞ்சமும், வறுமையும், தேசத்தில் சேதமுண்டாவதும், தேசம் சீர்கெடுவதும்-இவைகளெல்லாம் நடந்துகொண்டிருக்கிற விஷயங்களா யிருக்கின்றன. தன்னுடைய அயலானை நேசிப்பவனும், தன்னுடைய ஜனங்களிடத்தில் பிரீதியுள்ளவனும் அவர்கள் கடத்தேறும்படி செய்யும் வேலையில் ஒத்தாசை செய்ய விரும்புவது நிச்சயம். பிராமணரைத் தம்முடைய மதக்கோட்பாட்டி லொரு அணுவாவது கைவிடும்படி நாம் ஒரு விதத்திலும் பிரார்த்திக்கவில்லை. அவர் உலகத்திலுள்ள வஸ்துக்களெல்லாம் பிரதிபிம்பங்களென்று நம்பிக் கொண்டிருக்கும் பொழுதே, சித்

தின் பலத்தினுல், தம்முடைய கவனத்தின் சில பாக த்தை அந்தப் பிரதிபிம்பங்களிடத்திலேயே, பிரயோ ஜன முண்டாகும்படி, செலுத்தலாம். பிராமணரு டைய தத்துவ ஞானமானது நேர்த்தியான தென்று ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கிறது. ஆயினும், இந்தியா வில் ஒரு கற்பம்—நிலக்கரியும், யந்திரமும் நிறைந்த கற்பம்,—ஆரம்பமா யிருக்கிறது. அதில் மனிதர்கள், தத்துவ ஞானத்தால் மட்டும் ஜீவிக்கிற தில்லை. ஒரு ஜாதியும், தத்துவ சாஸ்திரங்களை மட்டும் படித்துக் கொண் டிருக்கையில், ஒரு பொழுதும் தேற்றம் அடைந்திருக்க வில்லை. ஐரோப்பாவில், மத்திய கற் பங்களில், படிப்பானது, சன்னியாசி மடத்திலிருக்கும் துறவிகளிடத்திலேயே இருந்த பொழுதும், வித்வ சபைகளின் ஆழ்ந்த தத்துவ ஞானத்தையே கருத் தாய் அப்யஸிக்க வெத்தனித்த பொழுதும், சாஸ்தி ரப் படிப்பானது மிகுதியும் பராமுகம் செய்யப்பட்ட துடன், தேசாபிவிருத்தியும் மந்தமா யிருந்தது. ஆனல் பதினுருவது, பதினேழாவது நூற்றுண்டுகளில், ஒரு எதிர்த்தாக்க முண்டாயிற்று; சாஸ்திரமும், யந் திரமும், வழங்கலான ஒரு கற்பம் நிலைபெற்று மேற் றிசையிலுள்ள உலகமானது, அது முதல் அதிவேக மாய் ஞானத்தி லபிவிருத்தியாகி, வல்லமையு மடைந் திருக்கிறது. இந்தியாவில் வெகு காலத்திற்கு முந்தியே எதிர்த்தாக்கமானது வர விருந்திருக்கிறது. ஆனல், இப்பொழுது எதிர்த்தாக்கமானது ஆரம்பமானதற் குக் குறிக ளிருக்கின்றன. தேசத்தாரின் கருத்தா னது ஒரு முறை இலௌகிக வஸ்துக்களில் பிரவர்த்

திக்க ஆரம்பித்தவுடன், மகத்தான அபிவிருத்தி யுண்டாகிவிடும்.

இந்தியாவில் விசாரிக்குந் தன்மையானது குறைவாயிருப்பதற்கு இரண்டாவதுகாரணத்தை,—ஜனங்களின் தேவைகள் மிகவும் சொற்பமாக விருக்கிறபடியால், யந்திராபிவிருத்தியினால் சக்கியமானவைகளைப் பற்றிச் சோதிக்கும்படி, விசாரிக்கும் மனதுடையவர்களுக்குத் தூண்டுதல் ஒரு பொழுது முண்டாகவே யில்லை என்கிற விஷயத்திற் காணலாகும். இந்தியாவிற் பெரும்பான்மையான பாகங்களில், வெப்பமாகவேயிருப்பதில்—மரியாதைக்காக மட்டும்போதுமானபடிக்—கொஞ்சம் ஆடைகளேதேவையா யிருப்பதால், நெசவு தொழிற் கைத்தொழிலில் எவ்வளவு கைப்பழக்க மில்லாமலிருந்தாலும், போதுமானதாகவே யிருந்திருக்கிறது மல்லாமல், புராதனமான நெசவு தறிகளில், ஒரு திருத்தத்திற்கு மேல் மற்றொரு திருத்தமாக உண்டுபண்ண மனிதர்களுக்கு இங்கிலாந்திலிருப்பது போலத் தூண்டுத லுண்டாகிற தில்லை. மேலும், சமீபகாலத்திற்கு முன் வரையிலாயினும், காலக்ஷேபத்திற்கு அவசியமாய் வேண்டியவைகள் மிகவும் சொற்பமாகவே யிருந்தபடியால், ஏறக்குறைய ஒவ்வொரு ஜில்லாவிலும் அதற்கு வேண்டிய சாமான்கள் கிடைக்கக் கூடியதா யிருந்தது; அவ்விடத்திற் செலவாகும் ஆகாரத்திற்கு வேண்டிய தானியம், அங்கேயே விளையக் கூடியதாயிருந்தது ; அவிடத்திற் செலவாகும் வஸ்திரங்களை நெய்வதற்கு வேண்டிய

னால், அங்கேயே உண்டாக்கக் கூடியதா யிருந்தது. அவ்விடத்திற் கட்டப்படும் வீடுகளுக்குச் சுவர் வைப்பதற்கு வேண்டிய மண், அங்கேயே கிடைக்கக் கூடியதா யிருந்தது. அவிடத்தில் நிலங்களைச் சாகுபடி செய்வதற்கு வேண்டிய ஆயுதங்களை, நாகரீகமில்லாமல், அங்கேயே செய்யக் கூடியதா யிருந்தது. ஆகையால் சொற்பச் சரக்குகளே வியாபாரத்திற்குத் தேவையா யிருந்தபடியால், அவைகளைக்கூலியாட்கள் முதுகிலும், கோவேறு கழுதையின் பேரிலும், மாட்டு வண்டியிலும் வைத்துக் கரைமார்க்கமாய், ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் கொண்டுபோகக் கூடியதா யிருந்தது. எப்பொழுதாவது பிரயாணம் செய்யப் புறப்படும் பிரயாணி நடக்க முடியாதவனா யிருந்தால், வண்டியாவது, பல்லக்காவது கிடைத்தால் திருப்தி யடைந்திருந்தான். "பாயும் நாலு சக்கர வண்டிகள்'' நிறைந்த கற்பம் தாண்டி*, நவீன இருப்புப் பாதைத் தொடர் வண்டிகள் நிறைந்த கற்பமுண்டாகும்படி, சரக்குகளும் பிரயாணிகளும் போக்குவரத்துக்குரிய சௌகரியங்களை வரவர, அபிவிருத்தி செய்வதற்கு வேண்டிய விசாரிக்குந் தன்மையானது ஐரோப்பா விலிருந்தது போல, அபேக்ஷிக்கப்பட வில்லை. ஆனால், எல்லா விதமான யந்திரங்களும், இப்பொழுது, அன்னியர்களால் இந்தியாவிற் கொண்டுவரப்பட்டு, தரித்திருக்கலாயின. ஒரு வேளை, மேற்சொல்லிய யந்திரங்கள் இல்லாதிருந்த நாகரீகமில்லாத பழைய நாட்களி லிருந்ததைவிடத் தங்களுக்கு மத்தியில் யந்திரங்கள் நிறைந்திருந்தும், இந்தியாவிலுள்ள ஜனங்கள் அதிக சுகானுபவ

மில்லாதவர்களா யிருக்கலாம். ஆனால், இப்பொழுது கைத்தொழில் முயற்சியின் கற்பமானது உண்டாயி ருக்கிறபடியால், அந்த விஷயத்தின் உண்மை யென்ன வென்றால், இந்தியாவிலுள்ள ஜனங்கள் விழித்துக் கொண்டு, புதிய நிலைமைக்குத் தக்கபடித் தங்களைச் செய்துகொள்ள வேண்டும். இல்லாவிட்டால், ஓதுக் குப் புறமாய்த் தள்ளிவிடப் படுவார்கள். தலைமுறை தலைமுறையாக யுத்தத்தில் வில்லையும் அம்பையும் உப யோகித்து வந்த ஒரு ஜாதியார் துப்பாக்கியை உப யோகிக்கக் கற்றிருந்த ஒரு ஜாதியாருடன் சண்டை செய்யும்படி நேர்ந்தால், அந்த ஜாதியார் அவசியம் வெல்லப்படுவார்கள். இந்தியாவில் வேலை செய்யும் பழைய மாதிரியான வழிகள் வில்லையும் அம்பையும் போலிருக்கின்றன வென்று சொல்லலாம். அவைக ளைக் கொண்டு, யந்திரமாகிய துப்பாக்கிகளைக் கொ ண்டு வரும் அன்னியனோடு போட்டிபோடுவது வீ ணே யாகும். இந்தியாவானது ஈடேற வேண்டுமானால், அது தன்னுடைய வில்லையும் அம்பையும் தொலைத்து விட்டு, யந்திரமாகிற துப்பாக்கிகளையும் உபயோகிப்ப தற்குக் கற்றறிய வேண்டும். இந்தியர்களிற் பிரத்தி யேகமானவர்களும் விசாரிக்குந் தன்மைக்குத் தங்களை இசைதிருத்திக்கொண்டு, புதிய விதங்கள் எங்கே கைகூடுமென்று கண்டுபிடிக்க வேண்டும்.

இந்தியாவில் விசாரிக்குந் தன்மையானது குறைவா யிருப்பதற்கு மூன்றாவது காரணம், ஜனங்களுடைய பொறுமையேயாக விருக்கிறது. பகல் முழுவதும்,

ஒருக்கால், பின்னும் அர்த்தராத்திரி வரையிலும், தானும் தன் சகோதரனுமாக நின்றுகொண்டு, இரட்டைக் கைப்பிடி போட்ட இறைசாலைக் கொண்டு தன்னுடைய நெல்வயலுக்கு ஒரு குளத்திலிருந்து ஜலம் இறைத்துப் பாய்ச்சிக்கொண்டிருக்கும்படி அவ்வளவு பொறுமையாக விருக்கக் கூடிய மனிதன் புதிதாயும், திருத்தமாயும் ஒரு ஜலமிறைக்கும் யந்திரத்தை கண்டுபிடிக்கக் கூடிய மாதிரியான மனிதனல்ல. பகல் முழுவதும், பின்னும் அர்த்தராத்திரி வரையிலும், ஒரு நெசவு தறியி லுட்கார்ந்துகொண்டு, ஒரு பக்கத்திலிருந்து மற்றொரு பக்கத்திற்கு நூனாழியை எறிந்துகொண்டும், உண்டை நூல்களை ஒன்றோடொன்று சேரும்படி ஒரு கழியால் மோதிக்கொண்டுமிருக்கும்படியான பொறுமையுள்ள மனிதன், யந்திரத்தை அபிவிருத்திசெய்யக் கூடிய மாதிரியான மனிதனல்ல. மாட்டு வண்டியில் வெகு தூரம் பிரயாணம் செய்யும்படியான பொறுமையுள்ள மனிதன், தானே செல்லும் (Motor Car) வண்டியைக் கண்டு பிடிக்கக் கூடிய மாதிரியான மனிதனல்ல. பொறுமை யென்பது ஒரு உத்தமமான விஷயந்தான். "ஜாப் என்பருடைய பொறுமையானது" சற்குணத்தினுடைய அதிசயமான காட்சி யென்று பழமொழியாய்ச் சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஆனால், ஜாப் என்பவரைத் தவிர, பொறுமைக்குப் பழமொழியாய்ச் சொல்லுகிற மற்றொரு பிராணியு மிருக்கிறது. அதாவது, "பொறுமையான கழுதை". இவ்வாறு இரண்டு விதமான பொறுமை யிருக்கிறது. ஒன்று,—மதசம்பந்தமான

பொறுமை—ஜாப் என்பவரிடத்தி லிருந்தது போல, விலக்கக் கூடாத துன்பங்களைத் தைரியமாய் அங்கீகரிப்பதே யாகும். மற்றொன்று வண்ணான் கழுதையினிடத்திலிருப்பதுபோல,சோம்பலான சாதுத்தன்மையான பொறுமையே யாகும். பின்சொல்லிய மாதிரியான பொறுமையானது, இப்போதியக் காலங்களுக்கு ஒவ்வாததாயிருப்பதால், இந்தியாவானது அதை உதறிவிட வேண்டும். பிற தேசத்திற் பாருங்கள். ஆங்கிலேயர்கள் ஓய்வில்லாம லிருப்பதுடன், அவர்களுடைய ஒழுக்கமானது, ஓட்டமும், பரபரப்புமாகவே யிருக்கிறது. அவர்கள், ஒரு குறித்த நேரத்திற்குள், மேலுமேலும் ஜாஸ்தியான வேலையைச் செய்து முடிக்க விரும்புகிறார்கள். ஆகையால், அவர்கள் நாள்தோறும் நினைத்து நினைத்து உண்டுபண்ணிக் கொண்டும், காலங்களுக்குத் தக்கபடி நாள்தோறும் வேகமாய்ப் போய்க்கொண்டுமிருக்கிறார்கள். அமெரிக்கா தேசத்தி லுள்ளவர்கள் இன்னும் ஜாஸ்தியாக ஓய்வில்லா திருப்பதுடன் அவர்களுடைய ஒழுக்கமும், பின்னும் ஜாஸ்தியான ஓட்டமும், பரபரப்புமாகவே யிருக்கிறது. ஆகையால் அவர்கள் இன்னும் ஜாஸ்தியாக நினைத்து நினைத்து உண்டுபண்ணுகிறார்கள். இதற்கு மாறாக, இந்தியாவானது பொறுமையாயும் பரபரப்பில்லாமலு மிருக்கிறபடியால், யாதொன்றையும், நினைத்து உண்டுபண்ணுகிற தில்லை. பொறுமையாக விருப்பது நல்லதுதான். ஆனால், பொறுமை யென்றால், நஷ்டம் என்றிருக்கும் பொழுது, அப்படி யல்ல. இந்தியாவின் ஒழுக்கமானது, முன்னே யிருந்ததைவிடக், கொஞ்

சம் ஜாஸ்தியாகத் துரிதமா யிருக்க ஆரம்பித் திருப் பதானது, சந்தோஷிக்கத்தக்கதே. இந்தியாவிலுள்ள ஜனங்கள் எல்லாரும் "பரபரப்பாயிருக்க"- காலங் களுக்கு ஏற்றாற்போ லிருக்கும்படிசெய்யக்கூடியது மல்லாமல், கூடுமானால், தலைக்கட்டும்படி செய்யக்கூடி யதுமான புதிய விஷயங்களைப் பற்றி விசாரிக்கக்-கற் றறிய வேண்டும்.

இந்தியாவில், விசாரிக்குந் தன்மை குறைவாக விருப்பதற்கு, நாம் எடுத்துக்காட்டுங் கடைசிக் கார ணமானது, ஜனங்கள் பிடிவாதமாய் மாமூலை மாற்றாத தன்மையே யாகும். சொற்ப காலத்திற்குமுன் வரை யில், இத்தேசத்திலுள்ள ஏறக்குறைய ஒவ்வொரு மனிதனும், பழைய நெசவு தறிகளில் ஒரு மாறு பாட்டை உண்டாக்குவது ஒரு அடாத பாபத்துக்குச் சமானமாக நினைத்து, அதைத் தள்ளும்படியாக அவ் வளவு வலிதாய் மாமூல் இருந்தது. அதே மாமூலின் பிரகாரம், ஒரு குசவன், தன்னுடைய முன்னோர்கள், எண்ணிறந்த தலைமுறைகளாகத், தண்டைச் சக்கரத் தைச் சுற்றிவந்த மாதிரியை விட்டு, வேறு விதமாய்ச் சுற்றமாட்டான். பழைய நாட்களில், இந்தியாவில் ஒரு புதிய யந்திரத்தைக் கண்டுபிடிப்போன், பாவனு சக்தி யில்லாத ஜனங்களின் மத்தியி லிருக்கும் ஒரு கவியைப் போல், முற்றிலும், இடங்கேடு கெட்டிருப் பான். ஒரு கவியினுடைய பாட்டுகளை மனவுருக்க மில்லாத கூட்டத்தில் நாம் சொல்லுவோமானால், பைத் தியக்காரன் என்ற பெயர்தான் அந்தக் கவிக்கு வந்து

சேரும். சென்றுபோன நாட்களில், இந்தியாவிற் புதி தாயும், திருத்தமாயும் ஒரு நெசவு தறியைக் கண்டு பிடித்தவன், அதைப் பற்றித் தன்னுடைய கிராம வாசிகளுக்குச் சொல்லிக் காட்ட வெத்தனப்பட் டால், அந்தத்தறியானது அவர்கள் மனதில் பறக்கிற யந்திரங்களைப் போலவும், யானைக்குக் கோவணம் கட்டு வதைப் போலவுமே அசாத்தியமான காரியமாக மதிக் கப்பட்டிருக்கும். மாமூல்மாறாத தன்மையானது இன் னமும், பலமாகவே யிருக்கிறது. அதனுடைய ஆட்சிக் கு உட்படாத செய்கைகளோ சாமானியமாய், நம் முடைய துரதிர்ஷ்டவசத்தால் கெட்டமாதிரியாகவும், தேசாசாரவிரோதமுள்ள துர்க்குணங்களான நாஸ்தி கம், அதிபானம் முதலிய நடவடிக்கைகளாகவே இருக் கின்றன. இவ்வித துர்க்குணனுஷ்டானங்களில், வெகு ஜ னங்கள் மிதமிஞ்சி மாமூலை மாற்றத் தயாரா யிருக்கிறார் கள். ஆனாலும், இது வொரு உபகதை; இதில் நாம் கவனிக்கவேண்டிய விஷய மென்னவென்றால், நமது தேசத்திலுள்ள மாமூலபிமானமானது தேசத்தின் அபிவிருத்தியைத் தடைப்படுத்த லாயிற்று என்பதே யாம். இனிமேலாயினும், இந்தியாவானது தன்னுடைய தேசாசாரங்களில் ஒன்றையும் இழிவாய் விட்டுவிடா மல், ஹிதகரமான மாறுதல்களை ஒப்புக்கொள்ளத் தயாரா யிருக்கு மென்று கோருவோமாக.

இவைகளெல்லாவற்றுடன் சேர்த்துச் சொல்ல வேண்டியிருக்கிற துக்கமான சங்கதி, வித்தியாதிகாரிக ளுடைய நல்லெண்ணங்களுக்கு விரோதமாக, இந்தி

யாவில் படிப்பானது, விசாரிக்குந் தன்மையை யுண்டாக்கத் தக்கதா யில்லை யென்கிற விஷயமே. இதற்கு மாறாக, நம்முடைய பள்ளிக் கூடங்களிலும், வித்தியா சாலைகளிலும் படித்துத் தேர்ந்த மாணாக்கர்கள், படிக்க ஆரம்பித்த காலத்தில் அவர்களுக்கிருந்ததை விட படிப்பு முடிந்த காலத்தில், அவர்களிடத்தில் விசாரிக்குந் தன்மை குறைவாகவே யிருக்கிற தென்று, சுமாராய்ச் சொல்லலாம். அது பின் வருமாறு. இந்திய மாணாக்கனுக்கு முன்னால், தொடர்ச்சியான பரீக்ஷைக ளிருக்கின்றன. அவன் படித்துக் கொண்டிருக்குங் காலத்தில் பரீக்ஷையின் அட்டவணையிற் சேராதவொரு படிப்பும் தான் கவனிக்கத் தக்கதல்லவென்று நினைக்கிறான். ஆங்கிலேய மாணாக்கனுக்கோ வென்றால், சர்க்கார் பரீக்ஷையில் தேறியதற்குக் கொடுக்கப்படும் யோக்கியதா பத்திரம், அவனுடைய படிப்பின் முறைமைக்கு ஒரு ஆபரணமாக மட்டும், அவனுடைய தேர்ச்சிக்கு ஒரு அடையாளமாக மட்டும், இருக்கிறது. ஆகையால், அதைப் பெறுவதற்காக அவன் படிக்குங் காலத்தில், தன்னுடைய விசாரிக்குந் தன்மைக்கியன்ற மனதிற்கினிய தொழில்களில் ஏராளமான சாவகாசத்தைச் செலுத்துவது அவனுக்கு வழக்கம். இதற்கு மாறாக இந்திய மாணாக்கனுக்கோ வென்றால், அவன் பரீக்ஷையில் தேறியதற்குக் கொடுக்கப்படும் யோக்கியதா பத்திரமானது, ஜீவாதாரத்திற்கு முக்கியமான ஆஸ்தியாயிருப்பதால், அதை அடைவதில், தன்னுடைய "பொதுப் படிப்பு" என்று அவன்

சொல்லிக் கொள்ளுகிறவைகளின், அப்போதைக் கப் போதுள்ள, மந்திரவசியங்களின் உருவமாய் அல்லா மல், ஒரு விதமான சாவகாசத்தையுந் தனக்குக் கொடுத்துக் கொள்ளுகிற தில்லை. யோக்கியதா பத் திரத்தின் ஆவசியகமானது, முற்றிலும் வாஸ்தவமா யிருக்கிறது. ஒரு மாணாக்கன் சர்வகலா சாலையின் பிரவேச பரீக்ஷையிலோ, அல்லது, பிரதம பரீக்ஷை யிலோ, தேறுவிடில், அவனுக்கிசைந்த ஒரு மனைவி கிடைக்காமற் போவது அசம்பாவித மல்ல. மேலும், மனைவியைத் தவிரவும், அவனுடைய ஜீவனம், அவன் தேறுவதைப் பொறுத்திருக்கிறது. ஆகையால், பார மான பரீக்ஷை நடக்கும் வாரத்தைக் குறித்து அவன் ஆயத்தம் பண்ணிக்கொண்டிருக்கையில், அவ னிடத்தி லிருக்கும் சக்திகளை யெல்லாம் பரீக்ஷகர் களைத் திர்ப்தி செய்வதற்காக, உபயோகிப்பது சக ஜம். தேர்ச்சியில் பிரயோஜனம் ஒன்று மில்லை. ஆராய்ச்சியானது, காலத்தை வீணாய்ச் செலவழிப்ப தாகும். 'ரேடியம்' (Radiam) என்பது ஒரு மிகவும் அதிசயமான உலோகமாயிருக்கலாம். ஆனால் அது இரசாயன சாஸ்திர அட்டவணையில்,உலோக ஜாப்தா விற், சேர்ந்திருந்தா லொழிய அதன் குணங்களைப் பற்றி வாசிக்கத் தான் சிரம மெடுத்துக் கொள்ளுவது, காலத்தை வீணாய்ச் செலவழிப்பதாகு மென்று அவன் நினைப்பான். தனக்கு முன்னை லிருக்கும் பரீக்ஷைக்கோ வென்றால், மிகவும் இலகுவான வழி யாய், ஒவ்வொரு பாடத்திலும் போதுமானதைப் படித்துக்கொள்ள வேண்டு மென்று அவன் நினைக்கி

ருன். ஆங்கிலேய பாட விஷயத்தில், அவனுடைய ஆராய்ச்சி, "ஸ்மித்ஸன்ஸ் குறிப்புகள்,"—"பாட புஸ்தகமும் குறிப்புகளும், நிறைந்தது: அ௲ 8;" இவற்றிற்குள் அடங்கி யிருக்கிறது. இரேகா கணிதத்திலும், பிஜ கணிதத்திலும் தன் புஸ்தகக் கணக்குகளிலேயே நம்பி யிருக்கிருன். இவ்வாருகத் தன்னுடைய பரீக்ஷைக்காகவும், வாழ்க்கைக்காகவும் தயாராகச் செய்து கொள்ளுகிருன். பாஷா ஞானத்திலாவது, சரித்திரத்திலாவது, சாஸ்திரத்திலாவது, ஆராய்ச்சியாகிற யாத்திரை செய்ய, புத்தக சாலை யென்னுஞ் சமுத்திரத்துக்கு ஒரு விசாரிக்கும் மாணக்களே அனுப்பக்கூடிய, விசேஷமான இதர விஷயங்கள் அவனை மயக்கக் கூடியவைகளல்ல. பரீக்ஷையின் முடிவு அறிவிக்கப்படும் பொழுது, 3507-ம் நம்பரோ, அல்லது, அவனுடைய நம்பர் எதுவோ அது, அந்த ஜாப்தாவிற் கண்ட சுப நம்பர்களில் ஒன்று யிருந்தாலதுவே அவனுக்குப் போதுமானது. ஆனல், அவன் தன்னுடைய ஞாபக சக்தியைப் போஷித்துக்கொண்டிருந்த பொழுது, மனோவிருத்தியைப் பட்டிணியா யிருத்தி விட்டான். மற்றவர்கள் கற்பித்திருப்பவைகளைக் கிரஹிக்கக் கற்றிருக்கிருனே யொழிய, தனக்குத் தானே கற்பித்துக்கொள்ள அவன் கற்றறிய வில்லை. மற்ற மரக்கலங்களுடைய வெளிச்சத்தினுல், தன் மரக்கலத்தைச் செலுத்தக் கற்றறிந் திருக்கிருனே யொழியத் தன்னுடைய சொந்தத் தீபத்தை அணைந்துபோகும்படி விட்டுவிட்டான். என்ன செய்ய வேண்டியதென்றல், ஒவ்வொரு பிதாவும், தன்னுடைய குழந்

தைகளை அதிபாலிய முதல் தாங்களாகவே யோஜிக்கும்படி அவர்களைத் தூண்டுதல் செய்வதைத் தன்னுடைய கடமையாக அனுஷ்டிக்க வேண்டும். அதிசயமான பொருள்களை அவர்களுக்குக் காட்டி, அவர்களைக் கேள்விகள் கேட்டு, அவர்களே திரும்பக் கேள்விகள் கேட்கும்படி, அவர்களை அவன் உற்சாகப் படுத்த வேண்டும். சுவற்றின்பேரில் இருக்கும் சிலந்திப் பூச்சி, வயலி லிருக்கும் புஷ்பம், ஆற்றுத் தரையிலிருக்குங் கற்கள்— முதலிய அவர்கள் பார்க்கிற ஒவ்வொரு வஸ்துவோடும் பழகிவரும்படிக்கும் இந்த வஸ்துவைப் பற்றியாவது, அல்லது, அந்த வஸ்துவைப் பற்றியாவது, அதிசயமான விஷயங்களைத் தாங்களே கண்டுகொள்ளும்படி எத்தனப் படவும், அதனால் விசாரிக்குந் தன்மையை அபிவிருத்தி செய்துகொள்ளவும், தன்னுடைய குழந்தைகளைத் தூண்டுதல் செய்ய வேண்டும். இந்த மாதிரி கற்பிக்கப்பட்ட ஒரு குழந்தையானது, அதனுடைய தோழர்களை விட, ஏராளமான பிரயோஜனத்தை அடையக் கூடும். இந்திய பிதாக்கள் தங்கள் பாலர்கள் பிரதி தினமும் கற்க வேண்டிய அளவு, எழுத்துக் கூட்டுவதையும், வாய்ப்பாடுகளையும் கற்றுக் கொள்ளுவதினாலும்,'காப்பி'புஸ்தகங்களில் பிரதி தினம் எழுத வேண்டிய பக்கத்தை நேர்த்தியாக எழுதுவதினாலும், திருப்தியடைவதைக் காட்டிலும், தங்கள் குழந்தைகளுடைய அறிவை அதிகப்படுத்துவார்களானால், இந்தியாவிற்கு க்ஷேம காலமா யிருக்கும். விசாரிக்குந் தன்மையானது, ஒரு தடவை தூண்டி எழுப்பப்பட்டால்,

அது மனதில் நிறைந்து திணரித் தணிய ஏராளமான படிப்பை உட்கொள்ள வேண்டியிருக்கும். விசாரிக்குந் தன்மையை வெளிப்படுத்த நிச்சயமாய் முயலும் ஏற்பாடாகிய "கிண்டர் கார்டன்" என்னும், சிறுவராகிய சிங்காரத் தோட்டத்தை வளர்க்கும் முறைப்படி, பொருட் பாடத்தைப் பாலர்களுக்குக் கற்பிக்கும் ஏற்பாட்டை இந்தியாவில் மிகவும் சுகமாகவே அபிவிருத்தி செய்யக்கூடும். ஆனால் அதற்கு உபாத்தியாயர்களைக் கண்டு பிடிப்பது கஷ்டமாய் இருக்கிறது. ஆகிலும் மேல் வகுப்புகளிற் படிக்கும் மாணாக்கர்களும் அதே மாதிரியாக ஆராயச்சி செய்யும் வழக்கங்களைப் பழகிவரத் தூண்டப்படவேண்டும். ஆனால் அப்படிப்பட்ட வழக்கங்கள் அவர்களுடைய குழந்தைப் பருவத்திலேயே அபிவிருத்தி செய்யப்பட்டிருந்தாலொழிய, மிகவும் உத்தமமான தூண்டுதல்கள் எவ்வளவு வரையில் பலிதமாகுமென்பது சந்தேகமாயிருக்கிறது. குழந்தைகள் விஷயத்திலேயே பிரத்தியேகமாய் மிகுந்த சிரமம் எடுத்துக் கொள்ள வேண்டும். இப்படிச்செய்தால், ஒரு பழைய பழமொழியின் வார்த்தைகளைக் கொஞ்சம் மாற்றி "சிறுவர்களைப் பற்றி கவனம் எடுத்துக்கொள்ளுங்கள்; பெரியவர்கள் தங்களைத் தாங்களே கவனித்துக் கொள்ளுவார்கள்" என்று சொல்லலாம். மேலும் இந்த அத்தியாயத்திற் கற்பிக்கப்படும் முக்கியமான நீதி என்னவென்றால், இந்தியாவானது க்ஷேமம் அடைய வேண்டுமானால், அதன் மைந்தர்கள் விசாரிக்குந் தன்மையுடையவர்களாயிருக்க வேண்டும் என்ற நீதியேயாகும்.

———*———

# V.

நம்முடைய கிராமவாசியின் மனோநிலையானது இப்பொழுது தொழிலில் பிரவர்த்தி யுள்ளதா யிருக்கிறதென்று நாம் பாவிப்போம். வர்த்தகத்தையும் தொழில் முயற்சியையும் அபிவிருத்தி செய்வது ஒரு சுதேசாபிமானமுள்ள விஷய மென்னும் சங்கதியை ஒப்புக்கொள்ளும்படி அவனைத் தூண்டுதல்செய்யப்பட்டபடியால், அவன் இப்பொழுது தன்னுடைய தேசத்திற்காகவும், தனக்காகவும் ஒரு ஊழியம் செய்ய ஆவலுள்ளவனா யிருக்கிறான். அந்த உத்தமமான வேலையில் தன்னோடு சேர்ந்து வேலை செய்யத் தன்னுடைய கிராமவாசிகளிற் சிலரை உட்படுத்தக் கூடுமானால், தான்மட்டும் செய்யக் கூடியதைவிட தாங்கள் ஏகோபித்து மிகப் பெரியதும் அதிக இலாபமுள்ளதுமான ஒரு முயற்சியை அபிவிருத்தி செய்யலாமென்று அவன் அறிந்துகொண்டு, தன்னுடைய கோட்பாட்டில் வந்து சேரும்படி செல்வாக்குள்ளவர்களைத் திருப்புவதற்கு முயற்சி செய்யலாகிறான். இதனை வாசிப்போர் வழிப்போக்கிற் சொல்லிவந்த சம்பாஷணைகளினால், அவனுடைய மனதில் விசாரிக்குந் தன்மை நிறைந்து, காட்சிப் பொருள்களைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொண்ட படிப்பினால் உண்டாக்கப்பெற்ற கருத்துகளைப் பூரணமாய்க் கொண்டு, பொருட்காட்சியை விட்டுத் திரும்பி வந்திருக்கிறான். அவன் கிராமக் கோவிலுக்கு வெளியே யிருக்கும் ஒரு பெரிய ஆலமரத்தைச் சுற்றிப் போட்டிருக்கும் சிறிய மேடையின்

மேல் உட்கார்ந்துகொண்டு ஆழ்ந்த சிந்தனையினால் பர
வசமா யிருக்கிறான். இந்த நிமிஷந்தான் அவனுடைய
வாழ்நாளில் அதி உத்கிருஷ்டமான நிமிஷமா யிருக்கக்
கூடும். இந்த நிமிஷத்தில் அவன், ஞானோதயமுண்டா
வதற்குக் காத்திருக்கும் ஒரு-தீர்க்கதரிசியாயும்-குரு
வாயும்-உபதேவதையாயும்-இருக்கிறான். இந்தநிமிஷத்
தில் அவனுடைய மனதை யுற்சாகப்படுத்துவது, அவ
னுடைய ஜனங்களை-அவனுடைய தேசத்தைப்-பற்றிய
நினைவாகவே யிருக்கிறது. இந்த நிமிஷத்தில் அவன்
சிந்தனை பண்ணுவது-அயலானுக்கு விரோதமாகத்
தன்னுடைய சொந்த நெல் வயலுக்கு ஜாஸ்தியாகத்
தண்ணீர் பாயும்படி வாய்க்காலைக் குறுக்கே யடைப்
பதை யல்ல-தன்னயலானுடைய சில நிலம் அவனுக்
கில்லாமற் போகும்படி பண்ண ஒரு வியாச்சியத்தை
உற்பத்தி செய்வதை யல்ல-ஆனால் தன்னயலார்களை
யும் தன்னையும் ஒருமிக்கச் செல்வவந்தர்களாய்ச்
செய்வதும் ஒரு அற்ப கிராமத்தை ஒரு செழிப்பான
பட்டணமாக மாற்றக்கூடிய ஹேதுவாயிருப்பதுமான
ஒரு முயற்சியை உற்பத்தி செய்வதையே யாகும்.
அது எப்படிப்பட்ட முயற்சியா யிருக்க வேண்டும்?

நம்முடைய கிராமவாசி கொஞ்சமாய்ப் பணம் சம்
பாதிக்க மட்டும் கருதினால் பணம் சம்பாதிக்கும் ஒரு
தொழிலைத் தெரிந்துசொல்லுவது கஷ்டமாயிருக்க
மாட்டாது. இதோ வொரு பட்டோலை இருக்கிறது:-
கொஞ்சம் நெய்யும் அதற்கு இரட்டிப்பு மடங்குகறித்
தூளும் எடுத்து, ஜாக்கிரதையாய்க் கலந்து, ஒருபயற்

றளவு சிறு உண்டைகளாகச் செய்து, "வீரியவிருத்தி மாத்திரைகள்: 50கொண்ட டப்பி 1-க்கு ரூபாய் 2," என்று விற்றிடுக. ஆனால், இந்த முயற்சியானது நமது கிராமவாசி அதில் இறங்குவதை நாம் பார்க்கப் பிரியப் படக்கூடாத ஒரு விதமான முயற்சியாக விருக்கிறது. ஏனென்றால், அது இலாபகரமா யிருந்தாலும், தேசாபி விருத்திகர மல்ல. இந்த முயற்சியானது பணம் கொடுக்கக் கூடிய தென்பதற்கு ருஜு, ஔஷதம் விற் கும் எவ்வளவோ பேர்கள், தங்களுடைய விளம்பரங் களை அங்கீகரிக்கும் எவ்வளவோ இந்திய வர்த்தமா னப் பத்திரிகைகளில் விவரமாய்த் தங்கள் ஔஷதங் களைப் பற்றி விளம்பரம் செய்ய இயலும் விதமாய் "வீரியவிருத்தி" போன்ற பிரசித்தமான ஔஷதங்கள் எவ்வளவோ விலையாவதைக் காண்பதே யாம். இதனை எழுதினோர் இந்த மாதிரியான விளம்பரங்களில் ஒன் றல்ல, இரண்டல்ல, பத்து வரையில், இந்திய சமா சாரப் பத்திரிகை ஒன்றின் ஒரே பதிப்பில் இப் பொழுதுதான் எண்ணிப் பார்த்திருப்பதுடன் அவற் றில் விசனிக்கத் தக்க இரண்டு காரணங்களையுங் காண்கிறார்— அதலாவது "வீரியவிருத்தி" போன்ற ஔஷதங்களுக்கு அவ்வளவு ஜாஸ்தியான தேவை இந்தியாவில் உண்டாயிருக்க வேண்டுமா வென்பதும், இரண்டாவது அப்படிப்பட்ட ஔஷதங்கள் இருக்க வேண்டுமா வென்பதுமே.

நம்முடைய கிராமவாசி, கேவலம் இலாபத்தை விட மேலான வொன்றை எதிர்பார்த்துத் தனக்கும்

தன்னுடைய கூட்டாளிகளுக்கும் கௌரவத்தைக் கொடுக்கக் கூடிய ஒரு முயற்சியைச் செய்யக் கருது கிறுனென்று நாம் வைத்துக் கொள்ளலாம். எந்த முயற்சியை அவன் முக்கியமாய்ச் செய்ய வாரம்பிக்க லாம்? அதைச் சொல்லுவது பிரயாசை. அவன் தன் னுடைய விசாரிக்குந் தன்மையை உபயோகித்துத் தெரிந்துகொள்ள வேண்டும். ஏனென்முல், தன்னு டைய பிரதேசத்திற்கு முக்கியமாய் எந்த முயற்சி தகுதியாயிருக்கு மென்று அவன் தீர்மானிக்கக் கூடி யது ஆழ்ந்த யோஜனையின் பயனுகவே யிருக்கிறது. அவன் தனக்குள்ளேயே அடியிற்கண்டபடி கேள்வி கள் கேட்டுக் கொள்ள வேண்டும். "அகண்ட பூமண் டலத்தோடு நெருக்கமான சம்பந்தம் இந்தக் கிராமத் திற் குண்டாகும்படி ஏதேனும் செய்யக் கூடுமா?" "பூமண்டலத்தில் அபேக்ஷிக்கப்படுகிற வெதையே னும் விளைவிக்க இந்தக் கிராமம் முக்கியமாய்த் தகுதியுள்ளதா யிருக்கிறதா"? "இலாபம் வரும்படி அபிவிருத்தி செய்யக் கூடியதாய், இந்தக் கிராமத் திற்குச் சமீபத்திலிருக்கும் குன்றுகளிலாவது, காடுக ளிலாவது, திறந்தவெளிகளிலாவது, ஏதேனும் பிராணி வர்க்கங்களோ, பயிர்வர்க்கங்களோ, தாதுவர்க்கங்களோ இருக்கின்றனவா?" "கிராமத்தில்அரைமனதாகச்செய் யப்படுகிற அல்லது மடிந்துபோகிற எந்தத்தொழில் மு யற்சிகளையாவது அபிவிருத்தி செய்வதற்காகமேற்போ ட்டுக்கொண்டால் பிரயோஜன முண்டாகக் கூடுமா?" "கிராமத்திலேயே ஏதாவது சௌகரியங்களை ஏற்படு

த்தி அதனால் பலனை உற்பத்தி செய்யும் பிரயாசையை இலகுவாக்கவும், அவ்வளவுக் கவ்வளவு கிராமத்திற் பலிதமாகும் விளைவை அதிகமாக்கவும் கூடுமா?'' வரும்படி வரக் கூடிய முயற்சிக ளின்னவை யென்பதைப் பற்றிய பிரபோதங்களைச் சொல்லி மேற்சொல்லிய கேள்விகளுக்குப் பதில் சொல்லக் கூடுமென்று இந்த சிறிய புஸ்தகத்தில் ஏற்றுக்கொள்ளப்பட வில்லை. கைத்தொழில் முயற்சியை தூரதிருஷ்டியோடு அபிவிருத்திசெய்வோன் தன்னுடைய விசாரிக்கும் மனதை எங்கும் செலுத்தி, அனுஷ்டிக்கலாகும் ஒழுங்குகளைச் சுருக்கமாய்ச் சொல்லுவது மட்டு மிந்தப் புஸ்தகத்தின் கருத்தா யிருக்கின்றது.

பொருட் காட்சியில், நம்முடைய கிராமவாசி, அந்த இடத்தைச் சுற்றிச் சுற்றி இலேசான ஒரு 'டிராம்,' வண்டி யோடிக் கொண்டிருந்ததைப் பார்த்திருக்கக் கூடும். அதிசமீபமான ரயில்வே ஸ்டேஷனிலிருந்து சுமார் ஒன்பது அல்லது பத்து மயில் தூரத்தில், ஜன நெருக்கமான ஒரு ஜில்லாவில் ஒரு பெரிய கொத்துபோற் றிரளா யிருக்கும் கிராமங்களில் அவனுடைய கிராமம் ஒன்று யிருக்கக் கூடும். வழியிலெல்லாம், கிராமங்கள் இருக்கின்றன. வழி நெடுக, ஓயாமல், இங்குமங்கும் பாட்டைசாரிகள்—புருஷர்கள் தலையில் மூட்டைகளோடும், ஸ்திரீகள் இடுப்பில் சிசுக்களோடும், குழந்தைகள் பாதங்களில் நடந்த வடுக்களோடும்— நடமாடிக்கொண்டிருக்கிறார்கள். இந்தப் பிரயாணிகளில் பெரும்பான்மையோர் ஒரு வண்டிமட்

டும் அகப்படும் பட்சத்தில், நடக்காமற் சவாரி செய்யும் சௌகரியத்திற்காக இரண்டணு சுமார் கொடுக்க திர்ப்தி யுள்ளவர்களாகவே யிருப்பார்கள். மேலும் இந்தப் பாட்டைசாரிகளைத் தவிரப் பூராய்ப் பாரமேறப்பட்ட வண்டிகள் ஓயாமல் ரஸ்தாவில் வழியை யடைத்து அசைந்து போய்க்கொண்டு மிருக்கின்றன. அந்தவண்டிகள் ஸ்டேஷனுக்குவிளைபொருள் நிறைந்த சாக்குமூட்டைகளைக்கொண்டுபோவதினால் ஒரு முக்கியமானதொழிலை நடத்தி வருகின்றன. இந்தஸ்திதியில் இருப்புப் பாதைக்கு உதவியாக அந்த ரஸ்தா வழியாக ஒரு 'டிராம்வே' யோடும் பட்சத்தில், பிரயாணிகளுக்கு மகத்தான வொரு நன்கொடையாகவிருப்பதுமல்லாமல், நாட்டில் வர்த்தகம் அபிவிருத்தி யாகும்படி செய்து அதைமுயற்சிக்கும்கர்த்தாக்களுக்கு அதிகலாபத்தைக் கொடுக்குமென்பதும் அசம்பாவிதமல்ல. தண்டவாளங்களைப் பூமியிற் பரப்புவது அதிகச் செலவு பிடிக்கும் விஷயமல்ல. மேலும், மாடுகள் அல்லது குதிரைகள் பூட்டிய சுளுவான ஒற்றைத் தண்டவாள 'டிராம்' வண்டிகள் முதல்—ஒப்பிட்டுப் பார்க்கில், அதிகச் செலவுள்ளதா யிருந்தாலும், சுளுவாகவு மிருக்கும், நீராவி யந்திரத்தினால் இழுக்கப்படும் இலேசான இருப்புப் பாதை வண்டிகளீறாகப்-பற்பல ஏற்பாடுகள் இருக்கின்றன. அவற்றி லொன்றைத் தெரிந்தெடுக்கவேண்டும். ஜாஸ்தியாகவோ, கம்மியாகவோ தனமுள்ள கிராமவாசிகளிற் சிலர் ஒன்று சேர்ந்து யோஜித்துத் தங்கள் பணத்தில் நூற்றுக்கு இவ்வளவென்று

முதல் வைத்து ஒரு சங்கத்தை ஏற்படுத்தினால் இந்த விஷயத்தைச் சீக்கிரம் செய்து முடித்து விடலாம். அந்தக் கிராம சமூகங்கள் எவ்வளவு வேறுபட்டுக் காணும்! தண்டவாளங்கள் அந்தக் கிராமத்தை உலகத்தோடு சேர்க்கும். சேமித்து வைத்திருக்கும் தானியங்களும், பழங்களும் உலகத்திலுள்ள சந்தைகளுக்கெல்லாம் சுளுவாகப் போய்ச்சேரும். மேலும் அதிக முயற்சியுள்ள பிரதேசத்தை விட்டு வெகு தூரம் அப்பாலிருப்பதினால் விலைபெற்றதாயிராமல் பூமிக்குப் பாரமாயிருந்த கட்டடவேலைக் குபயோகமான மரங்கள், இப்பொழுது ஏற்றிப்போவது சுளுவாயிருப்பதினால், விலைபெற்ற ஆஸ்தியாக ஆய்விடும்.

அல்லது, விருத்தியாகிக்கொண்டுவரும் ஜனத்தொகைகளும், தானிய சம்பத்துகளும், உபயோகப்படுத்தப் படாத வெட்டு மரங்களும் நிறைந்த அந்தக் கொத்துப் போன்ற கிராமங்கள், ரயில்வே ஸ்டேஷனை விட்டு வெகுதூரம் அப்பாலிருப்பதால், இருப்புப்பாதையோடு சம்பந்தப்படுத்தக்கூடாமையாக விருந்தாலும், மேற்சொல்லிய கிராமங்கள் கப்பலோடத் தக்கவொரு ஆற்றிற்குச் சமீபத்திலேயே இருக்கக் கூடும். அந்த ஆற்றிற் போய்ச் சேரும் ஒரு கால்வாயானது அந்தக் கிராமங்களை அகண்ட பூமண்டலத்தோடு சம்பந்தப்படுத்தும். கால்வாய் வெட்டுவது செலவு பிடிக்கும் காரியமா யிருக்காது. ஒரே ஒரு படகு செல்லுவதற்குப் போதுமான அகலமாய் மாத்திரமிருக்கும் ஒடுக்கமான வொரு கால்வாய் கால் மயில்

தூரத்தில் இடைக்கிடையே தங்குமிடங்கள் (ஸ்டேஷன்கள்) உள்ளதாயிருந்தால், அதுவே ஆரம்பத்திற் போதுமானது. சாதாரணமாய் அனுகூலமான நிலைமையில், ஒரு சிறிய ஏகோபித்த கூட்டு வியாபாரச் சங்கத்திற்கு இது சாதிக்கத் தகுந்ததாகவே யிருக்கும். காடுகள் கிடைத்தால் வெட்டுமரக் கட்டைகளை மிதக்கவிட்டுக் கடற்கரைக்குக் கொண்டுபோகும் இலாபகரமான வொரு காரியத்தை அந்தக் கால்வாயானது சந்தேக மில்லாமற் செய்யும். அந்த ஆற்றின் முகத்துவாரத்தில் ஏற்கனவே பட்டணம் இல்லாதிருந்தால், கிராமத்தியத் துறைமுக மொன்றை ஸ்தாபிக்க அந்தக் கிராமத்தி லிருந்து ஜனங்கள் குடிபேர ஒரு புல முண்டாகும். அந்தக் கிராமங்களி லிருந்து அனுப்பும் ஏற்றுமதிச் சரக்குகளைக் கடலிற் செல்லும் மரக்கலங்கள் அந்தத் துறைமுகத்தி லிருந்து ஏற்றிக் கொண்டு போகும்.

இவைகள் எல்லாம் நம்முடைய கிராமவாசியின் உத்தேசத்திற்கு மேற்பட்ட பெரிய தந்திரங்களாயிருக்கலாம். ஆனல், இவைகளை விட சாத்தியமான சிறிய தந்திரங்களும் இருக்கின்றன. பொருட்காட்சி நடந்த இடத்தில், ஒரு குளத்திலிருந்து ஜலத்தை மேல்நோக்கி இறைத்துக்கொண்டிருந்த எண்ணெய் ஆவி யந்திரத்தை நம்முடைய கிராமவாசி பார்த்திருக்கக் கூடும். அந்தச் சிறிய யந்திரம் சொற்ப மேன்பார்வையின் பேரில் பகல் முழுவதும் ஓயாமல் வேலை செய்துகொண் டிருந்தது. மேலே யிருக்கும் தொட்

டியிலிருந்து ஜலமானது தொடர்ச்சியாய்த் தாரையாகச் சிங்காரமாய்க் கொட்டிக்கொண்டிருந்தது. இதற்கும் நம்முடைய கிராமவாசியின் தூங்குமூஞ்சிகளான கவலை மாடுகள் வெகுப் பிரயாசையோடு பின்னும் முன்னும் போவதற்கும் அவனுடைய கிணற்றிலிருந்து ஜலம் சிறிய தாரையாயும் விட்டுவிட்டும் ஓடிவருவதற்கும், மிகவும் வித்தியாச மிருக்கிறது; தோலினாற்செய்யப்பட்ட இறைசாலைக் கொண்டு ஒரு மனிதன் கையினால் தன்னுடைய வயலுக்கு உச், உச், என்று தண்ணீர் பாய்ச்சுவதற்கும் இதற்குமோ, இன்னும் ஜாஸ்தியான வித்தியாசமிருக்கிறது! நம்முடைய கிராமவாசியும், அவனுடைய சினேகிதர்களும் சேர்ந்து ஒன்று, அல்லது, அதற்கு மேற்பட்ட சிறிய யந்திரங்களைக் கொண்டு, மிகுந்த பொதுநன்மையைச் செய்வதுசாத்தியமாக விருக்கிறது. இறைப்பதற்கு ஏராளமான ஜலம் இருக்கும் பட்சத்தில், அவர்கள் கூட்டுத்தொழிற் சங்கத்தை ஏற்படுத்தி, நீர்பாய்ச்சும் கால்வாயை உண்டாக்கி ஜாஸ்தியான விஸ்தீரணத்துக்கு ஜலத்தை நிரப்பலாம். காளைமாடுகளை வாங்குவதற்கு அதிகச் செலவு பிடிக்கும். அவைகளுக்குத் தீனிச் செலவு தினக் கணக்கா யிருக்கிறது. அவற்றின் தீனிச் செலவை யந்திரத்திற்காகச் செல்லும் விறகின் கிரயத்திற்குச் சரியாய் வைக்கலாம். ஆனால் அது எப்படி யிருந்தாலும், புத்தி யுக்தியுள்ள அநேகம் பேர்கள் தங்களுடைய சொந்தப் பிரயோஜனத்திற்காகவும், அருகாமையிலுள்ளவர்களுடைய பிரயோ

ஜனத்திற்காகவும், ஒன்றுசேர்ந்து, சொற்ப முதலுள்ள ஒரு சங்கத்தை ஏற்படுத்தி, வேலைசெய்தால், அவர்கள் தற்காலத்திய நிலைமையைக் காட்டிலும் வெகு சிலாக்கியமான பாய்ச்சல் ஏற்பாட்டை நிஷ்கரிஷிக்கலாம்.

கிரீச்! கிரீச்! என்று கிராமச் செக்கின் நாதமானது இளங்காற்றில் வெகு தூரம் கேட்கிறது. சுழலுகிற விச்சமரத்தின்மேல், தன் பக்கத்தில் ஒரு பெரிய கருங்கல்லை வைத்துக்கொண்டு உட்கார்ந்திருக்கும் சிறுவன் ஓட்ட, அதிற் கட்டியிருக்கும் காளைமாடுகள், மெதுவாய் நடந்து, சுற்றிச் சுற்றி வருகின்றன. அந்தச் செக்கிலிருக்கும் வித்துகளிலிருந்து எண்ணெயானது மெதுவாய் வெளிப்படுகிறது. இப்படிப்பட்ட புராதனமான யந்திரமானது முன்காலத்தில் மிகவும் நன்றாகவே யிருந்தது. இந்தத் தலைமுறையிலும் அது ஒரு காரியத்திற்கு உபயோகப்படலாம். ஆனால் அது ஒரு மெதுவும், சிரமசாத்தியமுமான செய்கையாகவிருக்கிறது. தற்காலத்திய எண்ணெய் எடுக்கும் யந்திரத்தை இந்தியாவிற் சில பெரிய பட்டணங்களிலும் இந்திய சிறைச்சாலைகளிலுங் காணலாம். அப்படிப்பட்ட யந்திரங்கள் மிகவும் நன்றாய் வேலை செய்யும். மேலும், மிகவும் ஜாஸ்தியாகப் பலனையுங் கொடுக்கும். அந்த யந்திரத்தைஸ்தாபித்துநடத்துவதற்கு, சொற்ப முதலே போதுமானதாகவு மிருக்கிறது. மேலும், ஒரு சிறிய சங்கமானது அந்தக் கிராமத்திலுள்ள எண்ணெயாட்டுந் தொழிலை, ஒரு அபிவிருத்தியான கைத்

தொழில் முயற்சி யாகும்படி, சகஜமாய்ச் செய்யக் கூடும்.

அதோ யிருக்கிற தெருவில் கிராம நெசவுகாரர் கள் தங்கள் முக்காலியில் வேலைசெய்து கொண்டிருக் கிறார்கள். அவர்கள் நெசவுபாவை சிரம சாத்திய மாய் விரித்துக் கொண்டிருக்கிறார்கள். அவைகளைப் பிறகு புராதனமான நெசவு தறிகளிற் சேர்ப்பார்கள். ஜீவனத்திற்குக் கூடப் போதாத சொற்பப் படிக்காக நெசவுகாரர்கள் வேலைசெய்கிறார்கள். மேலும், சொற் பக் கூலிக்கு வேலை செய்வதாயிருந்தாலும், சமீப மான வயல்களில் பஞ்சு விளைந்தாலும், அதோ கிணற் றண்டை இருக்கும் கிராமக் கன்னிகையானவள் மாஞ் சேஸ்டர் சேலையை அணிந்துகொண் டிருக்கிறாள்! ஏன் இப்படி இருக்கவேண்டும்? இதற்கு முக்கிய மான காரணம் நெசவுகாரர்கள் காலங்களுக்குப் பின் னடைந் திருக்கிறார்கள். புத்தியுக்தியும், முயற்சியும் சேர்ந்து வேலைசெய்தால், அந்தக் கிராமத்திய நெசவு தொழிலை இந்தக் கற்பத்துக்குத் தக்கபடி ஒழுங்கு படுத்தி, அதனால் அன்னியபோட்டியை எதிர்க்கும் படியான சரக்குகளை அயல் கிராமங்களில் நிரப்பக் கூடும்.

ஆடு மாடுகள் ஏராளமாக இருக்கும் ஜில்லாவில், தோல் மிகுதியாக இருக்கும். மற்றத் தேசங்களிலுள் ள, தோல்பதமிடுவோரும், மதமிட்டதோலில் வேலை செய்வோரும், இலாபத்தில் மிகுதியான பாகத்தை யடையும்படி இந்தியாவானது தன்னுடையதோலின்

மிக்க பாகத்தைத் தேசத்தை விட்டு வெளியே என் அனுப்பவேண்டும்? மிருகங்களைத் தோலுரிக்கிற ஜில்லாவிலேயே, அந்தத் தோலைப் பதமிடவும், பதமிட்ட தோலில் வேலை செய்யவும், மிகுதியானவைகளை மட்டும் அன்னிய தேசங்களுக்கு அனுப்பவும், ஏன் கூடாது? நல்லதான ஒரு தோல்பதமிடுஞ் சாலையும், அது போலவே, பதமிட்டதோல் சாமான்களும் இலாபங் கொடுக்கத் தகுந்தவைகள். ஒரு சங்கமானது தோலைக் கிரயத்துக்கு வாங்கி, அதை மிகவும் நல்ல முறைகளிற் பதமிட்டுப் பிறகு பதமிட்ட தோலை வேலைசெய்யத் தகுந்த தளவாடங்களைக் கொண்டும், தக்க மேல் விசாரணைக்குட்பட்ட அநேக இந்திய சக்கிலியர்களைக் கொண்டும், அயல் கிராமங்களுக்கு வேண்டிய எல்லாத் தோல் சாமான்களைமட்டு மல்லாமல், தேசத்தின் மற்ற பாகங்களுக்கும் அன்னியதேசங்களுக்குங்கூட ஏற்றுமதி செய்வதற்காக, நன்றாய்ச் செய்யப்பட்ட சாமான்களை வேண்டிய அளவும் உண்டாக்கக் கூடுமானால், ஒருக்கால் மிகுந்த இலாபம் கிடைத்து, அந்த ஜில்லாவிற்கு மிகுந்த நன்மையையும் செய்யும்.

**ப**ர்மாவின் மரமரி நீராவி யந்திரமானது மிகுந்த இலாபத்தைக் கொடுத்துவருகிறது. இந்தியாவில் சிரமசாத்தியமான கை இரம்பத்தினாலேயே மிகவும் ஜாஸ்தியான வேலை நடத்தப்படுகிறது. கைவேலையானது நிச்சயமாகவே, நயமாக விருக்கிறது. ஆனால், மிகுதியாய் வெட்டுமரங்கள் கிடைக்கக்கூடிய இடங்களிலும் அவைகளை யேற்றிக்கொண்டுபோவது சுளுவா

யிருக்குமிடங்களிலும் ஒரு மரமரி நீராவி யந்திரமானது இன்னும் நயமாகவே யிருக்க வேண்டும். மேலும் அறுக்கப்பட்ட பலகைகளை, பளுவான கட்டைகளைப் பார்க்கிலும் மிகவும் சுளுவாய் எடுத்துவைத்துக் கட்டலாம். மேலும் நம்முடைய கிராமவாசி, தன் கிராமத்துக்குச் சமீபத்தில் காடுகளிருந்து, இருப்புப் பாதை, அல்லது 'டிராம்'பாதையை உபயோகிக்கக்கூடுமானால்,ஒரு சங்கத்தை ஸ்தாபித்து,ஒரு மரமரி நீராவி யந்திரத்தைக் கொண்டு, சுறு சுருப்பாய் வேலையை நடத்தினால், மிகுதியாக ஏற்றுமதி செய்து, ஜாஸ்தியான பலனை யடையலாம்.

௭. நேரான கைத்தொழில் முயற்சிகள் அல்லாமலும் நம்முடைய கிராமவாசி மற்றொரு விதமான ஏகோபித்த கூட்டு வியாபாரச்சங்கத்தை ஸ்தாபித்து, அதைக் கொண்டு சுதேசபிமானத்தின் பொருட்டும், இலாபத்தின் பொருட்டும், வேலைசெய்யக்கூடும். கிராமாந்தரப் பாங்கிகளை (நாணய சாலைகளை) பற்றி யேற்கனவே மிகுதியாக எழுதப்பட்டிருக்கிறது. ஒரு முயற்சியுள்ள சங்கமானது, நன்றாய் நடத்தப்பட்ட ஏகோபித்த கூட்டுமுதல்வைத்தகிராமாந்தரப்பாங்கியைஸ்தாபித்து, வேலை செய்து வந்தால், அந்தச் சங்கத்திற்கு நல்ல இலாபம் கிடைப்பது மல்லாமல் அதே காலத்தில் ஒரு ஜில்லா முழுவதையும், ஒழுங்கற்ற விதமாகப் பணம் கடன் கொடுப்பதினு லுண்டாகும் தீங்குகளிலிருந்து தப்புவிக்கவும் கூடியதாயிருக்கிறது. சரியான ஜனங்களுக்கு,நியாயமான வட்டிக்கு,நல்ல காரியத்திற்

காகப் பணம் கடன் கொடுப்பதினுல், ஒரு கண்ணிய மான சங்கமானது, ஒரு ஜில்லாவில் கடன்வாங்குவோர் எல்லாரையும் தன்னிடத்திற்கே வரும்படி செய்யக் கூடும். ஆகையினுல், பாங்கியில் கடன்கொடுக்க மறுதளித்த, வீண்செலவு செய்யும் தகுதியற்ற ஜனங்களே சாவுகார்களிடம் போய்ச் சேருவோர்களாய் இருப்பார்கள்.

இது வரையில், தொழில் முயற்சியின் அபிவிருத்திக்கியலுந் தன்மைகளைப் பற்றி வெளிப்படையானவைகளை மட்டும், நாம் சொல்லி யிருக்கிறோம். அந்தக் கிராமப் புறக்கடையில், அதோ தோன்றுகிற குன்றுகளில், நிலக்கரி, அல்லது இரும்பு, அல்லது செம்பு, அல்லது மற்றேதேனும் விலை பெற்ற உலோகத்திய சம்பத்தானது, தெரியாமற் புதைந் திருக்கலாம். ஆனுல் இவைகளைக் கண்டுபிடிப்பதற்கு விசேஷித்த ஞானம் தேவையாக விருக்கிறது. விசேஷித்த ஞான முடையவர்களை எங்கே காண்பது? இந்த விஷயத்திலும், கிராமவாசி தன் குமாரனை ஸர்க்கார் வேலையிலும், விவகார சாஸ்திரத்திலும் செலுத்தாமல், இயற்கையைப் பற்றிய அறிவு உண்டாகும்படி அவனைக் கற்பித்து, உலகத்திலே இயற்கையில் மறைந்து கிடக்கும் நிதிகளிற் சிலவற்றைக் கண்டுபிடிக்கும்படி வெளியே அனுப்புகிறதினுல், தன்னுடைய தேசத்திற்கு ஒரு ஒத்தாசையைச் செய்பவனுகக்கூடும். தனக்கு முன்னு விருந்த உத்தியோகஸ்தனை விட அதிகமாய்த் தீர்வை வசூல் செய்யு மொரு சாமர்த்தியமான உத்தியோகஸ்

தன, அல்லது ஹைக்கோர்ட்டில் நேர்த்தியாக வாதிக்கிற கீர்த்திபெற்ற வைக்கீலைவிட, ஒரு நிலக்கரிச் சுரங்கத்திற்கு அருகாமையில் ஒரு இரும்புச்சுரங்க மிருப்பதைக்கண்டுபிடித்துச் சொல்லும் மனிதனே, மிகவும் அதிகமான நன்மையை இந்தியாவிற்குச் செய்கிறவன் ஆவான். நம்முடைய கிராமவாசி யிடத்தில், சாஸ்திரக் கல்வியில் இந்தியாவில் ஆரம்ப வித்தியா பட்டம் பெறுகிற வரையில் தன்னுடைய குமாரனை,- அச்சிறுவனுக்குப் புத்தியுக்தி யிருக்கிற தென்று வைத்துக் கொண்டால்,-வித்தையில் அமர்த்துவதற்கு வேண்டிய திரவியமும், பிரியமு மிருந்து, பிறகு அவனை ஐரோப்பா அல்லது அமெரிக்கா அல்லது ஜப்பானுக்கு அனுப்பிச் சுரங்கமறுப்பதைப் பற்றிய சாஸ்திரத்தையும், ரிரச சாஸ்திரத்தையும், மின்தாதுள்ள யந்திர விதிகளையும் கற்றுக்கொள்ளும்படி செய்து, பிறகு, இந்தியாவிற்குத் திரும்பி வரும்படி செய்து, தன்னுடைய தேசத்திற்கும் தனக்கும் தன்னாற் கூடுமான வரையில் நன்மை செய்யும்படி செய்வதற்கும் வேண்டிய திரவியமும் பிரியமு மிருந்தால், அந்தச் சிறுவன் பெரிய விஷயங்களைச் செய்யலா மென்பது அசாத்திய மல்ல.

இந்த விஷயத்தில் ஒத்தாசை செய்ய, இந்தியா கவர்ன்மெண்டார் விருப்பமுள்ளவர்களா யிருப்பது சந்தோஷிக்கத் தக்கதாகவே யிருக்கிறது. ஏனென்றால், 1904-ம் வருஷம் ஜனவரி மாசத்தில், "இந்திய சுதேசிகளுக்காக இராஜாங்கத்தாருடைய சாஸ்தி

ரார்த்தமான உபகாரச் சம்பளங்கள்" என்றவொரு ஏற்பாட்டை அறிக்கை யிட்டார்கள். கைத்தொழில் முயற்சியுடைய தேசங்களுக்குப் போய், அங்கே கைத்தொழிலை அபிவிருத்தி செய்யும் முறைகளைக் கற்கச் சிறுவர்களுக்கு ஒத்தாசை செய்யும் பொருட் டே அந்த உபகாரச் சம்பளங்கள் உத்தேசிக்கப் பட்டிருக்கின்றன. அந்த ஏற்பாட்டின் குறிப்புகள் பின்வருமாறு இருக்கின்றன:—

அந்த உபகாரச் சம்பளத்தின் மதிப்பு:— அந்த உப காரச் சம்பளத்தின் மதிப்பானது வருஷம் ஒன்றுகு 150 பவுனுகை ஏற்படுத்தப் பட்டிருக்கிறது. இதைத் தவிர அந்த மாணுக்கர்கள் கற்கும் வித்தியா சாலைகளுக்குக் கொடுபட வேண்டிய சம்பளங்களும், பிரயாணச் செலவுகளும் கொடுக் கப் படுகின்றன. ஆனால் விசேஷித்த சங்கதிகளில் அதை அதிகப் படுத்துவதற்காகச்செய்யப்படும் பிரேரேபணைகளைப் பற்றி, கவர்ன்மெண்டார் யோஜிப்பார்கள்.

கொடுபடும் இடங்களும் காலங்களும்:— ஒவ்வொரு உபகாரச் சம்பளமும், குறிப்பிட்ட நபர்கள் விஷயத்தில் அதிகப்படுத்தவோ, குறைக்கவோ கூடியதாய், சராசரி, இரண்டு வருஷ காலம் வரையில் கொடுபடத் தகுந்தது.

அந்த உபகாரச் சம்பளங்களை, கிரேட் பிரிட்டனிலாவது ஐரோப்பா கண்டத்திலாவது, அமெரிக்காவிலாவது பெற் றுக் கொள்ளலாம்.

கற்கும் விஷயங்கள்:— விவகார சாஸ்திரம், வைத்திய சாஸ்திரம், காடுண்டாக்குவதைப்பற்றிய சாஸ்திரம், குடித் தனத்திற்குரிய விலங்கின் நோய் தீர்ப்பதைப் பற்றிய சாஸ் திரம், விவசாய சாஸ்திரம், யந்திர சாஸ்திரம், ஆகிய இவை கள் இந்தப் பிரேரேபணையின் நோக்கத்தி லிருந்து விலக்

கப் பட்டிருக்கின்றன. இந்த உபகாரச் சம்பளங்கள், முத லெடுப்பில் வங்காளத்திய சுரங்க மறுக்கும் முயற்சியை ஆதரிப்பதற்காக உபயோகிக்கும்படி பிரேரேபிக்கப் படு கிறது. ஆனல், வேறே யெந்த முயற்சியும் இந்த மாதிரி உதவி செய்யப்பட்டு ஆதரிக்கப் படலாம். சுதேசிகளுடைய கைம்முதலும், முயற்சியும், சம்பந்தப் பட்டிருப்பதும், அல் லது, சம்பந்தப்படக் கூடியதும், கற்பிக்கப் பட்ட மாணக் கன் தன்னுடைய தேசத்திற்குத் திரும்பி வந்தவுடன், தன் னுடைய திறமைக்கும், சாமர்த்தியத்திற்கும் இலக்காய் இருப்பதைக் காண்பதுமான முயற்சிகளே முக்கியமாய்த் தெரிந்தெடுக்கைக்கு ஏற்றவைகளா யிருக்கும்.

உபகாரச் சம்பளம் கொடுப்பதைப் பற்றிய நிபந்தனை கள்:— விக்டோரியா ஸ்டாட்டியூட் 33, 3-வது அத்தியாயம், 6-வது பிரிவின் தாத்பரியப்படி இந்திய சுதேசிகளா யிருப்ப வர்களுக்கு அந்த உபகாரச் சம்பளங்கள் கிடைக்கத் தகுந் தன.

மாணக்கர்களைத் தெரிந் தெடுக்கும் விஷயத்தில், மாணக்கனுடைய திறமை, அறிவு, தெரிந் தெடுக்கப்பட்ட முயற்சியில் அவனுக்குள்ள விசேஷித்த பிரியம், சம்பந்தம் ஆகிய இவைகளைப் பற்றிய ஆலோசனைகளினாலும், இந்தி யாவுக்கு அவன் திரும்பி வந்ததும் அந்த விஷயத்தைப் பற் றியே தன்னுடைய கவனம் முழுவதையும் செலுத்துவதாய்ச் சொல்லும் உறுதிப்பாட்டினாலும் கவர்ன்மெண்டார் நிதானிப் பார்கள். பரீக்ஷையினால், அல்லது போட்டியினால், பெறப் பட்ட வித்தியாபட்டங்களை வகிப்பதைக் கொண்டு தீர்மானி க்கக் கூடாதவிஷயங்களா யிவைகளிருப்பதினால், யாதொரு விசேஷித்த பரீக்ஷையும் அவசியமென்று நினைக்கவில்லை. ஆகையால் யாதொரு பரீக்ஷையும் நடத்தப்பட மாட்டாது. ஆனல் பெயர் குறிப்பிடுவதற்கு முன், ஒரு மாணக்கன் தான்

கற்க வேண்டிய விசேஷித்த முயற்சி விஷயமாய் அந்தச் சமஸ்தானத்தில் கிடைக்கக் கூடிய மிகவும் உத்தமமான சாஸ்திரப் படிப்பைப் பெற்றிருக்க வேண்டும். மேலும் சாஸ்திரப் படிப்புக் கேற்றவனு யிருப்பதைக் காண்பிக்காத வரையில் யாதொரு மாணுக்கனும் அர்ஹ னென்று நினைக் கப்பட மாட்டான்.

வயசு வரையறை யொன்றும் ஏற்பட் டிருக்கவில்லை. சில சந்தர்ப்பங்களில் கவர்ன்மெண்டார் அதை யேற்படுத்த லாம்.

திரும்பிவந்த மாணுக்கர்கள்:— தான் இந்தியாவுக்குத் திரும்பி வந்ததும், கவர்ன்மெண்டாரிடம், அல்லது, ஒரு பிரத்தியேக வர்த்தகக் கூட்டத்தாரிடம், உத்தியோகத்தில் அமர வேண்டு மென்று யாதொரு உடன்பாட்டினுலும், யாதொரு மாணுக்கனும் கட்டுப்பட வேண்டிய தில்லை. அவ னுடைய தொழிற் போக்கைத் தெரிந் தெடுத்துக் கொள்ளு வதாவனது முதலெடுப்பில்,ஐரோப்பாவி லிருந்து அவன் திரும்பி வந்ததும் அவனுடைய சுயேச்சையினுல் தீர்மானிக் கப் படுவதா யிருக்கும். ஏதேனும் சந்தர்ப்பம் உண்டானுல், கைத்தொழிற் பாடசாலையில் உபாத்தியாயராகவாவது, அல் லது, தத்தேசத்திய கைத்தொழில் முயற்சிகளை அபிவிருத்தி செய்யும் விஷயமாய் வேறெந்த முறைமைகளிலாவது அவ னுடைய திறமையையும், அதிகரித்த அறிவையும் உபயோ கித்துக்கொள்ள கவர்ன்மெண்டார் சந்தோஷ முள்ளவர் களா யிருப்பார்கள்.

சுரங்கம் அறுக்கும் முயற்சியை அபிவிருத்தி செய்யும் பொருட்டு அப்படிப்பட்ட ஒன்று, அல்லது, அதிகமான உப காரச் சம்பளங்களுக்காகச் செய்யப்படும் மனுக்கள் முத லெடுப்பில்(டைரக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்டரக்ஷனு'க்கு) வித் தியா இலாகா தலைமை விசாரணைக் கர்த்தருக்கு நேரே

செய்யப்பட வேண்டும். ஒவ்வொரு உபகாரச்சம்பளத்திற் காகவும் மனு செய்துகொள்ளும் ஒவ்வொருவருக்கும் ஏற் கனவே யிருக்கும் கல்வி அனுபோகத்தையும், பயிற்சியை யும், இனி அவர்களுக்குண்டாகுந் தேவைகளையும் பற்றிய முழு விவரங்களையும் தெரிவிக்க வேண்டும். இந்தியாவிற்குத் திரும்பி வந்ததும், தங்களுடைய எதிர்காலப் போக்கில், எந்த வேலையில் அமர அவர்களுக்கு விருப்ப மிருக்கிறதென் பதையும், கூடுமானால் மனுக்களில் தெரிவிக்க வேண்டும். தத்தேச கவர்ன்மெண்டாருடைய சிபார்சின் பேரில், இந் தியா கவர்ன்மெண்டாரால் உபகாரச் சம்பளங்கள் கொடுக் கப்படும்.

இது ஒரு உத்தமமான ஆரம்பம். வங்காளமானது, நிச்சயமாகவே இந்தியாவின் ஒரு மூலையே என்று சொல்லுமா றிருக்கின்றது. ஆனாலும், அந்த மூலையிற் சுரங்க மறுப்பதானது ஏற்கனவே மகத்தான காரிய சித்திகளை அடைந் திருக்கிறது. மேலும், அதிக பல வத்தாயிருக்கக் கூடிய புலங்களிலேயே ஒரு சோதனை யைச் செய்ய ஆரம்பிக்க வேண்டு மென்று எதிர்பார்க் கலாம். ஆயினும், உபகாரச் சம்பளத்தின் நிபந்தனை களில், வங்காளத்தைத் தவிர இந்தியாவின் மற்ற பாகங்களில் வேலை செய்ய உத்தேசிக்கும் மாணாக்கர் களுக்கு உபகாரச் சம்பள மில்லை யென்று சொல்லாம லிருப்பது திர்ப்திகாரமா யிருக்கிறது. இந்தியா கவர்ன் மெண்டாருடைய மேற்சொல்லிய உத்தமமான ஏற் பாட்டினால் சில வருஷங்களுக்குள்ளாகவே, இந்தியா விலுள்ள ஒவ்வொரு ஜில்லாவினுடைய பண வருவாய் களைச் செம்மையாய் அபிவிருத்தி செய்ய அநேக

இந்தியச் சிறுவர்கள் கிளம்புவார்க ளென்று நம்புகி றோம்.

இங்கே நம்முடைய கிராமவாசிகளுக்கு எச்சரிக் கையான ஒரு வார்த்தை சொல்லுவது நலமா யிருக் கும். முந்திய அதிகாரம் ஒன்றில், கைத்தொழில் முயற் சியில் சுதேசாபிமான முடையோன் முயற்சியிற் கோழைத் தனமாயிருக்கக் கூடாதென்று வற்புறுத்தப் பட்டது ஆனால் இங்கே, அதற்கு மாறாக, அவன் ஆராயாமற் செய்யக் கூடாதென்று அவனை வற்புறுத் தலாம். உத்திதேசித்த ஒரு முயற்சியானது இலாப கரமா யிருக்குமென்று நிச்சயமில்லாத தன்மையில், ஒரு ஏகோபித்த கூட்டுவியாபாரச் சங்கத்தை ஸ்தா பிக்கக்கூடாது. அப்படிப்பட்ட துணிகரமான காரியத் திற் சங்கடம் நேரிட்டுக் கைத்தொழிலில் சுதேசாபிமா னமுடையோனுள்பட, பங்குக்காரர்கள் தங்கள்பணத் தை இழந்தால், அந்தச் சுதேசாபிமானி தன்னுடைய ஜில்லாவிற்கு ஒரு நன்மையைச் செய்யாமல் தீங்கையே உண்டாக்கிவிடுவான். தானே முதல்வைக்கும் ஒரு முயற்சி விஷயத்தில் அவனிஷ்டம் போல் நஷ்டத்தை அடையலா மென்றாலும், ஒரு நஷ்டமானது இனி முயற்சி செய்வோர்களை அதைரியப்படுத்தலாம். ஆனால், மற்ற ஜனங்களுடைய பணம் சம்பந்தப்பட் டிருக்கும் காரியங்களில், அவன் விசேஷித்து ஜாக்கிர தையாக விருக்கவேண்டும். ஒவ்வொரு புதிய முயற்சி யிலும் கொஞ்சம் அபாயம் வரவேண்டியதவசியமா யிருக்கிறது. ஏனென்றால் ஏறக்குறைய எப்பொழு

தும், கவனிக்கவேண்டியதாய்க் கணக்குப்பிசகுகளும், எதிர் பாராத விஷயங்களு மிருக்கின்றன. நியாய மான நஷ்டங்களை எதிர்ப்பது ஒரு விஷயமாயும் அதிர்ஷ்டவசமான ஒரு முயற்சியில் யோஜியாம லிறங் குவது முற்றிலும் வேறான மற்றொரு விஷயமாகவு மிருக்கிறது. இந்தியாவில் இப்போதிய நிலைமையென்று நாம் நம்பக்கூடியதாய்க் கைத்தொழில் முயற்சியில் ஒரு விருப்ப முண்டாயிருக்கும் காலத்தில், சிலருக்கு அதிர்ஷ்டவசமான வியாபாரங்களில் ஒரு பித்துண் டாகி, நிதானமில்லாத அநேக தந்திரங்கள் அடிக்கடி ஏற்படுகின்றன. இங்கிலாந்தில் 1720-ம் வருஷத்தில் தெற்கு சமுத்திர வியாபார தந்திரத்தைப் பற்றிக் கேவ லம் அதிர்ஷ்டவசமான பித்துண்டாயிருந்த பொழுது, அநேக முரட்டுத்தனமான ஏகோபித்த கூட்டு வியா பார முயற்சிகள் ஏற்பட்டன. உதாரணமாக அவை களில் ஒன்று ஈயத்திலிருந்து வெள்ளியைப் பிரித் தெடுப்பதாகவும், மற்றொன்று ஸ்பேயின் தேசத்தி லிருந்து கழுதைகளை ஏற்றிக் கொண்டுவருவதாக வும் ஏற்பட்டன. ஆகையால் அதோ ஒரு பெரிய ஆல மரத்தின் நிழலில் உட்கார்ந்துகொண்டு சாத்தியமான தந்திரங்களைப் பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கும் நம்முடைய கிராமவாசி, தான் செய்கிற காரியங்களில் ஜாக்கிறதையாக விருக்கவேண்டும். தனக்கும் தன்னு டைய கிராமத்திற்கும் உண்மையில் இலாபகரமா யிருக்கக்கூடிய வொரு தந்திரம் அவனுடைய மன தில் தோன்றினல், அதை ஜாக்கிரதையாகத் தன் மன

திற்குள்ளே பரிசோதித்துப் பார்க்கக் கடவன். தன்னுடன் சேர விசையும்படித் தான் செய்யக்கூடிய தன்னுடைய அயலாருடன் அநேகந் தரம் கவலையோடு யோஜிக்கக் கடவன். அந்தத் தந்திரத்தை விவரமாய் ஜாக்கிரதையோடு கற்பிதஞ் செய்து, அவசியமானால், விசேஷித்த ஞானமுடையவர்களுடைய யோஜனைகளைத் தெரிந்துகொள்ள நாடக் கடவன். பிறகு தனக்கு முன்னால் புலப்படும் தான் போகவேண்டிய மார்க்கத்தைச் செவ்வையாகப் பார்த்து நிச்சயமாய்க் காரியசித்தி யுண்டாகுமென்று உணரும் பொழுது அந்த முயற்சியில் இறங்கக்கடவன். அப்பொழுதும் அது நிச்சயமாய்க் காரியசித்தியை அடையுமென்ற தைரியமான தீர்மானத்துடன் இறங்கக் கடவன்.

கிராமங்களில் மட்டும் இந்தியவாசி, தொழில் முயற்சியில் ஊக்கமாய்ச் சம்பந்தப்பட வேண்டியதென்ற கடமை யில்லை. ஆனால் கிராமத்திலேதான் கைத்தொழில் முயற்சியின் அபிவிருத்தியைப் பற்றி முக்கியமாய்ப் போதிக்க வேண்டியது அவசியமாக விருக்கிறது. அங்கே சீர்திருத்தம் மிகவும் குறைவாகவும், அங்கே கைத்தொழில் அபிவிருத்திக்கு வேண்டிய பொருட்பாடங்கள் மிகவும் சொற்பமாகவு மிருக்கின்றன. இந்திய நகரங்களிற் சில தொழில் முயற்சிக்குரிய உத்தமமான சாதகங்களைச் செய்துகொண்டிருக்கின்றன. ஹூக்ளி நதி வழியாகக் கல்கத்தாவை யணுகும் வழியானது, புதிதாய் வருகிற ஒருவருக்கு, மேற்குத் திசையில், அல்லது, அதிமேற்குத்

திசையில் மகத்தான கைத்தொழில் முயற்சி நடக்கும் ஓரிடத்திலிருந்து வருகிறவருக்குங் கூட், அந்த நகரத்தின் கைத்தொழில் முயற்சியின் மகத்துவத்தைப் பற்றிய ஒரு கருத்தானது படத்தக்கதாயிருக்கிறது. அந்த நதியின் இரு கரைகளிலும் வைக்கப்பட்டிருக்கிறவைகளும் கைத்தொழிற் சாலைகளுக்கு அறிகுறிகளா யிருக்கிறவைகளுமான பிரமாண்டமான புகைப்போக்கிகள் அந்தக் கைத்தொழிற் சாலைகளின் மகத்துவத்தைப் பற்றிய பிழையுறாத சாட்சியமாக விருக்கும்படி அவ்வளவு மண்டலமான புகையைக் கொண்டுவந்து தள்ளுகின்றன. அவைகள் கல்கத்தா நகரவாசிகளுக்குள் "புகைத் தொந்தரவை" ஒரு கவலையான விஷயமாகச் செய்துவருகின்றன. பம்பாயும் அதற்கருகிலுள்ள நகரங்களும் இத்தேசத்தின் மேல்பாகத்தில் நடக்கும் மகத்தான விஷயங்களுக் கறிகுறியாக விருக்க, கான்ப்பூரானது அதனுடைய பஞ்சு யந்திர சாலைகளினுலும் அதனுடைய மயிரக யந்திர சாலைகளினுலும், அதனுடைய சவர்க்கார (சோப்பு) வேலைகளினுலும், அதனுடைய பதமிட்ட தோல் வேலைகளினுலும், மற்ற நகரங்களுடன், வட திசையில் நடக்கும் மகத்தான காரியங்களுக் கறிகுறியாக விருக்கின்றது. இந்தியாவின் கிராமங்களுக்கு வேறுன அதன் நகரங்களிலேயே பிரதானமாய் மகத்தான விஷயங்களை—இப்பொழுது அங்கே யிருப்பதைவிட மிகவும் அதிகமான விஷயங்களை—எதிர்பார்க்கவேண்டும். படித்த மனிதர்கள் கூட்டங் கூட்

டமாய்ச் சேர்ந்திருக்கிற இடமாயும் ஜீவன திட்டமானது நாட்டுப்புறங்களி லிருப்பதைவிட மிகவுமுயர்ந்ததாயிருக்கிற இடமாயும் கைதேர்ந்த வேலைகள் இடைக்கக்கூடியதும் அபிவிருத்தி செய்யக் கூடியதுமான இடமாயும், வீடுகளும், கடைகளும், தெருக்களுங் கூட, அன்னியதேசத்தார்களுடைய முயற்சியிலுண்டான சாமான்களினல் கூக்குரலா யிருக்குமிடமாயும் இருக்கிற நகரங்களிலேயே, அறிவில் முதிர்ந்த நகரவாசிகள், பெரிய கைத்தொழில் தந்திரங்களிலும், பெரிய வர்த்தகத் தந்திரங்களிலும், ஒழுங்குபடுத்துவோர்களாகவாவது, அல்லது பங்குக்காரர்களாகவாவது, தங்கள் திறத்தைச் செய்யத் தீர்மானித்துக் கொண்டு, இந்தியாவானது மற்ற தேசத்தார்களுக்குச் சாத்தியமாயிருப்பதைத் தானும் செய்யக் கூடுமென்று இந்தியாவி லறிவிக்கச் சங்கற்பித்துக் கொள்ளவேண்டும். இந்தியப் பிரபுவானவர், தம்முடைய கைநாற்காலியில் உட்கார்ந்துகொண்டபடியே தம்முடைய அறையைச் சுற்றிலும் நோக்கி அதனுடைய நிலைமையை ஆலோசித்துப் பார்க்கக் கடவர். அன்னியருடைய விலாசம் (அது இந்தியாவிற்கு "மிருகக் குறி" யாக விருக்கிறது) இங்கே யிருக்கிறது, அங்கே யிருக்கிறது, எங்கேயு மிருக்கிறது. தம்முடைய பக்கத்திலிருக்கிற விளக்கு, ஜர்மானியாவிற் செய்யப்பட்டதாயும், சிம்னியானது (புகைப் போக்கியானது) ஆஸ்திரியாவிற் செய்யப்பட்டதாயும், எண்ணெய் உருஷியாவி லுண்டானதாயும், அந்த

விளக்கைக் கொளுத்தின நெருப்புக் குச்சியானது சுவீடனிலாவது, ஜப்பானிலாவது செய்யப்பட்டதாயும் அலமாரியில் டிக், டிக், என்று சப்திக்கிற கடிகாரமானது அமெரிக்காவிற் செய்யப்பட்டதாயும், தம்முடைய சட்டைப்பையில் டிக், டிக், என்று சப்திக்கிற கைக்கெடிகாரமானது ஜீனிவாவிற் செய்யப்பட்டதாயும், தம்முடைய மசிக்கூட்டிலிருக்கிற மசியானது லண்டன் நகரத்திற் செய்யப்பட்டதாயும், எழுதுகோலி லிருக்கும் அலகானது பர்மிங்ஹாமிற் செய்யப்பட்டதாயும், அவருடைய சட்டைப்பையிலிருக்கும் இலேகினியானது (Pencil) பவேரியாவிற் செய்யப்பட்டதாயும், தம்முடைய முதுகில் அணிந்துகொண்டிருக்குஞ்சட்டையின் சகலாத்தானது யார்க்ஷையரிற் செய்யப்பட்டதாயும், அவருடைய காலில் அணிந்திருக்கும் பாதகோசங்கள் ஜர்மானியாவிற் செய்யப்பட்டதாயும் இருக்கிறது. அவருடைய மனைவி சற்று முன்னேதான் ஒரு இரவிக்கையைக் கத்தரித்த கத்தரிக்கோல் ஜர்மானியாவில், இல்லாவிட்டால், ஷெப்பீல்டிற் செய்யப்பட்டதாயும், பஞ்சு வஸ்திரமானது மாஞ்சேஸ்டரில் செய்யப்பட்டதாயும், அப்படியே அதை அவள் தைத்துக்கொண்டிருக்கிற நூலானதிருக்க, ஊசியானது பர்மிங்ஹாமிற் செய்யப்பட்டதாயும், அவள் அணிந்திருக்கும் கஞ்சுகத்தின் பட்டுத் துணியானது பிரான்ஸிற் செய்யப்பட்டதாயு மிருக்கிறது. புருஷன் கடித்துக்கொண்டிருக்கிற இரொட்டியானது (biscuit) இங்கிலாந்திற் செய்யப்பட்டதாயும், அதை வைத்துக்

கொண்டு சாப்பிடும் பீங்கானனது ஸ்டாபோர்டுஷைய ரிற் செய்யப்பட்டதாயும், அவருடைய முழங்கையி னருகி லிருக்கும் சோடாத்தண்ணீர் சாப்பிடும் கண் ணாடிக் கிண்ணமானது(tumbler) ஆஸ்திரியாவிற் செய் யப்பட்டதாயு மிருக்கிறது. சுவற்றில் வைத்திருக்கும் தைலவர்ணப் படங்கள் ஜர்மானியாவிற் செய்யப்பட் டனவாயும், அவைகளுடைய சட்டங்களின் திருகாணி கள் பர்மிங்ஹாமிற்செய்யப்பட்டனவாயுமிருக்கின்றன. மேற்கண்ட ஜாப்தாவானது, ஒரு விதத்திலும் பூரண மானதல்லவாயினும், இந்தியாவின் அன்னியாதீனத் தை ஞாபகப்படுத்துவதற்குப் போதுமானபடி நீண் டதாகவே யிருக்கிறது. இன்னும் ஒரு உதாரணத் தை நாம் ஆலோசிப்போம். சிறிய மாணுக்கர்கள் அணியணியாய் வெளியே வந்துகொண்டிருக்கும் சம யத்தில், இதனை வாசிப்போர் ஒரு பள்ளிக்கூடத்தின் வழியாய்ச் செல்லுவதாக வைத்துக்கொள்ளுங்கள். ஒவ்வொரு மாணுக்கனுடைய கையிலும், அவனு டைய புத்தகசாலை முழுவதும்—ஒரு முதற் பாட புஸ்தகமும், ஒரு பால கணிதமும், ஒரு பூகோள சாஸ்திர பிரதம பாடமும், ஒரு கற்பலகையும், அவ னுடைய வீட்டு அப்பியாசத்திற்காக கையால் எழு தும் ஆறு பைசா விலையுள்ள ரூல்போட்ட புஸ்தகம் ஒன்றும்-இருக்கும். அச்சிறு மாணுக்கர்களி லொரு வனை இதனை வாசிப்போர், வழியில் நிறுத்தி வைத்துக் கொண்டு அந்த அப்பியாச புஸ்தகத்தைப் பரிசோதிப் பதாய் வைத்துக்கொண்டால், அதன் முன்பக்கத்தில்

"ஆஸ்திரியாவிற் செய்யப்பட்டது" என்ற வார்த்தைகள் அச்சிடப்பட்டிருப்பதை அவர் காண்பது ஏறக்குறைய நிச்சயம். இந்தியாவில் பொருள் வருவாய்கள் இப்பொழுது அவைகளிருக்கிறபடி யிருந்தும் இந்தியாவில் பள்ளிக்கூடத்திற்குப் போகும் மாணாக்கர்களின் உபயோகத்திற்காக கடிதாசி அப்பியாச புஸ்தகங்களை ஐரோப்பாவிலுள்ள ஒரு தேசத்திலிருந்து அனுப்புதல் சாத்தியமாகவிருக்கிற இந்த விஷயமானது முற்றிலும் விபரீதமாக விருக்கிறதென்பது நிச்சயம். அப்பியாச புஸ்தகங்கள், அவற்றின் தன்மையில், அற்ப விஷயங்களா யிருக்கலாம். ஆனால் அவைக ளிருக்கிறபடி, இந்திய சக்கரவர்த்தியின் படம் ஒன்று மகுடமாயும், "ஆஸ்திரியாவிற் செய்யப்பட்டது" என்ற வார்த்தைகள் கட்டுரையாகவும் விபரீதமாக அச்சிடப்பட்டிருக்கிற ஆடம்பரமான அட்டைகள் போட்டுக் கட்டப்பட்டிருப்பதை (பையிண்டு செய்யப்பட்டிருப்பதைப்) பார்த்தால், அவைகள், இந்தியாவில் கடிதாசிசெய்யும் முயற்சியானது எவ்வாறு இருக்க வேண்டியதோ அதுபோல இல்லாமலிருப்பதைப்பற்றி எங்கும் நிறைந்த ஞாபகக் குறிகளா யிருக்கின்றன. கடிதாசி செய்யும் முயற்சியானது வங்காளத்தில் அதிகமான பரிமாணத்தை யடைந்திருக்கிறது. ஆனாலும், 1903—04 இந்த வருஷத்தில், சென்னப்பட்டணத்திய பொருட் காட்சியில் கடிதாசி விஷயமாய் ஒரே காட்சிப் பொருள்தானிருந்தது. இந்த ஒரே காட்சிப் பொருளும், க

டைத் தெருவில் சாதாரணமாய் உபயோகிக்கும் மஞ்சள் நிறமான கடிதாசியைவிட அதிக நல்ல மாதிரியாக விருக்க வில்லை. ஒவ்வொரு இராஜதானியிலும், நன்றாய்ப் பராமரிக்கப்பட்ட கடிதாசிசெய்யுஞ் சாலைகளிருப்பதற் கிடமிருக்கிறது. காரியங்களை ஒழுங்காய் நடத்திவந்தால் இந்தியாவிலுள்ள ஒரு தேவையை நிரப்புவதில் மற்றுக் கண்டத்தி லிருக்கும் கைத்தொழிலாளிகள் போட்டிபோடுவது அசாத்தியமாய்விடும். அன்னிய இறக்குமதிகளைக் குறித்து நாம் மேலே சொல்லியிருக்கும் உதாரணங்கள் யாருக்கும் போதுமானதாயிருக்கும். இன்னும் அநேக திர்ஷ்டாந்தங்கள் வேண்டுமானால், கடைத் தெருக்களிலும், ஐரோப்பியர் கடைகளிலும், தெருக்களிலுமே அவைகளை நிறையக்காணலாம். இதைச் சீர்திருத்த ஏதேனும் செய்யவேண்டும். அப்படிச்செய்வதற்கு நகரங்களிலிருக்கும், சுதேசாபிமானமும் முயற்சித்துணிவுமுள்ளவர்களே முன்னிற்கவேண்டும். அவர்கள் புதிய சாமான்களை உண்டாக்குவதற்குத் தங்களைத் தாங்களே தூண்டிக்கொள்ளவேண்டும். இந்திய நாஷனல் காங்கிரஸ் மகாசபையானது அதன் கைத்தொழிற் பொருட்காட்சிகளினால் ஒரு உத்தமமான பிரவர்த்தியைச் செய்திருக்கிறது. அதனங்கத்தினரிற் சிலர் இன்னும் அதிகமாய் பிரவர்த்தித்துப் புதிதாயும் இல்லறத்திற்குரியதாயு மிருக்கும் இந்திய முயற்சிகளை மெய்யாகவே ஆரம்பிக்க ஏகோபித்த கூட்டு வியாபாரத்தில் ஒரு கிரியாபாகத்தை எடுத்துக்கொள்ள வேண்

டும். இந்தியாவில் சரக்குகளை இறக்குமதி செய்வது இலாபகரமா யிருக்குமானால், இல்லற முறைக்கேற்ற விதமாய் அவைகளை இந்தியாவிலேயே உண்டாக்கினால் இன்னும் அதிகமாய் இலாபகரமாகவே யிருக்க வேண்டும்.

மிகுதியான காரியம் செய்யப்பட்டிருக்கிறது. ஆகிலும் செய்திருப்பதெல்லாம் கடைசியில் ஒரு ஆரம்பமாக மட்டுமிருக்கிறது. 1903-04 இந்த வருஷத்திய சென்னைப்பட்டணப் பொருட் காட்சியானது எல்லா மாதிரியான கைத்தொழில் முயற்சிகளிலும் இந்தியாவானது அடைந்திருக்கும் மகத்தான தேர்ச்சியைப் பற்றி உள்ளபடியே அதிசயமானவொரு சாட்சியமாக அநேகம் பேர்களுக்கிருந்தது மல்லாமல், இந்தியாவானது ஒவ்வொரு வகையான கைத்தொழில் வேலைகளிலும் உத்தமமான சாமான்களைச் செய்யக்கூடுமென்பதை ருஜுப்படுத்திற்று. ஆனால் இன்னும் செய்ய வேண்டியதுமிகுதியாகவிருக்கிறது. இன்னமும்,இந்தியாவானது தன்னுடைய இரும்பு, எஃகு இவைகளை அபிவிருத்தி செய்யவேண்டியிருக்கிறது. தன்னுடைய சொந்தக் கண்ணாடி செய்யுஞ் சாலைகளை ஏற்படுத்த வேண்டியிருக்கிறது. தன்னுடையசொந்தமலைவீழ் அருவிகளைக் கையாளவேண்டியிருக்கிறது. தன்னுடைய சொந்தக் கைத்தொழிலை அதியுத்தமமான திட்டத்திற்குக் கொண்டுவரவேண்டி யிருக்கிறது. தன்னுடைய சொந்த அற்பமான ஒவ்வொரு தேவையையும் தானே நிரப்புகிறவரையிலும், அன்னியதேசத்

திலிருந்து இறக்குமதிசெய்பவன் தன்னுடைய தொழில் தொலைந்துபோயிற்றென்று காண்கிற வரையிலும், இந்தியாவில் கைத்தொழிலைப் பற்றிய உத்தமயுகமானது பிறக்கமாட்டாது. இஷ்டப்பிராப்தியானது ஒரு மகத்தானவிஷயமா யிருக்கிறது. அந்த முடிவை நிறைவேற்றும் விஷயத்தில் எவ்வளவு கொஞ்சமேனும் ஒத்தாசை செய்கிற இந்தியவாசியானவன் தன்னுடைய தேசத்தாரால் நன்கு மதிக்கப்படுவதற்கு அர்ஹனாவான்.

## VI
## இந்தியருடைய கலைஞானம்.



நம்முடைய கிராமவாசி தன்னுடைய கிராமத்திற்குத் தான் கைத்தொழிலாலாகும் பிரயோஜனத்தைக் கொஞ்சம் கொடுக்கக்கூடிய பற்பல மார்க்கங்களைப் பற்றி இன்னும் யோஜித்துக்கொண்டிருக்கையில் நாம் கொஞ்ச நேரம் இந்தியருடைய கலைஞானமாகிய முக்கியமான விஷயத்தில் கவனத்தைச் செலுத்துவோம். கலைஞானத்தை வெவ்வேறு முறைகளில் யோஜிக்கலாம். உதாரணமாக சிற்ப சாஸ்திரமானது மிக மேன்மையான வொரு கலைஞானமாயிருக்கிறதுமல்லாமல், அநேக நூற்றாண்டுகளாக இந்தியாவானது மேன்மையடைந்திருக்கிற ஒருகலையாகவுமிருக்கிறது. வடதிசையிலுள்ள சிறப்பானமகம்மதியப் பள்ளிவாசல்களும், சிதைந்துபோன கட்டடங்களும், தென்திசையிலுள்ள, சிலவிடங்களில் அநாகரீகமாக விருந்தாலுஞ்சிறப்பாக விருக்கும் இந்துக்களுடைய கோவில்களும், சிதைந்துபோன கட்டடங்களும், உலகத்திலுள்ள அதிசயங்களிற் சேர்ந்தவைகளா யிருக்கின்றன. இன்றைக்கும், கூலிவேலைசெய்யும் கல்லுளித் தச்சனும், சிங்காரமான சித்திரக்காரனும், புராதனமான கட்டடங்களை அலங்கரிக்க உதவிய கலைஞானக்கைத் திறமையை மிகுதியாய்க் காட்டுகிறார்கள். ஆனால் கோவில்களும் பள்ளிவாசல்களும், அவைகளிருக்குமிடத்திலிருந்து பெயர்த்தெடுத்துக் கொண்டு போகமுடியாதவைகளா யிருப்பதினால் நாம் பேசிவரும் வர்த்

தக விஷயத்தில் அவைகளுக்கு யாதொரு சம்பந்தமு மில்லை. கோவிலையாவது, பள்ளிவாசலையாவது, விலைக்கு வாங்கிப் பெயர்த்தெடுத்துக் கொண்டுபோக முடியாது. ஆகையால் நாம் பேசிவரும் விஷயத்தைப் பற்றிய வரையில், இந்தியருடைய கலைஞானத்தை இரண்டு பிரிவின்கீழ் யோஜிக்கவேண்டும்:—முதலாவது, சித்திரங்களினால் வெளிப்படும் சுயமான கலைஞானம்; இரண்டாவது, மரத்தைக்கொத்திச் சித்திரவேலை செய்யப்பட்டவைகளும், உலோகங்களில் அலங்காரமாய் வேலைசெய்யப்பட்ட சாமான்களும், சித்திரத்தையல் வேலைசெய்த வஸ்திரங்களுமாகிய இவைகளைப் போல், கலைஞானத்தினால் உண்டாக்கப்பட்டவைகளினால் வெளிப்படும், கைத்தொழில் முயற்சியில் பிரயோகிக்கப்படும் கலைஞானம். இந்தியாவில் கைத்தொழில்முயற்சியினால் கலைஞான பூர்வமாய்ச் சிங்காரமாய்ச் செய்யப்பட்ட சாமான்களினால் வெளிப்படும் கலைஞானமானது, அதியுன்னத ரீதியான மேன்மையைப் பெற்றிருக்க இந்தியாவில் சித்திரங்களினால் வெளிப்படும் கலைஞானமானது தீர்மானமாகவே அற்பமா யிருக்கிறது.

இந்தியாவில் சித்திரப்படத்திற் காணும் கலைஞானத்தைப்பற்றி நாம் முதல்முதல் யோஜிப்போம். சித்திரமெழுதுவதையே தொழிலாகக் கொண்டு இந்தியாவிலிருக்கிற சித்திரக்காரர்கள் அநேகமாய்ச் சித்திரப்பிரதிமைப் படங்கள் எழுதுவோர்களா யிருப்பது மல்லாமல், தங்கள் முன்னோர்களுடைய வாசஸ்

தலங்களின் சுவர்களில், தங்களைத் தாங்களே பார்த்துக்கொள்ள விரும்பும், இராஜாக்கள், ஜமீன்தார்கள் இவர்களுடைய சித்திரப் பிரதிமைப் படங்களை எழுதிக்கொடுத்து அற்ப ஜீவனம் செய்து வருகிறார்கள். அந்தச் சித்திரப் பிரதிமைப் படங்கள் ஒரே விதியாய், "கலைஞான வேலைகள்" என்று சொல்லப்படுவதற்குஅர்ஹமற்றவைகளாக இருக்கின்றன. உறுப்புகள் சுந்தரமாயில்லாமலும், பார்வையானது ஜீவகளையில்லாமலு மிருக்கிறது. ஆனால் அந்தச் சித்திரப் பிரதிமைப் படமானது சந்தேகமற்ற பிரதியாக விருந்தாலும், முண்டாசும், தங்கஜரிகை வைத்துத் தைத்த மேலங்கியும அழகாயும் பகட்டாயு மிருந்தாலும், அந்தச் சித்திரப் பிரதிமைப் படமானது கிரமமாய் அங்கீகரிக்கப்பட்டு முன்னோர்களுடைய சுவற்றில் தொங்கவைக்கப்படுகின்றது. யோக்கியதையுள்ள சித்திரக்காரர் யாரேனுந் தெரியாமலிருக்கக் கூடுமானல் அவருக்கு யாதொரு தப்பிதத்தையும் செய்ய இதனை எழுதினோர் பின்னிடுவர். ஆனால் சித்திரப்படப் பொருட் காட்சிக்கு இந்திய சித்திரக்காரர்கள் உதவிய சித்திரங்களும், இந்திய நாடகசாலையிலுள்ள சித்திரக் காட்சிகளும், வர்ணம் வைக்கப்பட்ட திரைச்சீலைகளும், இந்திய சித்திரசாலைகளி லிருக்கும் இந்திய சித்திரப் படங்களும், இந்திய பிரபுக்களின் வீடுகளில் சுவற்றில் தொங்கவைத்திருக்கும் இந்திய சித்திரப் படங்களுமாகிய, ஒருவன் பார்க்கிற இந்திய சித்திரப் படங்களைக் கொண்டு நிதானித்தால், இந்தி

யாவிலுள்ள சித்திரக் கலைஞானமானது, பொதுவாய் யோஜிக்குங்கால், ஒரு விதத்திலும் மெச்சத்தக்கதா யிருக்கவில்லை யென்பதைவிட வேறு விதமாய்த் தீர் மானிக்கக் கூடியதாயில்லை. இந்தியாவில் ஒரே சித் திரக்காரர், திருவாங்கூர் சமஸ்தானத்திய கீர்த்தி பெற்ற இரவிவர்மா என்பவர் எங்கேயும் மெச்சத் தக்க சித்திரப்படங்களை எழுதி யிருக்கிறார். இந்திய ருடைய அநுஷ்டானத்தையும், இந்தியருடைய அறி வையும் பற்றிய காட்சிகளைச் சித்திரிக்கத் தம் முடைய தூரிகோலை பிரதிஷ்டை செய்திருப்பதால் இந்தியாவிற்கு உத்தமமான வேலை செய்திருக்கிறார். அவர் பிரதிமைப்படம் எழுதுவதைவிட மேலே கிளம்பி, இந்தியருடைய புராதனமான கதைகளை உருபிக்கத்தக்க நானாவிதக் காட்சிகளைத் தம்முடைய மனோபாவத்தினால் சித்திரித்து, கலைஞான "சிருஷ்டி" வேலைகளிற் சித்திபெற் றிருக்கிறார். இந்திய சித்திர வித்தியா சாலையைப் பிரதிஷ்டை செய்திருப்பவராக அவரைச் சொல்லலாம். ஆனால் இரவிவர்மாவைத் தவிர—அவருடைய சகோதரர், ஒரு காரியம், அவரு டைய அடிச்சுவட்டை அநுசரித்திருக்கிறார்—கொஞ்ச மேனும் மதிக்கத்தக்க யோக்கியதையையுடைய தெரிந்த இந்திய சித்திரக்காரர்கள் சிலரே யிருக்கி றார்கள். பம்பாயில் மதிக்கப்படத்தக்க வேலைசெய்கிற ஒரு பார்ஸியோ, இரண்டு பார்ஸியோ யிருக்கிறார் கள். மேலும், வங்காளத்தில் புகழத்தக்க சில சித்தி ரக்காரர்களு மிருக்கிறார்கள். உதாரணமாக ஸ்ரீ காங்

குள்[1] என்ற வங்காளத்திய சித்திரக்காரர் ஒருவர் 1903-04 இந்த வருஷத்திய சென்னைப்பட்டணம் பொருட் காட்சியில் உவப்பான ஒரு சிறிய சித்திரப் படத்தைத் தெரியக்காட்டினார். அது ஸ்நானகட்டத்தைக் குறிப்பிட்டது. அதன் பொதுவான காட்சியும், அதில் ஜலம் இருப்பதுபோன்ற தோற்றம் பலித்திருப்பதும், மதிக்கத்தக்க சிறந்த விவேகத்தின் காரியமென்பதைக் காட்டிற்று. மற்றொரு வங்காள சித்திரக்காரர் ஐரோப்பா கண்டத்திய சித்திரசாலையில் ஒரு மாணக்கரா யிருக்கையிலேயே, சில வருஷங்களுக்கு முன் சம்மானங்களைப் பெற்றார். ஆயினும், இந்தியாவில் அவருடைய வேலையானது இதுவரையில் அதற்கு மேல் யாதொரு கீர்த்தியையும் அவருக்கு உண்டாக்கவில்லை. எல்லா விதமாயு மாலோஜித்துச் சொல்லுங்கால், திருவாங்கூர் சமஸ்தான சித்திரக்காரரே இந்தியா முழுவதிலும் ஒரு கீர்த்திபெற்ற சித்திரக்காரராக ஏறக்குறைய தன்னந்தனியனாய் இருக்கிறாரென்று சொல்லலாம். அவருடைய வேலையும், மற்றும் சில சித்திரக்காரர்களுடைய வேலையும் இல்லாதிருக்குமானால், இந்தியாவில் சித்திரங்களினால் வெளிப்படும் கலைஞானமானது சமுத்திரத்தில் அழுந்திப்போய் இருக்குமென்று மறுபடியும் சொல்லலாம்.

இந்தியாவில் சித்திரக் கலைஞானத்தின் இளப்பத்திற்கு அநேக காரணங்க ளிருக்கின்றன. முதலாவது, இந்தியாவும், சீனாவும், ஜப்பானும், கீழ் திசையிலுள்ள மற்ற தேசங்களும், மேற்றிசையில் அபிவிருத்

தியா யிருக்கும், மிகவும் நாகரீகமான ரீதியான கலை ஞானத்தோடு சமீப காலத்திற்கு முன் வரையில், சம்பந்தமுண்டாகச் சமயம் வாய்க்க வில்லை. உலக முழுவதிலும், சித்திரக் கலைஞானமானது, ஒரு காலத்தில், கீழ்த்திசையில் இன்னமும் வழங்கிவருகிற செய்பாகமில்லாத ரீதியாகவே இருந்தது. ஆனால் ஒரு புதிய சீர்திருத்தமான ரீதியான கலைஞானமானது புராதனமான கிரேக்கு தேசத்தில் பிறந்தது. அங்கே சுபாவமாகவே கலைஞானமுள்ள ஜனங்களிடத்தில், கலைஞானமானது அபிவிருத்தியடைந்தது. ஐரோப்பாவில் பெரும்பான்மையான பாகமானது கிரேக்சர்களுடைய வித்தியாதிகாரத்திற்குக் கீழ்ப்பட்டுவந்தபடியால், ஐரோப்பா முழுவதிலும் கலைஞானமானது படிப்படியாய் இப்போதிய உயர்ந்த ரீதிக்குக் கொண்டுவரப்பட்டது. ஆயினும் இதற்கிடையே, கிரேக்கருடைய அதிகாரமானது இந்தியாவிலும், சீனுவிலும், ஜப்பானிலுமுள்ள சித்திரக் கலைஞானத்தில் யாதொரு காரியத்தையும் செய்யவில்லை. ஆகையினால் இந்தக் கீழ் திசையி லிருக்கும் தேசங்களிலுள்ள சுதேசியமான கலைஞானமானது சுமார் மூவாயிரம், அல்லது நாலாயிரம் வருஷங்களுக்கு முன்னிருந்ததைப் போலவே இன்றைக்கு மிருக்கின்றது. ஆகையால் இன்றைக்கும் வட இந்தியாவின் "சித்திரக்காரன்" உறுப்புகள் தீர்மானமாகவே அமானுஷீக சாரீரமாயும், ஆனால் முகச் சாயலானது ஒரு விதத்திலும் தெய்வீகமா யில்லாமலு மிருக்கிற தெய்வங்

களை இயல்புக் காட்சிக்குரிய பிரமாணங்களுக்கு விரோதமாகக் கூட்டமாய்ச்சேர்த்துத் தன்னுடைய சுவர்களில் சித்திரமெழுதுகிறான். ஆகையினால் ஐரோப்பாவில் சித்திரப் பிரியமுள்ள சாமானியமான ஒரு குழந்தையினிடத்தில் உடன்பிறந்ததாய்க் காணப்படுகிற, உயர்ந்த கலைஞானத்தில் பரம்பரையாய் இயற்கை யறிவு யிருப்பதுபோல் யாதொரு இயற்கை யறிவு மில்லாமலே இந்தியக் குழந்தை வித்தியாப்பியாஸத்தை ஆரம்பிக்கிறது.

இந்தியாவில் இன்றைக்கும் சித்திரக் கலைஞானமானது மிகவும் மெதுவாய் அபிவிருத்தியாவதற்கு ஒரு காரணம் என்னவென்றால்; இந்தியக் குழந்தையானது தன்னுடைய உருசியை அபிவிருத்தி செய்யக்கூடியசித்திரங்களைப் பார்க்கிறதே யில்லை. அப்படிப் பார்த்தாலும் அவை மிக சொற்பமாகவே யிருக்கும். சுமாராய் நல்ல ஸ்திதியிலிருக்கிற பெற்றோர்களையுடைய ஆங்கிலேயக் குழந்தையானது தன்னுடைய சொந்த வீட்டின் சுவர்களிலும், தன்னுடைய விளையாட்டுத் தோழர்களுடைய வீடுகளின் சுவர்களிலும், சிறந்த சித்திரங்களைப் பார்க்கிறது. அவன் தன்னுடைய தயார், அல்லது, ஆயாளுடன் பிரதிதினம் சாரி போகும் பொழுது, அவன் சித்திரசாலைகளின் ஜன்னல்களண்டையில் நின்று கலைஞான மனோபாவங்களை உட்கொள்ளுகிறான். அவனுக்குக் கொஞ்சம் வயது முதிர்ந்தவுடன் அவன் இராஜாங்கத்து சித்திர கூடத்திற்கும், மற்ற சித்திரகூடங்களுக்கும், ஒருவேளை, ஸர்க்

கார் சர்வகலாசாலையின் வருஷாந்தரப் பொருட் காட்சிகளுக்கும் அழைத்துக்கொண்டு போகப்படுகிறான். இதற்கும், இந்தியாவில் சித்திரமில்லாத பாலைவனம் போன்ற வாழ்நாளுக்கும் எவ்வளவு வித்தியாச மிருக்கின்றது. சாமானிய இந்தியனுக்கு சித்திரத்திலுள்ள கற்பனைகள், பைசாசமான தெய்வங்களிலும், ஊமைச் சேஷ்டையான மிருகங்களிலும், பெரிதாக்கப்பட்ட ஒளிப்படங்களிலும், மனோபாவமில்லாத ஐரோப்பிய ஸ்திரீகள், ஜர்மானிய சக்கரவர்த்தி, ஸ்வித்ஸியன் ஏரிகள் ஆகிய இவற்றைச் சித்திரித்த விலைசரசமான தைலவர்ணப் படங்களிலும் பங்கிடப்பட்டிருக்கின்றன. அவன் ஞான அருட்சி யற்றவனா யிருக்கிறதில் என்ன ஆச்சரிய மிருக்கிறது! அவன் பார்க்கிற ரீதிகளைவிட மேலாக அவனுடைய ஞானஅருட்சியானது உதிக்காவிட்டால், அதில் என்ன ஆச்சரிய மிருக்கிறது! அவன் வர்ணம் வைக்கும் பொழுது தைலவர்ணப் படங்களைப் பார்த்தும், அவன் சித்திரத்தைத் திட்டம் செய்யும் பொழுது ஒளிப்படங்களைப் பார்த்தும் பிரதி எழுதுகிறான். சாமானிய இந்தியன் தான் தைலவர்ணம் வைக்கும் பொழுது கூடியவரையில் தைலவர்ணப் படங்களைப் போலத் தன்னுடைய சித்திரமானது காணப்பட்டால் தான் பூரணமான காரியசித்தியைப் பெற்றிருப்பதாக நினைக்கிறதிலும் இலேகினியினால் ஒரு சித்திரப் பிரதிமைப் படத்தைத் திட்டம் செய்யும் பொழுது, ஒரு ஒளிப்படத்தைப் போலிருக்கும்படி செய்திருந்தால், தன்னு

டைய வேலையானது சிலாக்கியமான தென்று தன்னைத்தானே புகழ்ந்துகொள்ளுவதிலும் ஆச்சரிய மொன்று மில்லை! நடக்கிற சங்கதி யிதுதானென்பதை, இந்தியாவில் சித்திரப் பொருட் காட்சிக்கு இந்திய சித்திரக்காரர்களில் பெரும்பான்மையோரால் அனுப்பப்பட்ட சித்திரங்களை ஆராய்ந்தறிந்தோர் யாரும் ருஜுப்படுத்துவார்கள். இந்தியாவில் பற்பல பட்டணங்களில் அப்போதைக்கப்போது நடக்கும் இந்தச் சித்திரப் பொருட் காட்சிகளில், ஐரோப்பியர்களாலும், இந்தியர்களாலும், அநேக, சமராய் நல்ல சித்திரங்கள் வழக்கமாய் அனுப்பப்பட்டுவருகிறபடியால் அப்படிப்பட்ட பொருட் காட்சிகள் கலைஞானத்தை மிகவும் நன்றாய் மதிப்பதற்கு அதிக உதவியாக விருக்கவேண்டும். முக்கியமாய் செய்பாகமில்லாதவும் நாகரீகமில்லாதவுமான படங்களை விலக்குவதில் சங்கத்தார் மிகுந்த கவலை யெடுத்துக்கொண்டால் மிகுந்த உபகாரமாயிருக்கும். இந்தியாவிலுள்ள ஒவ்வொரு பெரிய பட்டணமும், கொஞ்சங் கொஞ்சமாய், ஒரு ஸ்திரமான சித்திரசாலை உண்டாகும்படி செய்யக்கூடுமானல், இந்திய மகாஜனங்கள் தங்களிஷ்டப்படி, அதற்குள் உலாவி வருவார்களானபடியால், இந்தியாவை ஒரு சித்திரமில்லாத தேசமென்று ஏளனம் செய்யப்படாமல் தப்புவிக்க, வெகு சாதனங்கள் செய்து முடிக்கப்பட்டவைகளா யிருக்கும்.

சித்திரக் கலைஞானத்திலுள்ள ஒரு மதிப்பானது சந்தேகமின்றி இந்தியாவை அபிவிருத்தி செய்து

கொண்டு வருகிற விஷயம், சந்தோஷிக்கத் தக்கதே. ஆனால், சித்திரக் கலைஞானத்தி லொரு உருசியை உண்டாக்க வேண்டு மென்று கவர்ன்மெண்டாருக் குண்டாயிருக்கும் நல்ல எண்ணங்களைப் பலிதமாக்க அவர்கள் பிரயோகிக்கும் விதமானது, கலைஞான உணர்ச்சி அபிவிருத்தி யாவதற்கு நிச்சயமாய் ஒரு தடையா யிருக்கலாமென்பது சம்பாவிதம். இந்தியாவில் சித்திரக் கலைஞானத்திலுள்ள மதிப்பானது விசனிக்கத் தக்கபடி குறைவாயிருப்பதை உணர்ந்து கவர்ன்மெண்டார் சில மாகாணங்களிலேனும் சர்வ கலாசாலைப் பிரவேச பரீக்ஷை வரையில் எல்லா வகுப்பிலுமுள்ள ஒவ்வொரு மாணுக்கனும் (Free hand drawing) "கைப்பழக்கமாய் வரைதலை" கற்க வேண்டு மென்று விதி யேற்படுத்தி யிருக்கிறார்கள். கைப்பழக்கமாய் வரைதலானது அதன் வழியில் ஒரு உத்தமமான விஷயமாகவே யிருக்கிறது. அது கலைஞானத்தின் முதலக்ஷரங்களாயும், இலக்கணமாயு மிருக்கிறது. ஆனால் பிரவேச பரீக்ஷையின் வகுப்பு வரையில், கைப்பழக்கமாய் வரைதலை—கைப்பழக்கமாய் வரைதலை மட்டும்— கற்பிக்கும் ஏற்பாடானது உண்மையான கலைஞான மதிப்பிற்குக் கெடுதலாயிருக்கிறது. அவனுடைய பள்ளிக்கூடப் போக்கு முழுவதிலும், கலைஞான விஷயமாய் ஒரு சிறுவனுக்குக் கற்பிக்கப்படும் முறைகளெல்லாம், சதுரங்களும், விருத்தங்களும், இரேகா கணிதத்திற்குரிய மாதிரிகளும், எங்கு மில்லாத புஷ்பங்களும், வரையக் கற்

றுக்கொடுப்பதாகவே யிருக்கிறது. இவைகளைத்தான் பரிசோதகர் பார்ப்பார். இந்திய சிறுவன் பார்க்கிற வஸ்துக்களின் சித்திரப் படங்களும், எதை எழுது வதினால், அவனுக்கு உண்மையான கலைஞானமதிப்பா னது உண்டாகக் கூடுமோ, அப்படிப்பட்ட சித்திரப் படங்களுமாகிய - ஒரு தாலமரத் தோப்பு அல்லது புற்றரையி லிருக்கும் ஒரு பசு மாட்டின் உருவமா னது நேர்த்தியாய் நிழலாற்றி சித்திரிக்கப்பட்டிருந் தாலும் அதை ஒரு அவமதிப்பென்று பரிசோதகர் தள்ளிவிடுவார். இதைப் போன்றவொரு விதமாய் ஆங்கிலேய பாஷையில் ஒரு உருசியை உண்டாக்க வொரு உபாத்தியாயர் எத்தனப்படுவதாக வைத்துக் கொள்ளுவோம்! நடக்கிற நடவடிக்கையை யோஜித் துப் பாருங்கள். சிறுவன் முதல் வகுப்பில் அக்ஷராப் பியாசத்திற்கு ஆரம்பித்து, தன்னுடைய பள்ளிக் கூடப் போக்கு முடியும் வரையில், எழுத்துக் கூட்டு வதையும், இலக்கணத்தையும், கற்றுக்கொண்டு வரு வான். ஒருபொழுது மொரு கதையாவது வாசித் தறியான். காவிய பாடத்தில் ஒரு கவியாவது கற் றறியான். சர்வகலாசாலைப் பிரவேச பரீக்ஷையில் அவன் தேறிவிட்டிருக்கிற வரையில், பாஷையிலுள்ள ஒவ்வொரு வார்த்தையையும் எழுத்துக்கூட்ட சக்தி யுள்ளவனு யிருக்கக்கூடியது மல்லாமல் ஒவ்வொரு இலக்கண சூத்திரத்தையும் அறிந்திருக்கவுங் கூடும். அது என்ன தலைவேதனையான படிப்பாக விருக்கும். அந்த மாணுக்கன் ஒரு அகராதி எழுத வல்லவனுகை

இருக்கிறது (Drawing) "வரைதல்" விஷயத்தில் கவர்ன்மெண்டார் ஏற்படுத்தியிருக்கும் படிப்பு. அந்தப் படிப்பானது ஒரு சிறு மாணுக்கனை "டிராப்ட்ஸ்மான்" (சித்திரலிபிகரன்) ஆக்கலாம்; ஆனுல் சித்திரக் கலைஞனுக்குவது அரிது. அந்தப் படிப்பானது சமகாதம் என்னும் உருவத்தை வரைய அவனுடைய கீழ்மையான கண்ணைத் துலக்கி ஒரு விருட்சத்தைச் சித்திரிக்க அவனுக்கு வேண்டிய சித்திரக்கலையின் ஞானக்கண்ணைக் கெடுத்துவிடும். அந்தப் படிப்பானது இரேகாகணிதத்திற்குரிய உருவங்களை அவனுக்குக் கற்பிக்குமென்ருலும், கலைஞான ஊக்கத்தை அழித்துவிடும். சிறுவர்களிடத்தில் கலைஞான மதிப்பை உண்டாக்க வேண்டியதாயிருக்கும் இந்தியாவிற்கே இந்தக் குறிப்புகள், விசேஷமாய் உத்தேசிக்கப்பட்டிருக்கின்றன. இங்கிலாந்தில், ஒரு சிறுவன் தானே பார்த்துச் சந்தோஷப்படுவதற்காகச் சித்திரப்படங்களை எழுதமாட்டுவானுகையால், கைப்பழக்கமாய் வரைதலை அதிகமாகப் புகட்டுவதினுல் அவ்வளவு கெடுதியா யிருக்கமாட்டாது. ஆனுல் இந்தியாவிலோ—பள்ளிக்கூடத்தில் வரைதற் பாடத்திற்குக் குறிப்பிட்ட காலத்தை மாணுக்கர்கள் ஒரு தண்டனையாக நினைக்கிறபடியால்-இப்படிப் புகட்டுதலானது படிப்புக்கே நாசகரமா யிருக்கிறது. பாஷை கற்கும் மாணுக்கன், பதச்சேதத்தையாவது, இலக்கணப் பிரதம சூத்திரங்களையாவது, தெரிந்துகொள்ளுவதற்கு முன்னேயே சந்தோஷமாயும், பிரயோஜன முண்டா

கும்படியாயும் வாசிக்கும் சிறு கதைகளுக்குச் சமமாக ஒவ்வொரு வகுப்புக்குத் தக்கபடி, படிக்கிரமமாய்ச் சிறிய "சித்திரப் பிரதிகளை", இந்தியப் பள்ளிக்கூடங் களில், கைப்பழக்கமாய் வரைதலோடு சேர்த்துப் படிப்பிக்க ஏற்பாடு செய்யலாம். உருசியை உண்டாக் கினால், இந்தியாவிற் கலைஞானம் உண்டாவதற்கு மிகவும் இடமிருக்கிறது. ஆனால் இப்பொழுதிருக் கும் ஏற்பாடுகளின் கீழ் கைப்பழக்கமாய் வரைதல் என்னும் மருந்துச் சரக்கானது, கலைஞானத்தைக் குமட்டிக் கொண்டுவந்து வெளியே தள்ளிவிடத் தகுந்ததா யிருக்கிறது.

இங்கே இதனை வாசிப்போர், ஆலமரத்தின் கீழ் நம்முடைய கிராமவாசி செய்துகொண்டிருக்கும் மனோராச்சியத்தில் திடீரென்று கொஞ்சநேரம் உசித மாய்ப் பிரவேசிக்கலாம். அப்படிப் பிரவேசித்து சித் திரக்கலா பாடங்களினால் ஒரு சிறுவனுடைய சுபாவத் தில் இரஸஞ் ஞானத்தை அபிவிருத்தி செய்வதினா லுண்டாகும் பிரயோஜனத்தை அவன் அறியுமாறு வற்புறுத்தலாம். அதற்குப் பிறகு அந்த கிராமவாசி யைத் தன்னுடைய சொந்தக் குமாரன் இங்கிலீஷ் பள்ளிக்கூடத்திலிருந்து விடுமுறைக்காக வீட்டுக்கு வரும்பொழுது, — கிராமக்கோவில், கிணற்றண்டை யிருக்கும் தன் சகோதரி, புண்ணிய விருட்சம், கிராமக் குளம் - ஆகிய இயற்கைப் பொருள்களை வரைய எத்தனப்படுவதினால், தன்னுடைய கைப்பழக்கமாய் வரைதற் பாடங்களைத் திருத்தமாய்ச் செய்ய முயலும்

படித் தன் சிறுவனைத் தூண்டுமாறு கற்பிக்க வேண்டும். அந்த பாலிய சித்திரகலைஞன் செய்யும் முயற்சியானது, தன்னுடைய ஒவ்வொரு சித்திரமும் இன்னதைக் குறிப்பிடுகிறதென்று ஜனங்களுக்குச் சொல்ல வேண்டிய விதமாய் அவ்வளவு செய்பாகமில்லாமலிருப்பது அசம்பாவித மல்ல. ஆயினும் அது பரவாயில்லை. ஏனென்றால் அந்தத் தொழில் முயற்சியானது அந்தச் சிறுவனுக்கு ஒரு சித்திரவித்தியா சந்தோஷத்தைக் கொடுத்திருக்கும். அல்லாமலும் அச்சிறுவன் ஒருபொழுதும் சித்திரக்கலைஞன் ஆகாவிட்டாலும் இயற்கையைப் பார்த்து உழைப்பதானது அவனுக்குச் சுகமாகவே யிருக்கும்.

நம்முடைய கிராமவாசி, பற்பல கைத்தொழில் தந்திரங்களை மனதிற் சிந்தித்துக்கொண்டே, கைத்தொழில் வேலைகளில் பிரயோகிக்கப்பட்ட கலைஞானமாகிய இந்தியருடைய கலைஞானத்தின் இரண்டாவது பாகத்தைப் பற்றிப் பேச்சு மாறும் பொழுதும் கொஞ்சநேரங் கூடவே,உசிதமாய்ச் செவிகொடுத்துக் கொண்டிருக்கலாம். இந்த மாதிரியான கலைஞானத்தில் நாம் ஏற்கனவே சொல்லியிருக்கிறபடி இந்தியாவானது மேன்மை யடைந்திருக்கிறது. அதன் மரச்சிற்ப வேலைகளென்ன, அதன் தந்தச்சிற்பவேலைகளென்ன, உலோகங்களில் சித்திரவேலை என்ன, விசித்திரமான மண்பாண்டங்க ளென்ன, சிங்காரமான வஸ்திரங்க ளென்ன, இவைகள் பெரும்பாலும் வெகு நேர்த்தியாகவே யிருப்பதுந் தவிர, உலகமெங்கும்

ந்யாயமாகவே கொண்டாடப்படுகின்றன. 1903-04 இந்த வருஷத்திய சென்னப்பட்டணப் பொருட் காட்சியில் காட்டப்பட்ட உயர்தரமான வேலைப்பாட்டின் அநேக மாதிரிகளில் சிலவற்றை உதாரணமாக எடுத்துச்சொல்லலாம். ஒரு ஒளிப்பட வெள்ளோட்டை வைத்துக் கட்டுவதற்காகச் செய்யப்பட்ட ஒரு ஜோடி சந்தனப் பலகை, மூன்று மைசூர் சிற்பிகளால் சித்திரவேலைசெய்யப்பட்டு நேர்த்தியான வேலைப்பாடாக விருந்தது. அந்தச் சித்திரவேலை யானது, இலைச்செறிவுகளையும், வனமிருகங்களையும் காட்டி ஆழ்ந்து சித்திரிக்கப்பட்டிருந்தபடியால் உண்மையாகவே இந்தியவேலைப்பாடாக இருந்தது மன்றி உன்னதமான கலைஞானத்தையும் வெளியிட்டது. அந்தச் சாமானைச் சென்னப்பட்டணத்திய மாட்சிமை தங்கிய கவர்னர் பிரபுவானவர் ரூபாய் 450க்கு கிரயத்துக்கு வாங்கிக்கொண்டார். சந்தன மரத்தில் சித்திரவேலை செய்யப்பட்ட, மற்றும் சில காட்சிப் பொருள்கள் இதைவிட மிக நேர்த்தியா யிருந்தன. திருவாங்கூர் சமஸ்தான சித்திரக்கலாவித்தியாசாலையி லிருந்து வந்திருந்த தந்தத்திறைற் செய்த மேன்மூடி யுள்ள ஒரு கெண்டியானது வேலைத்திறமுள்ள மற்றொரு சாமான். அந்த தந்த மூடியில் அதிநுட்பமாய்ச் சித்திரவேலை செய்து, திருவாங்கூர் மகாராஜா, இராஜாங்கப் பவனி வருவதுபோல் செய்யப்பட்டிருந்தது. அந்தக் கெண்டியை சென்னப்பட்டணம் இராஜாங்க விநோத சாலைக்காக ரூபாய் 550க்குக் கிரயத்துக்கு வாங்கிக்

கொண்டார்கள். பிரமிக்கும்படி சித்திரக்கலா ஞானத்தைக் காட்டி வேலைசெய்திருந்தவை எட்டியாபுரம் இராஜா அனுப்பிய சித்திரவேலை செய்யப்பட்ட ஒரு ஜோடி இருப்பு யானைத்தோட்டிகளே யாம். கடினமான இரும்பை உளியிட்டு அழகும் பிரமிக்கும்படியாய் மென்மையும் வாய்ந்த மாதிரியாக வேலைசெய்யப்பட்டிருந்தது. வேலூரி லிருந்து விசித்திரமாய் வேலைசெய்த சில நேர்த்தியான மண் பாண்டங்கள் வந்திருந்தன. சென்னப்பட்டணம் சித்திரக் கலாசாலையி லிருந்து வெவ்வேறு கலைகளைக் காட்டிய சில நல்ல மாதிரியான சாமான்களும் வந்திருந்தன. அலங்காரமான எண்ணிறந்த வஸ்திரங்களின் அழகான காட்சியானது, இந்தியாவில் மட்டும் காணக்கூடிய காட்சியாகவே யிருந்தது.

ஆனல் இவ்வகை யான கலைஞான வேலை விஷயத்தில், இந்தியாவானது விழிப்பா யிருப்பது அவசியமாயிருக்கிறது. இந்த மாதிரியாய் வேலைசெய்யப்பட்ட பொருள்கள் விலையாகும் சந்தையை பிற தேசங்களிற் கண்டுபிடிக்க வேண்டும். இந்திய வேலைக்காரன் அன்னிய வர்டிக்கைக்காரர்களை பிடித்துக்கொள்ளும் எத்தனத்தில், கைவேலைத்திறத்தைக் கெடுத்துவிட்டால் அது பரிதபிக்கத்தக்கதாயிருக்கும். வழக்கமாய்ப் பட்டணங்களி லிருந்து வரும் இலௌகிகந் தெரியாத பிரயாணியானவன் வீட்டுக்குத் திரும்பிப்போகும்பொழுது கொண்டுபோய்க் கொடுப்பதற்காகச் சாமான் தேடி வாங்குவதில், சிலவேளைகளில் இந்திய

மாதிரிகளை செய்பாகமற்றதென்று பரிகாசம் செய்ய விருப்பமுள்ளவனு யிருக்கிறன். ஐரோப்பாவி லிருக்கும் வியாபாரிகளுக்காகப் பிரயாணம் போய்ச் சாமான் வாங்கி யனுப்புவோனும், உயர்ந்த விலைகளைக் குறைப்பதும், மலிவாயிருக்கிற சாமான்கள் வேண்டுமென்று கூக்குரலிடுவதும் வழக்கமாயிருக்கிறது. பட்டணங்களிலிருந்து வரும் இலௌகிக ஞான மில்லாத பிரயாணியின் பரிகாசத்தினலும், "மலிவாயிருக்கும் சாமான்களு" க்காக பிரயாணம்போய் சாமான் வாங்கியனுப்புவோன் போடும் கூக்குரலினலும், இந்திய வேலைக்காரனுடைய மனதானது மிகவும் இலகுவா யிளகிவிட்டால் அது இந்தியக் கலைஞானத்திற்கு ஒரு தீங்காய் முடியும். ஏனென்றல் ஒரு வேலைக்காரன் தன்னுடைய இந்திய மாதிரியை மாற்றி ஐரோப்பிய மாதிரிகளைப் பார்த்து அவைகளின் சாயலாய்க் கீழ்ப்பட்ட தரமாய் வேலை செய்ய ஆரம்பித்தலாவது, மலிவான சமான்களுக் குண்டாயிருக்கு மொரு தேவையை நிறப்புவதற்காக மேன்மையான வேலைத்திறமையைக் கைநெகிழ விடுதலாவது இந்தியக் கலைஞானத்திற்கு ஒரு தீங்கான காரியமாக விருக்கிறது. இந்தியக் கலைஞான வேலையும் நன்றயிருக்கிறது; ஐரோப்பியக் கலைஞானவேலையும் நன்றய் இருக்கிறது; ஆனல் இவற்றி லேதேனு மொன்றய்மட்டும் இல்லாதிருந்தால் வெறுக்கத் தக்கதா யிருக்கிறது. துவிஜாதியான இனங்கள் உண்டாகுங்குறிகள் தேசத்தில் இருக்கின்றன. அது விசனிக்கத் தக்கதாயிருக்

கிறது. கைப்பழக்கமாய் வரைதல் மிதமிஞ்சி, இந்த விஷயத்திலும் தீங்கை யுண்டாக்கி யிருக்கலாம். இந்திய வேலைக்காரர்கள் கண்பார்வையினலேயே மிகுதியாய் வேலைசெய்வது வழக்கம். அவனுடைய மாதிரிகளும், சிலவேளைகளில் திட்டமா யில்லாவிட்டாலும், புதிதாயும், திடமாயும், தன்னந்தனியாயு மிருந்தன. இந்த நாட்களில் கவராசம் மிதமிஞ்சி உபயோகிக்கப் படுவதாய்த் தெரியவருகிறது. மாதிரிகள், கைப்பழக்கமாய் வரைதற் புஸ்தகமொன்றைப் பார்த்துத் திட்டம் செய்யப்பட்டவைகளாய்ப் பெரும்பாலும் காணப்படுகிறது மல்லாமல் வேலையானது மழுங்கலாய் ஒரே தன்மையாக விருக்கவும் நேரிடுகிறது. பித்தளைத் தகடுகளைக் கலைஞானக் கண்பார்வையினலே சம்மட்டியாலடித்து நானு விகற்பமான மாதிரிகளாகச் செய்யப்பட்டிருக்கும் சாமான்கள் அவைகளுக் கேற்ற பிரத்தியேகமான அழகுவாய்ந்தவைகளா யிருக்கின்றன. ஆனல் கைப்பழக்கமாய் வரைதற் புஸ்தகமானது மிதமிஞ்சிக் கண்டிப்பாய் உபயோகத்திற்கு வந்து மட்டக்கோலும்கவராசமுங் கொண்டு வேலைசெய்தால், அந்தத் தகடுகளை ஒரு மணி நேரத்திற்கு இவ்வளவு நூறு வீதமென்று யந்திரத்தினல் அடித்து உருவாக்குவது நலமாயிருப்பதுடன் இந்தியாவைவிட மிகவும் நன்றும் பர்மிங்ஹாமானது இந்தத்தேவையைப் பூர்த்தியாக்கக் கூடும். பெரும்பாலும், அழகாய்ச் சித்திரத் தையல் வேலை செய்யப்பட்ட ஒரு வஸ்திரத்தைச் சில வேளைகளிற் கெடுக்கிற, அறிவின்மையாயும் பேய்க்கோலமா

யும் மனுஷர்களேயும், மிருகங்களேயும் பரிகாச பாவனே யாகச் செய்யப்பட்ட வேலேகளேச் சீர்திருத்தி அதே மாதிரியான மற்ற சீர்திருத்தங்களேயும் செய்வது, சந் தேகமில்லாமல் நலமாகவே யிருக்கும். இந்திய வேலேக் காரர்களோடு சம்பந்தப்படும் புத்தியுக்தியுள்ள பேர் கள் இந்திய வேலேகளின் ஒருமைப்பாட்டை நெகிழ விடா திருக்கும்படி செய்ய வேண்டும். அப்படிச் செய் யாவிட்டால் அந்தத் தொழில் முயற்சி முழுவதும் மறைந்துபோக இடமுண்டாகும்.

ஒரு (Design) திட்டம் ஆனது ஒரு சம்பாவிதமான பொருளேயே, எப்பொழுதுங் குறிப்பிட வேண்டு மென்கிற சங்கதியைப் பராமுகம் பண்ணுவது இந்திய கைவினேஞனுக்கு ஸகஜமா யிருக்கிறது. உதாரண மாக 1903-04 இந்த வருஷத்திய சென்னப்பட்டணப் பொருட் காட்சியில் ஒரு நேர்த்தியான வேலேப்பாடா னது இப்படிப்பட்ட மறதியினுல் கெடுக்கப்பட்டிரு ந்தது. அது ஒரு சித்திரவேலே செய்யப்பட்ட மேஜை- ஒரு கனமான சாமான்-அதன் கால்கள் சிறிய யானே களின் முதுகுகளின்மேல் மிகவும் அழுக்கித் தாழ்த் தும் விதமாய்ச் சுமந்திருந்தன. அது பார்ப்பவர் களுக்கு வருத்தத்தை உண்டாக்கிறது. இதைப் போல வே நன்றுய்ச் சித்திரவேலே செய்யப்பட்ட மற்று மநேக சாமான்கள், மனேபாவங்களேத் திகைக்கச் செய்யும் சில குறைகளினுல் கெடுக்கப்பட் டிருந்தன.

கவனக் குறைவால் முடிவாய்த் தீர்மானம் செய் யாமலே விடுவதினுலும், இந்தியருடைய கைவேலே

யானது அடிக்கடி கெடுக்கப்படுகிறது. இது ஏற்று மதிக்குக் கெடுதலாய் முடியுமொரு பிழையா யிருக்கிறது. ஏனென்றால் ஐரோப்பியர் மிகவும் சரியாய் அபேக்ஷிக்கிற விஷயங்களி லொன்று, வேலைசெய்த சாமான்களில், முடிவான தீர்மானத்தைக் காண்பதாகவே யிருக்கிறது. கடைசியாய் நடந்த சென்னப் பட்டணப் பொருட் காட்சியில் தெரியக் காட்டிய காட்சிப் பொருளாகிய பெரிதாய்ப் பித்தளையினால் நேர்த்தியாக ஒரு பூசைப்பெட்டி மாதிரி செய்யப்பட்டிருந்த ஜோடிப்பு விஷயத்தில், முடிவான தீர்மானம் வைக்காத குறைவிற்கோர் திருஷ்டாந்தத்தை விசேஷித்துக் காணக்கூடியதா யிருந்தது. பித்தளையிற் செய்யப்பட்ட உருவங்கள் மேன்மையாக விருந்தன. பொதுவாக வேலைப்பாடும் மேன்மையாக விருந்தது. ஆனால் அந்தப் பித்தளைத் தகடுகளின் விளிம்புகளை ஒரு நேர்கோணமா யிருக்கும்படி வளைக்கப்பட்டிருந்த அடிப்பக்கத்தில், அவைகள் வெளிப்படையாய்த் தோன்றுமாறு நயமில்லாமல் விரல்களினால் வளைக்கப்பட்டிருந்ததுடன், அந்தப் பித்தளையானது சாதாரணமான எஃகுத் திருகாணிகளினால் முடுக்கப்பட்டு மிருந்தது. அந்தத் திருகாணிகள், திட்டமாய் முடுக்கப்படவு மில்லை.

இந்தியாவின் பற்பல கலாஞான முயற்சிகளைப் பற்றிக் கொஞ்சமேனும் விஸ்தாரமாய் இங்கே எழுதுவது சமயோசிதமாக விராது. மேலும் அதனால் யாதொரு பிரயோஜனமு முண்டாக மாட்

டாது. ஏனென்றால், இந்த விஷயமாய் ஸர் ஜார்ஜ் பர்ட்வுட் (Sir George Birdwood) என்பவர் எழுதியிருக்கும் சிறப்பான கிரந்தத்தில், சாதுரியமான ரீதியாயும், வித்யாசம்பந்த வசீகரத்தோடும் இந்த விஷயமானது பூரணமாய் விவரிக்கப்பட் டிருக்கிறது. மேலும் அது இந்தியாவின் கைத்தொழில் முயற்சிகள் விஷயத்தில் பிரியப்படுவோர் அனைவருக்கும் தெரிந்திருக்கவேண்டிய புஸ்தகமா யிருக்கிறது. சென்னப்பட்டணப் பொருட் காட்சியில், காட்சியானது விஸ்தாரமாயும் சிறப்பாயு மிருந்ததென்றாலும், இந்திய கலைஞான வேலைக்காரன் விழிப்பாயிருக்க அவசிய மிருப்பதை ஞாபகப்படுத்துங் குறிகள் இங்கு மங்குமிருந்தன. இனிமேல் இந்தியாவின் கைத்தொழில் முயற்சியில் நன்மை யுண்டாகுமென்று உண்டாகக்கூடிய நம்பிக்கையானது மேற்றிசையாருடைய மார்க்கங்களை மேலுமேலும் ஜாஸ்தியாக வித்தியாச மில்லாமல் அனுஷ்டிக்க வேண்டிய விஷயமாயிருக்க, இந்தியாவின் கலைஞானக்கைவேலைகளில் நன்மையுண்டாகு மென்று உண்டாகக்கூடிய நம்பிக்கையானது அன்னியர்களுடைய மார்க்கங்களை விட்டு விலகியிருக்கவேண்டிய விஷயமா யிருக்கிறது. அதனுடைய கைத்தொழில் முயற்சியின் அபிவிருத்திக்கு நீராவி யந்திரத்தையும், மற்ற யந்திரங்களையும் கொண்டுவர வேண்டும். அதனுடையகலைஞானமானது நிலைத்திருப்பதற்கு அது இப்பொழு திருக்கிறபடியே யிருக்கவேண்டும். இந்தியருடைய கலைஞான வேலை

யானது மேன்மையா யிருக்கிறது. இந்தியக் கலைஞானக் கைவினைஞர்கள் தம் நிலையில் நிலைத்திருக்க வேண்டுமானால் தாங்கள் செய்யும் சாமான்களில் ஒருமைப்பாட்டை ஆதரித்துத், தங்களுடைய திட்டங்கள் சுபாவத்திற்கு ஒத்த விதமா யிருக்கும்படிக் கவனம் செலுத்தித் தங்களுடைய வேலையில் தக்க ஒரு முடிவான தீர்மானம் வைப்பதில் ஜாக்கிரதையாகவு மிருக்க வேண்டும்.



# VII.

## இந்தியப் பண்டசாலை.



நம்முடைய கிராமவாசி தன்னுடைய கிராமத்தில் எந்தப் பதார்த்தம் விசேஷமாய் உற்பத்திசெய்யத் தகுதியுள்ளதோ அதைப்பற்றி வாய்ப்பாய் ஆராய்ச்சி செய்து, தன்னுடைய கிராமத்தார்களிற் சிலருடன் சேர்ந்து கூட்டுத் தொழில் செய்து, சில மேன்மை யான சாமான்களை உண்டாக்கி யிருப்பதாய் நாம் இப்பொழுது நினைத்துக்கொள்ளுவோம். உதாரண மாக, அவனுடைய கிராமமானது கடற்கரையில், மீன் விசேஷித்து ஏராளமா யிருப்பதும், மீன் பிடிக்குந் தொழிலை மிகுதியாய் அபிவிருத்தி செய்யக் கூடிய தாயு மிருக்கு மோரிடத்தில் இருப்பதாக நாம் எண் ணிக்கொள்ளுவோம். அவன் செய்ய உத்தேசித்தி ருக்கு மொரு தொழிலானது, மீனை வற்றல் போட் டுத் தகர டப்பியில் அடைத்து வைப்ப தென்று நாம் வைத்துக்கொள்ளுவோம். அந்தச் சரக்கைச் சரியாய்ச் செய்திருக்கிறான். இந்தியாவிற்குள், தகர டப்பியில் அடைத்து மீன் இறக்குமதி செய்யப்படுகிறதைப் பற்றி விசாரித்ததின் பேரில், அந்த வியாபாரம் மிகுதி யாய் நடக்கிறதென்று தெரிந்துகொண்டும், பெரிதும், சிறிதுமான தகர டப்பிகளை விலை சரசமாய்ச் செய்து முடிக்கக் கூடுமானால், வியாபாரமானது முக் கியமாய் உள்நாட்டுப் பட்டணங்களில் மிகுதியாய்

நடக்குமென்று கேள்விப்பட்டு மிருக்கிறான். சார்
டைன்ஸ் (Sardines) என்னும் மீனும் பின்னும் தகர
டப்பியில் அடைக்கத்தகுந்த எண்ணிறந்த மற்ற மீன்
வர்க்கங்களும், அவனுடைய கிராம நீர்நிலைகளில், திரள்
திரளாய்க் காணப்படுகின்றன. அந்த சார்டைன்ஸ்
என்னும் மீன்கள், இந்தியாவின் மேல் சமுத்திரக்
கரையில், இப்பொழுது நடக்கிற விதமாய் அவைகளை
எருவாக உபயோகிக்கும்படி, அவ்வளவு மிகுதியா
யிருக்கின்றன. நிலக்கடலை எண்ணெயையும் மிகுதியா
கக் கிராமத்திலேயே உண்டாக்கக் கூடும். சார்டைன்ஸ்
என்னும் மீன் நிறைந்த ஒரு தகர டப்பியின் விலை
யானது யதார்த்தமாய் அந்தத் தகரத்தினுடைய
விலையையும் எண்ணெயின் விலையையும் காட்டிலும்
ஜாஸ்தியாக இருக்க மாட்டாது. ஏனென்றால் ஒவ்
வொரு பெட்டியிலு மிருக்கும் மீனுடைய கிரயமா
னது அற்பமாக விருப்பதால் கணக்கிற் சேர்க்கவேண்
டியதில்லை. வற்றல் போடும் விதத்தையும் தகரத்தி
லடைக்கும் விதத்தையும் பழக்கமுள்ளவர்களிடத்தில்
கேட்டுத் தெரிந்துகொண் டிருக்கிறான். சாமர்த்திய
மான வேலைக்காரனைக்கொண்டு வெகுகாலம் தொடர்ச்
சியாய்ச் சோதனைகள் செய்ததினால் தன்னுடைய
தகரத்திலடைத்த மீன் சரக்கை மிக மேன்மையான
ரீதிக்குக் கொண்டுவந்திருக்கிறான். இதற்கு மேல்
அவன் செய்யவேண்டியதென்ன? அடுத்த பட்டணங்
களில் தன்னுடைய சரக்குகளை விற்கும் மார்க்கத்
தைத் தேட வேண்டும். அவன் காரியக்காரர்களுக்காக

(Agents) சுற்றிலும் பார்க்கிறான். நன்றாய் ஸ்தாபிக்கப் பட்டிருக்கிற ஐரோப்பிய உணவு சேகரிப்போரும் பார்ஸி உணவு சேகரிப்போரும், அவனுடைய சாமான்கள் நன்றாயிருக்கின்றனவா, அல்லது, கெடுதலாயிருக்கின்றனவா வென்று கவனியாமலே, தங்களுடைய கடையின் தட்டுப் பலகைகளில், "சுதேச சாமான்களை" வைத்துக் கொள்ளப் பிரியப்பட மாட்டார்கள். அப்படிச் செய்ய அவர்களுக்கு என்ன அக்கறை? தங்கள் வாடிக்கைக்காரர்கள் இத்தலி தேசத்திலிருந்து வரும் ஸார்டைன்ஸ் தகரமொன்றுக்கு எட்டணா கொடுக்கும்பொழுது அவர்களுக்குத் தகரமொன்றுக்கு இரண்டணா ஆறு பைசா வீதம் ஏன் கொடுக்கவேண்டும். ஆகையால், கொஞ்சம் சரக்கு மகுதி பஜாரில் தன்னுடைய சிறிய கடையில் முகம்மது பக்ஸ் என்பவனால் அங்கீகரிக்கப்பட்டு முகம்மதினுடைய கடையின் தட்டுப்பலகைகளில், பலவிதமான தட்டு முட்டு சாமான்களுடன் கலந்து எட்டிவைக்கப்படுகிறது.

முகம்மது பக்ஸ், தெருத் தெருவாய், அங்காடி கூறி விற்கும், "ஹாக்கர்" ஆகவும் இருக்கிறான்; மறுநாட்காலையில் தன்னுடைய மூட்டையில் பரீக்ஷார்த்தமாய் நமது கிராமவாசியின் இந்திய ஸார்டைன்ஸ் அடங்கிய டப்பி ஒன்றையும் சேர்த்துவைத்துக்கொள்ளுகிறான்.

"சலாம், மெம்சாயப்"! என்று சொல்லிக்கொண்டே முகம்மது பக்ஸ், தன்னுடைய மூட்டையை இறக்கி

தாழ்வாரத்தில் உட்கார்ந்து தைத்துக்கொண்டிருக்கும் ஒரு சீமாட்டியின் பாதத்தின் கிட்ட வைக்கிறான். இந்தியாவி லிருக்கும் ஆங்கிலேய ஸ்திரீகளுடைய அதீனத்தில் வழக்கமா யிருக்கும் மிகுந்த சாவகாசத்தை யுடைய அந்தச் சீமாட்டி தைத்ததை மடியில் வைத்துக்கொண்டு அந்தக் காட்சியை நோக்கிப் பொழுதுபோக்க நினைத்துக் குனிந்து பார்க்கிறாள். அந்தப் பெட்டிக்காரனுக்கிருக்கும் பேதமையான பொறுமையுடன் முகம்மது பக்ஸ், தன்னுடைய பையிலிருந்து, தன்னுடைய விசித்திரக் காட்சியைப் பரப்புகிறான்; கடிதாசி என்ன, இலகோடா என்ன, முத்திரை அரக்கு என்ன, கத்தரிக்கோலென்ன, நூல்கண்டென்ன, கழுத்துப் பட்டிகைப் பொத்தான்களென்ன, பெப்பர் மிண்டுக் குப்பிகளென்ன, சவர்க்காரக் கட்டிகளென்ன, நெருப்புப்பெட்டிகளென்ன, இவைகளோடு — ஸார்டைன்ஸ் டப்பி ஒன்றையும் — அவிழ்த்துவைக்கிறான்.

அந்த "மேம்சாயபு" சிறிக்கிறாள். "உலகத்தில் எங்கே யிருந்து அந்த ஸார்டைன்ஸ் பெட்டியை எந்தக் குப்பையிலிருந்து வாரிக்கொண்டு வந்தாய்?" என்று அவள் கேட்கிறாள். மேலும் ஏலங்கூறி விற்கும் சாமான்களிற் கழிகடையானதென்று அவள் நினைத்து அதைப் பார்க்கு மாசையினால் அவள் தன் கையை நீட்டுகிறாள். ஆனால் அந்தத் தகரமானது புதிதா யிருக்கிறது. "ஸார்டைன்ஸ்: ரெத்தினப்பிள்ளை அண்டு கோ., மஸூலிப்பட்டணம்" என்று அதன்

நாம விலாசத்தை வாசிக்கிறாள்; வாசித்து அதை ஒரு பரிகாசம் என்று நினைத்து, "விலை எவ்வளவு?" என்று சிரித்துக்கொண்டே கேட்கிறாள்.

"மூன்றணா" வென்று முகம்மது பக்ஸ் விநயமாய்ச் சொல்லுகிறான்.

அந்த "மேம்சாயபு," தன்னுடைய நீண்ட கை நாற்காலியில் தன்னுடைய பத்திரிகையை ஆழ்ந்து பார்த்துக்கொண்டிருக்கும், அவளுடைய புருஷனை நோக்கி, "இதோ பார், பர்ட்டி! இந்திய ஸார்டைன்ஸ்! இன்று பிற்பகலில் உன்னுடைய தேயிலைப்பானத்தோடு சேர்த்துக்கொஞ்சம் உனக்குக்கொடுக்கிறேன்!" என்று மகிழ்ச்சியோடு ஓலமிடுகிறாள்.

"எனக்கு வேண்டாம்! வேண்டுமானால், பிடோவுக்கு அவைகளைக் கொடுத்துப்பார்" என்று பர்ட்டி பயமுறுத்திச் சொல்லுகிறான்.

"ஐயோ பிடோ!" இந்தத் துடுக்கான மனிதன் உனக்கு விஷம் ஊட்டப் பார்க்கிறான்" என்று அந்த மேம்சாயபு அந்தத் தகரத்தை அந்த நாயின் மூக்கில் தேய்த்துக் கொண்டே சொல்லி, ஸார்டைன்ஸை இகழ்ச்சியாய்க் கீழே எறிந்து விட்டு, ஊசிக்கட்டு ஒன்றையும், நூல்கண்டு ஒன்றையும் வாங்கிக்கொள்ளுகிறாள்.

முகம்மது பக்ஸ் தன்னுடைய மூட்டையைக் கட்டி எடுத்துக் கொள்ளுகிறான். இப்படிப்பட்ட சில அநுபவங்களினால், தன்னுடைய காலைச் சுற்று முடிவதற்கு முன், தன்னுடைய ஸார்ஜென்ஸைப் பற்றி அவனுக்குத் தீர வெட்கமுண்டாகி விடுகிறது.

இந்திய சுதேசிகளால் ஆரம்பிக்கப்பட்டு மிகுந்த நன்மையை எதிர்பார்க்கக் கூடிய அநேக தொழில் முயற்சிகள், கூடிய மட்டும் உத்தரவாதமுள்ள வித மாய்ச் சரக்குகளை ஜனங்களுக்குத் தெரியக் காட்டா மலிருக்கிற காரணத்தினால் தளர்ச்சி யடைகின்றன, அல்லது, முற்றிலும் முறிந்து போகின்றன வென்று நாம் நம்பலாம். இந்தியாவில், ஐரோப்பியர்களால் உண்டாக்கப்படுகிற சுத்திசெய்த சர்க்கரையென்ன, தேயிலையென்ன, காப்பிக்கொட்டையென்ன, சுருட்டு களென்ன, இவைகளெல்லாம் மிகுதியாக விலையாகின் றன. இதற்குக் காரணம், அவைகளை உண்டாக்கு வோர்கள், தங்கள் சரக்குகளைத் தலைமையான வியாபா ரிகள் நிரப்பும்படி வேண்டிய ஜாக்கிரதை எடுத்துக் கொள்ளச் சக்தியுள்ளவர்களா யிருக்கிறார்கள். ஆனா லும் இந்திய பிஸ்கோத்துகள், இந்திய பூட்டுகள், முதலானவைகளைப்போன்ற சாமான்கள், சாதாரண மாய்ச் சில்லறைக்கடைகளைத் தவிர, மற்ற இடங்களிற் சில்லறையாய் அகப்படுகிறதில்லை. அந்தக் கடைகளை நல்ல அந்தஸ்துடையவர்கள் எட்டிப்பார்க்கிறதில்லை, ஏனென்றால் தம்முடைய 'விக்டோரியா' வண்டியில்

உட்கார்ந்திருக்கும் ஐரோப்பிய சீமாட்டியுங், தம்முடைய நாலு சக்கர வண்டியில் உட்கார்ந்திருக்கும் இந்தியகனவானும் தங்கள் தேவைகளுக்காகக் கீழ்ப்பட்ட இடங்களுக்குப் போவது அரிது. அவர்கள் ஒரு சிங்காரவாசல் முன்பாக வண்டியை நிறுத்திச் சிறப்பாய் இறங்கி, உள்ளே போய்க் காற்றுலாவப் பெற்றதும் நன்றாய் வரிசைபடுத்தி வைத்திருக்கும் காட்சியறையில் தாங்கள் வாங்கவேண்டிய சாமான்களைத் தெரிந்தெடுப்பதையே சிலாக்கிய மென்று நினைக்கிறார்கள். புதிதாய் உண்டாக்கப்பட்டவொரு சாமான் கடைத்தெருவில் யாருஞ் சீந்தாமலே யிருக்கலாம். ஏனென்றால் புதிதாய்க் கொண்டுவரப்பட்ட எந்த் சாமானும் விலையாகவேண்டுமானால், ஒரே விதியாய், மேலான அந்தஸ்துடையவர்கள் வாங்கும்படி அவர்களுக்குத் திர்ப்திகரமா யிருக்கவேண்டும். கீழ்த்தரமான சுதேசிகள், சொற்ப சாமான்களைக் கொண்டே, திர்ப்தியடைகிறார்கள். மேலும், அந்த விஷயத்தில் மாறுதல்களில் கொஞ்சமேனும் இஷ்டமில்லாதவர்களாயுமிருக்கிறார்கள். ஆகையால் நூதன சாமான்கள் முதல் முதல் உயர்ந்த வகுப்பார்களிடமே போய்ச் சேரவேண்டும். பிறகு விலை குறையக் குறைய அவைகள் வர வர சாமானிய ஜனங்கள் அங்கீகரிக்கத் தகுதியாகலாம். சாப்பிடத் தகுந்த வஸ்துக்களிற்கூட, இந்திய சாமான்கள் என்ற ஒரு காரணத்தைக் கொண்டே பிரபுக்கள் அவைகளை வாஸ்தவத்தில் அவமதிக்கிறதில்லை. உதாரணமாகச் சென்னப்பட்டணத்தில்

சொல்லுங்கால், மற்ற ஸ்தாபனங்களுமிருக்க, மவுண்டு ரோட் டிலிருக்கும் (Mount road) ஒரு சுதேசத் தையற்காரனுடைய சிறப்பான கடையானது, அந்த நகரத்திலுள்ள ஐரோப்பியர்களுக்கு வழக்கமாய், நாகரீகமான தையல்வேலை செய்துவருகிறது. மேலும் சுதேச நகை வியாபாரிகளின் சங்கத்திற்குச் சொந் தமா யிருக்கும் ஒரு சிறப்பான தொழிற் சாலையும், பார்ஸி சித்திரத்தையல் வேலைக்காரருக்குச் சொந்த மாயிருக்கு மொரு நேர்த்தியான தொழிற் சாலையும், மேலான அந்தஸ்துடைய ஐரோப்பியர்கள் பலகாலும் விலைகொள்ள வரும் இடங்களா யிருக்கின்றன. ஒரு சுதேச மிட்டாய்க் கடைக்கார னிருக்கிறான். அவனு டையகடையானது ஒரு முக்கியமான ரஸ்தாவிலிருப் பதாலும், அது எப்பொழுதும் சுத்தமாக இருந்து வருவதினாலும், அவன் ஐரோப்பிய வர்த்தகக் கூட்டங் களுக்குப் போட்டியாய், சென்னை நகரவாசிகளுக்குப் பிரியமான சிற்றுண்டி சேகரித்துக் கொடுப்போனாய் இருக்கிறான். மேலும், இந்த இராஜதானியில், எல்லா இடங்களி லிருந்தும் உயர்ந்த தரமான தின்பண்டங் களைச் சேகரித்துக் கொடுக்கும்படி அவனுக்கு ஒப் பந்த முறி கொடுப்பதுண்டு. மேலும், அதே ரஸ்தா வில் ஒரு பாற்கார னிருக்கிறான். அவனுடைய சாத னங்க ளெல்லாம் சிலாக்கியமாய் இருப்பதினாலும், அவன் வைத்திருக்கும் பாலும், வெண்ணெயும், நன்றா யிருப்பதினாலும், அவனுக்குப் பெரிய வியாபாரம் நடக்கிறதுடன், அந்த நகரத்தி லிருக்கும் அநேக

பிரபுக்களுக்கு உதவுவது மல்லாமல், தன்னுடைய சாமான்களை மற்றப் பட்டணங்களுக்கும் அனுப்புகிறான். தப்பெண்ணங்கொண்ட சில மூடர்கள் இடத்திலேயே யல்லாமல், மற்றவர்களுக்கு இந்திய சாமானென்று அதனிடத்தில் யாதொரு மன வெறுப்பில்லா விட்டாலும், இந்திய சாமான் எவ்வளவு நன்று யிருந்தாலும், அது விலையாக வேண்டுமானால், அது ஜனங்களுக்குத் தெரியும்படி தக்க அறிவிப்பு இருக்க வேண்டும். ஆனால், அற்பக் கைத்தொழில் முயற்சியுடையோன், மனதைக் கவரும்படியான சாதனங்களோடு தொழிலை யாரம்பிக்கச் சதாரணமாய் அசக்தனா யிருப்பான். அப்படியானால் அவன் என்ன செய்யவேண்டும்? அந்தக் கஷ்டமானது, இந்தியப் பண்டசாலைகளை யேற்படுத்துவதினால் நிவர்த்தி செய்யப் படலாம்.

இந்த தாத்பரியத்தில் "பண்டசாலை" என்னும் பதத்தினால் புலப்படுவ தென்ன வென்று இதனை வாசிப்போர்களில் அநேகர் அறிவார்கள். ஒரு பண்டசாலை யென்பது சில்லறையாய்ச் சாமான்கள் விற்கும் விசாலமான ஒரு பெரிய இடம். அங்கே அநேக காட்சியறைக ளிருக்கும். அவைகளில் ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குப் போகும்படி மத்தியில் வழி யிருக்கும். அங்கே பற்பல வியாபாரப் பகுதிகளைக் காணலாம். அவற்றில் ஒவ்வொன்றிலும் விற்பனைக்கு ஒத்த விதமாய் யாரும் பார்க்கும்படி சாமான்கள் வைத்திருப்பதை வாடிக்கைக்காரன்

காண்பான். அங்கே 'விலை கூறுதல்' கிடையாது. இதற்குச் சந்தேகமில்லை. ஒவ்வொரு சாமானும் அதனுடைய சீட்டில், அல்லது, ஜாப்தாவிற் கண்ட விலைக்கே விற்கப்படும் ஆனால் அந்தப் பண்டசாலையானது கிரமமாய்க் கையாளப்பட்டு வந்தால் பெரிய பட்டணங்களில் விற்பனைகள் மிகுதியாக இருக்குமாதலால், விலை குறைவாகவே யிருக்கும். இதைப் போன்ற ஒரு ஸ்தாபனத்திற் போய்த் தனக்கு வேண்டிய சாமானை வாங்குவது வாடிக்கைக்காரனுக்குச் சந்தோஷமா யிருக்கும். அங்கே சௌகரியமாய் உலாவுமிடமிருக்கிறபடியால், அதன் வழியாய் அவன் நடந்து கடைக்கு வெளியே போகாமலே ஒரு பகுதியில் இருந்து மற்றொரு பகுதிக்குப் போகலாம். செல்லாத் துணி வகுப்பும், சரணகோச வகுப்பும், தாழ்ந்த உலோகங்களினாற் செய்யப்பட்ட சாமான்களின் வகுப்பும், மரசாமான் வகுப்பும், பலசரக்கு வகுப்பும், கொலுசாமான் வகுப்பும், பின்னும் மற்ற வகுப்புகளுமிருக்கின்றன. அங்கே, பல பேர்களாற் செய்யப்பட்ட சாமான்கள் யாரும் பார்க்கும்படி வைக்கப்பட்டிருக்கின்றன. இந்தியாவி லிருக்கும் அநேக பெரிய ஐரோப்பியக் கடைகள் உண்மையில், ஐரோப்பிய சாமான்கள் விற்பனை யாவதற்கான "பண்ட சாலை" யாகவே யிருக்கின்றன. மேலும் பம்பாயிலும், இந்தியாவின் மற்றும் சில நகரங்களிலும் அயன் "பண்ட சாலைகள்" இருக்கின்றன. இந்தியாவிற்கு அவசியமாய்க் காணப்படுவது என்ன வென்றால், இந்திய சாமான்களுக்காக

அவை போன்ற பண்டசாலைக ளிருக்க வேண்டு மென்பதே. அவ்விடத்தில் ஒப்புக்கொள்ளத் தக்க தன்னுடைய சாமான்களை, இந்தியாவி லிருக்கும் அற் பக் கைத்தொழில் முயற்சியுடையோன் அனுப்பக் கூடியதா யிருக்கவேண்டும். அப்படி யனுப்புவதினால், முகம்மது பக்ஸ் தன்னுடைய அழுக்குப்படிந்த கடை யிலாவது அல்லது தன்னுடைய அங்காடிப் பையிலா வது வைத்துக்கொண்டு அவைகளை ஜனங்களுக்குத் தெரியக் காட்டுவதை விட மிகவும் நன்றாய் அவைகள் ஜனங்களுக்குத் தெரியக்கூடு மென்று அவன் அறி யும்படியாக இருக்கவேண்டும்.

இந்த விஷயத்தில் ஏற்கனவே ஒரு ஆரம்பம் உண் டாயிருக்கிறதென்பது சந்தோஷிக்கத் தகுந்ததே. பாரிஸ்டரும் ஆக்ஸ்போர்ட் சர்வகலாசாலையில் கலாகல் வியிற் கரைகண்டவரும் ஆகிய சௌதுரி யென்னுங் கனவான் 1901-ம் வருஷத்தில் கல்கத்தாவில் நடந்த காங்கிரஸ் மகாசபையைச் சேர்ந்த கைத்தொழிற் பொருட் காட்சியில் சம்பளமில்லாத காரியதரிசியா யிருந்தார். அவர் அந்தப் பொருட் காட்சியானது முடிந்தவுடன், இந்திய சாமான்களை இந்தியாவிலும், வெளியிலும் விற்பதற்காக ஒரு வர்த்தகக் கூட்டத்தை உண்டாக்குங் கருத்தைக் கொண்டார். "உத்தரவாதம் நிர்ணயிக்கப்பட்ட இந்தியப் பண்டசாலை" என்னும் சங்கமானது 1902-ம் வருஷம் ஜூன் மாதத்தில் ரிஜிஸ் தர் செய்யப்பட்டது. அதன் விசாரணைக் கர்த்தர்கள் இரண்டு மகாராஜாக்களும் (அவர்களில் ஒருவர் சட்ட

நிருமாண சபையின் கவுன்ஸிலர்), நான்கு உத்தியோகஸ்தர்களும், ஒரு வைக்கீலும், அதன் காரியதரிசியும் காரிய நிர்வாஹ டைரெக்டருமான மேலே சொன்னபாரிஸ்டரும்ஆகியஇவர்களேயாம். பட்டயம் பெற்ற ஐரோப்பிய கணக்கர்களே அதன் கணக்குப் பரிசோதகர்கள். ஆகையால் அந்தச் சங்கமானது, நம்பிக்கைக்கு அர்ஹமான நிபந்தனைகளோடுதொழிலை நடத்தி வருகிறது. அதன் நோக்கங்கள் அடியிற் கண்டபடி யிருக்கின்றன:—

(a) முக்கியமாய் இந்திய கலை, கைத்தொழில், விளைவு இவற்று லுண்டாக்கப்பட்ட சாமான்களைச் சேர்ப்பதும் அப்படிப்பட்ட சாமான்கள் விலையாகக் காட்சியறை, அல்லது, கடைகளை ஏற்படுத்துவதும்.

(b) அப்படிப்பட்ட சாமான்களை விற்றல் வாங்கல் செய்வதற்காகவும் பொதுவாய் ஏஜண்டுகளாய் வேலை செய்வதற்காகவும் இந்தியாவிற் பலவிடங்களில் சாலைகளை ஸ்தாபிப்பதும்.

(c) அப்படிப்பட்ட சாமான்களை ஏற்றுமதி செய்வதும் மற்றவைகளை இறக்குமதி செய்வதும் அவைகளின் விஷயமாய், அவசியமானல், இந்தியாவுக்கு வெளியே ஏஜண்டுகளை ஏற்படுத்துவதும்.

(d) சங்கத்தினுடைய தேவைகளுக்கு ஏற்றபடி இந்திய கலை, கைத்தொழில், விளைவு இவற்றால் உண்டாக்கப்பட்ட சாமான்களைச் சேகரிக்கும் நோக்கத்தோடு இந்திய வேலைக்காரர்கள், தொழிலாளிகள், கைவினையாளர்கள், கம்மியர்கள் ஆகிய இவர்களுக்கு இயன்ற விதமெல்லாம் உதவி செய்வதும்.

(e) சங்கத்தினுடைய தொழில் சம்பந்தமாய், சரக்குகள் செய்யுஞ் சாலைகளும், கம்மாலைகளும் ஏற்படுத்துவதும்.

(*f*) அந்தச் சங்கத்தினுடைய நயத்திற்காகவும் இந்திய வர்த்தக வியாபாரங்களின் நயத்திற்காகவும், இந்திய கலை ஞானம், கைத்தொழில், விளைவு இவைகளினால் உண்டாக்கப்படும் சாமான்களின் உற்பத்தியைத் தூண்டுவது அல்லது ஒழுங்குபடுத்துவதற்கும் அவற்றின் செலவை ஜாஸ்தியாக்குவதற்கும் அவசியமாய் அல்லது யுக்தமாய் இருக்கும் சங்கங்களையும் சபைகளையும் உண்டாக்குவதும்.

(*g*) அந்தச் சங்கத்தினுடைய தொழிலையும் இந்தியவர்த்தக வியாபாரத்தின் அளவையும் விரிவாக்குங் கருத்தினால் இந்திய தொழில்முயற்சிகள், கலைஞானம், கைத்தொழிலாகிய இவற்றை வேறு விதங்களிற் றூண்டுவதும், பரிபாலிப்பதும், விருத்திசெய்வதும், உண்டுசெய்வதுமே.

அந்தச் சங்கம் ரிஜிஸ்தர் செய்யப்பட்ட பிறகு அதன் விசாரணைக் கர்த்தர்கள் ஒரு லட்ச ரூபாய் கையொப்ப மிடப்பட்டவுடன் தொழிலை யாரம்பிக்கத் தீர்மானித்தார்கள். இந்தத் தொகையானது மிகவும் சொற்ப காலத்திற்குள் கையொப்ப மிடப்பட்டுத் தொழிலானது 1902-ம் வருஷம் சப்டெம்பர் மாதத்தில் ஆரம்பம் செய்யப்பட்டது. வருஷக் கடைசியில் பரிசோதிக்கப்பட்ட கணக்கானது, செலுத்தப்பட்ட முதலுக்கு வருஷம் ஒன்றுக்கு நூற்றுக்கு 12 வீதம் சகல செலவும் போக இலாபத்தைக் காட்டிற்று. இந்த இலாபத்தைத் தீர்க்காலோசனையின் பேரில் ஆபத்தனமாகப் பிடித்துவைக்கப் பட்டது. இது ஒரு நல்ல ஆரம்பம். அந்தச் சங்கமானது ஆரம்பித் திருக்கிறபடியே நடந்துவந்தால், அந்தச் சங்கத்திற்கு மட்டு மல்லாமல் இந்தியாவுக்குங் கூட க்ஷேமகரமா யிருக்கும்.

இந்தியாவின் பற்பல நகரங்களி லிருக்கும் முயற்சி யுள்ள நகரவாசிகள், தங்கள் சொந்த நகரங்களிலே இந்தியப் பண்டசாலையை ஆதரிப்பதற்காக ஒன்று சேர்வதினுல் தங்களுக்கு மிகுதியான இலாபத்தை உண்டாக்கிக் கொள்ளுவதோடு கூட, இந்திய வர்த்த கத்திற்கும் மிகுதியான நன்மையைக் கொடுக்கக் கூடு மென்பதைச் செம்மையாய்க் கவனிக்க வேண்டும். ஒரு இந்தியப் பண்டசாலையானது எவ்வளவுக் கெவ் வளவு ஜாஸ்தியாய் வலுத்திருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு அதன் வேலை திறமா யிருக்கும். ஆகை யால் முயற்சியுள்ள நகரவாசிகள் கல்கத்தாவிலிருக் கும் சங்கத்திற்குப் போட்டியாய் அற்ப சாலைகளை ஆரம்பிப்பதைக் காட்டிலும் மேற்சொல்லிய சங்கத் தைத் திடப்படுத்தி யவர்களோடு சேர்ந்து இந்தியா மட்டும் அல்லாமல் வியாபார மண்டல முழுவதும் கவரும்படியாய் உத்தரவாதம் நிர்ணயிக்கப்பட்ட ஒரு பெரிய "இந்தியப் பண்டசாலையை" ஏற்படுத்துவ தற்காக முயன்று அதற்கு அனுசரணையாக அங் கங்கே பண்டசாலைகளையும் ஸ்தாபிப்பது நலமா யிருக்கும்.

முகம்மது பக்ஸ் முறுமுறுப்பான்; ஏனென்றால் அவனுடைய மூட்டையானது "இந்தியப் பண்டசா லைக்கு" வீண் போட்டியாக விருக்கும். ஆனால் இந் தியா முழுவதிலும் உள்ள வேலைக்காரர்களுடைய சரக்குகளைச் சந்தைக்குக் கொண்டுபோகும் மார்க்க

மட்டு மிருக்குமானால் அவர்களுடைய சங்கியையா னது மிகுதியாய் அதிகரிக்கக் கூடியதா யிருக்குமா கையால் செழிப்பான வேலைக்காரர்களுடைய நயத் துக்கு விரோதமாக அற்ப அங்காடிக்காரர்களின் நயத்தைக் கவனிக்க வேண்டியது அவசியம். ஆனால் முகம்மது பக்ஸும் நம்பிக்கை யற்றுத் துயரப்பட வேண்டிய தில்லை. ஏனென்றால் இந்தியாவிற் சூரிய வெப்பம் தணிகிற வரையில், அந்த 'மேம்சாயபு' தன் னுடைய தாழ்வாரத்தின் நிழலி லிருந்து கொண்டே தனக்கு வேண்டிய சில்லறை சாமான்களை வாங்க எப் பொழுதும் பிரியமுள்ளவளா யிருப்பாள். முகம்மது பக்ஸ் அந்த "இந்தியப் பண்டசாலை" யின் தூதனா யிருந்து அதன் சாமான்களைக் கைவண்டியில் வைத் துத் தள்ளிக்கொண்டு தெருத் தெருவாய் விற்கப் போகட்டும். இப்படிச் செய்தால் தன்னுடைய சொந்தச் சரக்குகளை மூட்டை கட்டி முதுகிற் போட் டுக்கொண்டு செல்லுவதைக் காட்டிலும் முகம்மது பக்ஸ் மிகவும் அதிக சௌகரியமா யிருப்பான் அவ னுடைய ஸார்டைனஸ் இனி யொருபொழுதும் பிடோவின் மூக்கில் தேய்க்கப்பட மாட்டாது மே லும் அவனுடைய சம்பாத்தியம், ஒரு கட்டு ஊசியி லும் ஒரு நூற் கண்டிலும் வரும் இலாபத்தை விட ஜாஸ்தியாகவே யிருக்கும்.

அதைப் பற்றி ஒருவன் நினைக்க நினைக்க ஒவ் வொரு இந்திய நகரத்திலும் ஒரு சாகையுள்ளதா யும், ஒவ்வொரு பட்டணத்திலும் ஒரு கிளையுள்ளதா

யும் ஒரு மகத்தான இந்தியப் பண்டசாலை யிருக்கக் கூடிய தென்பது சிறப்பாய்த் தோன்றும். அப்படிப் பட்ட வொரு சங்கமானது இந்திய வியாபாரத்தின் அபிவிருத்திக்கு ஓர் திடமான துணைக் கருவியா யிருப்பது மல்லாவல் விளைவுகளுக் கோர் திடமான தூண்டுதலாகவு மிருக்கும். நம்முடைய சுதேசாபி மானமுள்ள கிராமவாசியைப் போன்ற சிறிய தொழில் முயற்சி யுடையோனுக்குத், தானுண்டாக்க உத்தே சிக்கும் சாமானுக்குத் தேவை யுண்டாகும் சம்பாவி யத்தைப் பற்றி யோஜனை கேட்கக் கூடிய வொரு செல்வாக்குடைய குருஸ்தானமான சங்கம் கிடைப்ப துடன், தன்னுடைய சரக்குகள் சந்தைக்குக் கொண் டுவரத் தக்கவை யென்று மதிக்கப்பட்டால் அவை கள் விலையாவதற்கு ஒரு நயமான கர்த்தத்துவமும் கிடைக்கும். இந்தியாவி லிருக்கும் வாடிக்கைக்கா ரன், நம்பிக்கையுள்ள சரக்குகளைக் குறைந்த விலைக் குத் தான் வாங்கக் கூடிய ஒரு மனோகரமான பண்ட சாலைக்குள் சுவாதீனமாய்ப் பிரவேசிக்கக் கூடும். அந் தப் பண்டசாலைகள் தங்கள் சொந்தச் சரக்குகளை அன்னிய தேசங்களுக்கு மொத்த விலைக்கு ஏற்றுமதி செய்வது மல்லாமல் ஏற்றுமதி செய்யும் மற்றவர்க ளுக்கும் அவர்களுடைய வியாபாரச் சரக்குகளுக்கு ஒரு காட்சியிடமாயு மிருக்கும்.

இந்த சந்தர்ப்பத்தில் எச்சரிக்கையாய் ஒரு வார்த் தைசொல்லுவதும் அவசியமாயிருக்கும். ஏனென்றால் நமக்குள் ஒரு குருத்துரோகியை — ஒரு அபாயகர

மான குரூபியை—உண்டாக்காமல் நாம் எச்சரிக்கையாய் இருக்க வேண்டும். நாம் உத்தேசித்துக் கொண்டிருப்பதைப் போன்ற வொரு மகத்தான இந்தியப் பண்டசாலையானது இந்தியத் தொழில்முயற்சியின் தலைமையை ஒருதரம் அடைந்தவுடன் அபாயகரமாய் வலிதாகி, ஜனங்கள் சம்பந்தமாயும் இராஜாங்க சம்பந்தமாயும் கெடுதி செய்யக் கூடு மென்கிற விஷயத்தில் நாம் விழிப்பா யிருக்க வேண்டும். நியூயார்க்கி லிருப்பது போல் ஒரு "டம்மானி சாலை"யையாவது அல்லது, மேல்போரனி லிருப்பது போல ஒரு "வர்த்தகச் சாலை" யையாவது போன்ற ஒரு இந்திய சாலை நமக்கு ஒரு விதத்திலும் தேவை யில்லை. நியூயார்க்கில் அந்த "டம்மானி சாலை"யானது தொழில் முயற்சிச் சங்கமாய் ஆரம்பிக்கப்பட்டு வரவர அந்த நகர முழுவதையும் தடுமாறச் செய்யும்படி அவ்வளவு வலிதாயும் கெடுதலாயும் ஆயிற்று. மேல்போரன் பட்டணத்திய "வர்த்தகச் சாலை"யானது அதே மாதிரியாய் ஒரு தொழில் முயற்சி சபையாய் ஆரம்பிக்கப்பட்டு வரவர விக்டோரியா தேசம் முழுவதிலும் கொடுமை செய்யவும் இதற்குமுன் ஒரு வருஷத்திற்குள்ளேயே ஒரு மகத்தான இருப்புப் பாதைச் சங்கடத்தினால் ஆஸ்திரேலியாவை இளைக்கச் செய்ய வல்லதா யிருக்கவும் கூடியவாறு அவ்வளவு வலிமையுள்ளதாயிற்று. இப்படிப் பட்ட சங்கதி, சந்தேகமில்லாமல், குற்றமற்றவோர் இந்தியப் பண்டசாலை விஷயத்தில் ஒரு அசம்பாவிதமா யிருக்குமென்று தோன்றக் கூடும். ஆனால்

ஜாக்கிரதையா யிருப்பது நல்லது. ஏனென்றால் ஒரு இந்தியப் பண்டசாலை,கைத்தொழில் முயற்சிக் கடுத்த வொரு துரைத்தனமாகப் பெருகக் கூடும். அப்படிப் பெருகிப் பணக்கொழுப்புள்ளதும் அபிவிருத்தியற் றதுமான இந்திய வர்த்தகக் கூட்டங்களின் சாமானி யமான சரக்குகளைப் பற்றிப் பொய்ப் புகழ்ச்சி செய் துகொண்டு சில்லறை வேலைக்காரர்களின் சிலாக்கிய மான சாமான்களைக் கவனியாமலே யிருக்கக் கூடும். மேலும் அற்ப விளைவுடையோன் தன்னுடைய சரக் குகளைப் பண்டசாலையில் ஏற்றுக்கொள்ளுவதற்கு முந்தி அநேக சில்லறை உத்தியோகஸ்தர்களுக்கு இலஞ்சம் கொடுக்க வேண்டிவரும் சங்கடத்திற்கு உள்ளாகும்படி மேற்சொல்லிய பண்டசாலையில் ஒரு சூதான அதிகார தோரணை ஏற்படக் கூடும். காரிய விசாரணைக் கர்த்தர்களும்—சந்தேகமின்றி இப்போ திய சங்கத்தார் நீங்கலாக!—துன்மார்க்கங்களினால் வரு ஷாந்தரப் பாச்சியம் அதிகரிக்கும்படி செய்யலாம்; அல்லது இரகசியமானசெய்கைகளினால் தங்களுடைய சொந்த வருமானங்களை அதிகப்படுத்திக்கொள்ள லாம்; அல்லது தேசமுழுவதிலும் இராஜாங்க விஷய மாய்த் தங்களுடைய உத்தியோகஸ்தர்கள் அனைவரு டைய ஆதரவைஅக்கிரமமாய்ப் பெறலாம். மேற்சொல் லியவைகள்எல்லாம் சமீப காலத்தில்நேரக்கூடாத சம் பாவிதங்களா யிருக்கலாம். இவைகள் ஒரு விதத்தி லும்இந்திய வியாபாரத்தின் இப்போதிய அபிவிருத் திக்குத் தடையா யிருக்க மாட்டா. ஆனால் முன்

னெச்சரிப்பான காரியங்களைச் செய்து வரலாம். ஒரு "இந்தியப் பண்டசாலை"யானது ஏதேனும் மிகுதியாய் அபிவிருத்தியாகும் பட்சத்தில், விசாரணைக் கர்த்தர்கள், ஒரே ஸ்தான சம்பந்தமான கூட்டத்தார் களா யிராமல், சங்கத்தின் விதிகளை யனுசரித்து இந்தியாவின் பற்பல ஜாதிகளிலிருந்தும் வெவ்வேறு இடங்களிலிருந்தும் பிரதிநிதிகளாய் அமைந்திருக்க வேண்டியதை ஆதி முதலே நிச்சயப்படுத்திக் கொள்ளுவது நலம். சாமான்களுக்காக ஒரு பரிசோதக சங்கத்தை ஏற்படுத்தி அதன் முன்பாகப் பிரதி மாசத்தில், அல்லது, வாரத்தில், குறிப்பிட்ட வொரு தினத்தில், நூதன சாமானை வைத்துக்கொண்டிருக்கும் ஒவ்வொரு மனிதனும் யாதொரு தடையு மின்றாமல் மேற்சொல்லிய சாமானை ஒப்புவிக்கும்படியாகவும், சங்கத்தின் நடவடிக்கைகள் முழுவதும் பகிரங்கமாய் நடக்க வேண்டு மென்றும் விதிகளை யேற்படுத்தலாம்.

இந்தியப் பண்டசாலையின் அபிவிருத்தியானது இந்தியத் தொழிலமுயற்சிகளின் அபிவிருத்திக்கு மிகவும் சிரேஷ்டமான உதவியா யிருக்கு மென்பதில் சந்தேகமில்லை. சுதேசாபிமானமுள்ள பிரஜைகள் இந்த வேலையில் தலைமையான பாகத்தை வகிக்கக் கூடாதா வென்பதை நன்றாய் யோஜிக்க வேண்டும்.



# VIII.

## இந்தியாவின் வாடிக்கைக்காரர்கள்.



இந்தியக் கைத்தொழில் முயற்சியுடையோனது பிரதம நோக்கமானது இந்தியாவுக்குத் தேவையா யிருக்கும் ஒவ்வொரு சாமானையும் நிரப்புவதாகவே யிருக்க வேண்டும். ஏனென்றால் இந்தியாவைப் போன்ற ஒரு பெரிய தேசமானது, அதன் வருவாய்கள் அளவற்றதாயும் நானாவிதமாயு மிருந்தும், அன்னிய தேசங்களிலிருந்து மிகுதியாய்ச் சாமான் வாங்க வேண்டியதாயிருப்பது கிரகஸ்த முறைக் கோர் அவதூறா யிருக்கிறது. இவ்வாறு சொல்லுவதினால் இந்தியாவின் சரக்குகளை இரக்ஷிப்பதற்கு ஒரு தீர்வையைப் பற்றி நாம் சொல்ல வந்ததல்ல. எந்த வியாபாரச் சரக்குக்கும் தீர்வை யேற்படுத்தக் கூடாதென்பதையே ஸ்திரமான விதியாய் வைத்துக் கொள்ளலாம். ஆனால், இந்தியாவின் தொழில்முயற்சிகளைச் சரிவரச் செய்துவந்தால் அன்னிய இறக்குமதி தானே நசிக்குமாறு பலமாய் இந்தியாவின் வருவாய்க ளிருக்கின்றன இந்தியாவிலேயே சுயமாய் இரும்பை உற்பத்தி செய்ய ஆரம்பித்தவுடன் இந்தியாவிற்கு சுயாதிபத்தியம் தானே யேற்பட்டுவிடும். அப்பொழுது இந்திய சாமான்களை வாங்கும் பிரதம வாடிக்கைக்காரர் அதனுடைய யெல்லைக்குள்ளேயே யிருக்கும் பிரஜைகளாகவும், தங்களுடைய உபயோகத்துக்குக் கண்டு மிகுதியாகுஞ் சரக்குகளை வாங்கும் அன்னிய ஜாதியார்களே

அதன் இரண்டாவதான வாடிக்கைக்காரர்களாகவும் இருப்பார்கள். இந்தியாவானது, ஏற்கனவே, மிகுதியாய் ஏற்றுமதி செய்யும் தேசமா யிருக்கிற தென்பது நிச்சயம். அது, அன்னிய தேசங்களுக்கு அளவற்ற தானியத்தையும், தோல்களையும், பருத்தியையும், இவைபோன்ற மற்ற விளைபொருள்களையும் அனுப்பிக் கொண்டுவருகிறது; ஆனால், நாமிப்பொழுது முக்கியமாய் யோஜித்து வருவது விவசாய, அல்லது, நாட்டுப் பாங்கான, விளைவுகளைப் பற்றியதல்லாமல், “கைத்தொழில் முயற்சியினலாய” விளைவுகளைப் பற்றியதாகவே யிருக்கின்றது. இந்தியாவில் விவசாயமானது சிறப்பாகவே யிருக்கிற தென்பதற்கு ஐயமில்லை. அதன் கைத்தொழில் முயற்சிகளோ, தங்களுடைய பெருமையை இனி ஸ்தாபித்துக்கொள்ள வேண்டியவைகளாய் இருக்கின்றன. இந்தியாவின் கைத்தொழில் முயற்சியை ஆதரிக்க அதனுடைய எல்லைக்குள்ளேயே மூன்று வகுப்பான வாடிக்கைக்காரர்க ளிருக்கிறார்கள். அவர்கள் யாரெனின்,

(1) சுதேசிகள்.

(2) இந்தியாவி லிருக்கும் ஐரோப்பியர்கள்.

(3) கவர்ன்மெண்டுகளும், முனிசிபாலிட்டிகளும், பொதுச்சங்கங்களும்.

இந்திய சுதேசியானவன் முன்னே யிருந்ததைவிட இப்பொழுது மிகவும் ஜாஸ்தியாய்ச் சரக்கு வாங்குகிறவனு யிருக்கிறான். வருஷா வருஷம் அவ

னுடைய தேவைகள் அதிகரித்துக்கொண்டே வருகின்றன. சுமார் ஒரு நூற்றாண்டுக்கு முன்னே இந்திய வியாபாரத்தில் ஈஸ்டு இந்தியா கம்பெனியாருடைய ஏக சுதந்தரத்தைப் பற்றிய கேள்வியானது விவகாரத்திலிருந்த பொழுது கர்னல் மன்றோ—பிறகு ஸர் தாமஸ் மன்றோ—சென்னைப்பட்டணத்தின் மேன்மையான கவர்னரா யிருந்தவர்,பின் வருமாறு எழுதினார்.

“விலை குறைவாயும் மிக்க நல்லதாயும் தானே சேகரித்துக்கொள்ளக் கூடியதாயிருப்பதை யாதொரு தேசத்தாரும் மற்றொரு தேசத்தா ரிடத்திலிருந்து அடைய விரும்பமாட்டார்கள். இந்தியாவில், பிரஜைகளுக்கு வேண்டிய, ஏறக்குறைய ஒவ்வொரு சாமானும் ஐரோப்பாவிற் செய்யக்கூடியதைவிட விலை குறைவாயும் மிக்க நல்லதாயும் செய்யப்படுகிறது. இப்படியாகப் பஞ்சினாலும்,பட்டினாலும் செய்யப்படும் எல்லாக் கைத்தொழில் வேலைகளும், பதமிட்ட தோலும், காகிதமும், பித்தளையினாலும் இரும்பினாலும் வீட்டுக்குரியபடி செய்யப்படும் தட்டுமுட்டு சாமான்களும், விவசாயக்கருவிகளும் ஆகிய இவைகளெல்லாம் செய்யப்படுகின்றன. அவர்களுடைய உரப்பான கம்பளிகள், இளப்பமாக விருந்தாலும், அவைகள் மிகவும் விலை குறைவாக விருப்பதால், எப்பொழுதும் ஸ்திரமாய் உபயோகிக்கப் பட்டே வரும். அவர்களுடைய மிக மேன்மையான கம்பளங்கள் நம்முடையதை விட அதிகமாய்க் குளிரடக்கமாயும், அதிகமாய் நீடித்துமிருக்கக் கூடியவைகளாயிருக்கின்றன.

“கண்ணாடி சாமான்களுக்குத் தேவை சொற்பமாகவேயிருக்கிறது. கண்ணியமான சுதேசிகளிற் சிலரே அபேக்ஷிக்கிறார்கள். இவர்கள் கூட நிலைக்கண்ணாடிகளையும் விளக்குகளையும் மட்டும் அபேக்ஷிக்கிறார்கள். இந்த சாமான்களை வாங்குவோர்கள், ஐரோப்பியர்களுடன் அதிகமாய்ச் சம்பந்தப்

படும் சுதேசிகளாக மாத்திரமே யிருக்கிறார்கள். அவர்கள் அந்தச் சாமான்களை வைத்துக் கொண்டிருப்பது, தங்களுடையசொந்த உருசியைப்பூர்த்தி செய்வதற்காக வல்லாமல், தங்களுடைய ஐரோப்பிய சினேகிதர்கள் எப்பொழுதாவது தங்களை வந்துபார்க்கும்பொழுது அவர்களுக்குக் காட்டுவதற்காகவே யாம்; மற்றக் காலங்களில் அவைகளை உபயோகமில்லாத இடைஞ்சலென்று எட்டி வைத்துவிடுகிறார்கள். ஜாதிக்கட்டுகளினாலும் தேசத்தின் சீதோஷ்ண நிலைமைகளினாலும் அவர்களுடைய ஜீவன ரீதியானது சாமானியமா யிருக்கிறபடியால்,வீட்டையும் போஜனமேஜையையும் அலங்கரிக்கும் நம்முடைய தட்டுமுட்டு சாமான்களும், ஆபரணங்களும் ஹிந்துக்களுக்கு முற்றிலும் உபயோகமற்றவைகளா யிருக்கின்றன. தாழ்ந்த மண் வீடுகளில் வசித்துக் கொண்டு தரையில் சாப்பிட்டுக்கொண் டிருப்பவர்களுக்கு நமக்குள் வழங்கும் பலவித சாமான்கள் தேவையாயில்லை. அவர்களிடத்தில் போஜனமேஜைகள் கிடையா. அவர்களுடைய வீடுகள் ஜோடிக்கப்படுகிற தில்லை. தனவான்களுடைய வீடுகளிலோ வென்றால், ஒரு சிறிய சமுக்காளம் அல்லது சில பாய்களும் தலையணைகளுமே இருக்கும். ஹிந்துக்கள் தனியே சாப்பிடுகிறார்கள். அநேகர் ஜாதிக்கட்டினால் திறந்த வெளியிலும், மற்றவர்கள் கொட்டகைகளிலும், தாலங்களிலல்லாமல் மரங்களின் இலைகளிலும் சாப்பிடுகிறார்கள். ஆனால் இதை கம்பெனியாருடைய ஏக சுதந்திரத்தின் கீழ் ஐரோப்பியர்களுடைய கொடுமைகளினால் வறுமையை யடைந்திருக்கும் துர்ப்பாக்கியமான சுதேசிகளுடைய சித்திரப் படம் என்றே நினைக்கக் கூடும். ஆனால் அப்படியல்ல, இந்தியாவின் ஒவ்வொரு பாகத்திலு மிருக்கும் மிகுந்த மேன்மையும் மிகுந்த செல்வமுமுள்ள ஹிந்துவினுடைய நிலைமையும் இவ்வாறாகவே யிருக்கிறது. அது இராஜாங்க மந்திரியினுடையதாகவு மிருக்கிறது. அவனுடைய வீடு ஒரு கொட்டகையைக் காட்டிலும் சிலாக்கியமா யிருக்கிறதில்லை. சுவர்கள் அலங்கரிக்கப் படாமல் இருக்கின்றன; மண் தரையானது, குளிர்ச்சியாயிருப்

பதற்காகப் பிரதி தினமும் காலையில் தண்ணீரும் பசுவின் சாணமும் சேர்த்து மெழுகப்படுகிறது. அவனுக்கு அதில் யாதொரு ஜோடிப்பும் கிடையாது. அவன் தேவையுள்ள வர்களுக்கு ஆகாரத்தைப் பகிர்ந்து கொடுக்கிறான். ஆனல் தன்னுடைய சிநேகிதர்களுக்கு மேன்மையான விருந்தளிப் பதில்லை. அவன் தன்னுடைய மேல் அங்கவஸ்திரத்தை அப்பால் எறிந்துவிட்டுத் தன்னுடைய இடுப்பில் ஒரு வஸ் திரத்தைத் தவிர வேறொன்று மில்லாமல் பாதி யுடம்பைத் திறந்து போட்டுக்கொண்டு தனியே உட்கார்ந்து திறந்த வெளியில் தரையில் தன் போஜனத்தைச் சாப்பிடுகிறான்."

ஸர் தாமஸ் மன்றோ மனிதர்களுடைய ரீதியையும் நடையுடை பாவனைகளையும் கூர்மையாய்ப் பார்ப்பவர் மேலும் தெளிவாயும் சொல்வன்மையாயும் எழுதுப வர். இருபது வருஷங்களுக்குமுன் இந்தியாவின் நிலை மை எவ்வாறாக விருந்ததென்பதை அறிய மாட்டாத வர்கள் கூட ஸர் தாமஸ் பிரபுவினுடைய குறிப்புகள், அவருடைய காலத்தில் விஷயங்கள் இருந்தவாறு சரியாய் எழுதப்பட்டன வென்று இலகுவாய் உணரக் கூடும். அந்தக் குறிப்புகள், உண்மையாகவே, இந்நா ளில் விஷயங்களிருக்கிறபடி அவைகளைப் பற்றிய வொரு பரிகாச பாவனையாக முற்றிலு மிருக்கவில்லை. இப்பொழுதும் நாகரீகமில்லாத ஜில்லாக்களில் ஜனங் களுடைய தேவைகள் சொற்பமாகவே யிருக்கின்றன. மேலும் இன்றைக்கும் அலங்கரிக்கப்படாத சுவர்க ளைப் பெற்ற அறையில் ஆடம்பர மில்லாமல் வாசஞ் செய்யும் கிராமாந்தரப் பிரபுவானவன் ஜமாபந்திச் சுற் றுப்பயணமாயிருக்கும் கலெக்டரையாவது அல்லது

அப்படிப்பட்ட மற்ற ஐரோப்பிய உத்தியோகஸ்தர்கள் அல்லது பயணக்காரர்கள் அல்லது சிக்காரிகள் இவர்களில் யாரையாவது எப்பொழுதாவது வரவேற்ற வேண்டியதற்காக பெரிய நிலைக்கண்ணாடிகள் தொங்க வைக்கப் பெற்றதும் லஸ்தர்களால் அலங்கரிக்கப்பட்ட கிளைவிளக்குகள் உள்ளதுமான ஒரு காட்சியறை யிருப்பது அவசிய மென்று நினைக்கிறான். ஆனால் படித்த இந்தியர்கள்- மாறுதல்களில் இச்சையில்லாமல் இந்தியர்களிருந்தாலும்— ஸர் தாமஸ் மன்றோவின் நாட்களுக்குப் பின்னே மிகுதியாக மாறுதலை யடைந்திருக்கிறார்கள். கைத்தொழிற் சரக்குகளை வாங்கும் விஷயத்தில் இந்தியாவானது முன்னே யிருந்ததற்கும் இப்பொழு திருப்பதற்கும் மிகவும் வித்தியாச மிருக்கிறது. இங்கிலாந்தில் யந்திரங்களின் அபிவிருத்தியானது ஸர் தாமஸ் மன்றோ காலத்தில் "ஐரோப்பாவிற் செய்யக்கூடியதை விட விலை குறைவாயும் மிக்க நலதாயும் செய்யப்பட்ட" இந்தியாவின் கைவேலையான பருத்திநூல் வஸ்திரங்களைத் துரத்திவிட்டது மல்லாமல், ஐரோப்பியர்களால் செய்யப்பட்ட மற்ற சாமான்களும் முன்னையவிட அதிகமாகச் செலவாவதாயுமிருக்கிறது. மன்றோ காலத்தில் கண்ணாடி சாமான்களுக்குத் "தேவை சொற்பமாகவே" யிருந்தது. இப்பொழுது அதற்குத் தேவை மிகவும் அதிகமாக உண்டாயிருக்கிறது. விலை நயமான மண்ணெண்ணெயும் விலை சரசமான கண்ணாடி விளக்குகளுந் தோன்றி ஒரு மாறுதலைச் செய்திருக்

கின்றன. இன்னமும் எளிய வேலைக்காரன் ஒரு மண் அகலில் நாட்டெண்ணெயை ஊற்றி அதிலிருக்கும் திரியைக்கொளுத்தி அது மினுமினுவென்று எரியும் வெளிச்சத்தினால் திர்ப்தி யடையலாம். ஆனால் மண்ணெண்ணெயானது ஒவ்வொரு பட்டணத்திலும் பரவியிருக்கிறது மல்லாமல் கிராமங்களிலேயும் அது சாதாரணமாகிவிட்டது. ஒவ்வொரு "பெரிய கடைத் தெருவிலும்" குறைந்தது விளக்குக்கடை ஒன்றேனு மிருக்கிறது. அதில் வியாபாரம் விருத்தியாய்க்கொண் டேவருகிறது. "சிமினி" விளக்குகளிலேயே ஒரு மகத்தான இந்தியக் கைத்தொழில் முயற்சிக்கு இட மிருக்கிறது. மேலும் விளக்குகளும் பார்வைக் கண்ணா டிகளும் தவிரப் பின்னும் மற்றக் கண்ணாடி சாமான் களும் இப்பொழுது அபேக்ஷிக்கப்படுகின்றன. பட் டணத்திற்பழகும் மேல் வகுப்பையும் மத்திய வகுப் பையுஞ்சேர்ந்த இந்தியன் சோடாத் (soda) தண்ணீ ரை—அடிக்கடி, பெரும்பாலும், விஸ்கி (whisky) அல் லது பிராண்டி (brandy) யாகிய அனுபானத்தோடு சேர்த்துக்—குடிக்க விரும்புகிறான்; ஆகையால் கண் ணாடிக் கிண்ணங்களும் சோடாத் தண்ணீர்க்குப்பி களும் அபரிமிதமாய் வேண்டியிருக்கின்றன. மேலும் பெரிய வீடுகளில் மழைத்தண்ணீர் உள்ளே வராமல் தடுக்க வேண்டியது அவசியமா யிருக்கும் பொழுது வெளிச்சத்தையும் தடுக்கும் பழைய மாதிரியான கதவுகளுக்குப் பதிலாகக் கண்ணாடித் தகடுபோட்ட ஜன்னல்கள் வழக்கத்திற்கு வந்து

கொண் டிருப்பது மல்லாமல் பெரிய கடைகளில் அழுக்குப்படிந்த தட்டுப்பலகைகளுக்குப் பதிலாகக் கண்ணாடித் தகடுபோட்ட காட்சிப் பெட்டிகள் வழங்கி வருகின்றன. மன்றோ காலத்தில் ஒரு பித்தளை வட்டிலும், ஒரு பித்தளைப் பஞ்சபாத்திரமும், வாழையிலைத் தொன்னைகளுமே ஒரு இந்திய கிரகத்தில் தேயிலை நீரும் போஜனமும் அருந்தும் பாத்திரங்களா யிருந்தன. இலைத்தொன்னைகள் இன்னமும் வழக்கத்தி லிருக்கின்றன. ஆனால் பீங்கான் சாமான்கள் உபயோகத்தில் வந்து சேர்ந்துகொண்டிருக்கின்றன. ஒவ்வொரு கடைத்தெருவிலும் ஒன்று அல்லது அதிகமான "தேயிலைக் கடைகள்" இருக்கின்றன. அங்கே தட்டுப்பலகையில் வரிசையாகக் கிண்ணங்களும், தாலங்களும் வைக்கப்பட்டிருக்கின்றன. இன்றைக்கும் தாலத்திலிருந்து போஜனத்தைக் கையாலேயே எடுத்துச் சாப்பிடுவது நிச்சயமே. ஆகையால் ஆங்கிலேய பாணியில் அமர்ந்திருக்கும் இந்தியர்களைத் தவிர கரண்டிகளையும் முட்கருவிகளையும் அபேக்ஷிப்பார் விசேஷமா யில்லை. ஆனால் இவைகளையும் போஜன பாத்திரங்களாக உபயோகிக்க ஆரம்பித்து விட்டார்கள். இந்தியாவுக்கு வேண்டியதைப் பூர்த்தி செய்வதாக மன்றோ சொல்லிய நாட்டு மட்டிக் கடிதாசியானது இப்பொழுது சரக்குகளைச் சுற்றிக் கட்டுவதற்கு மட்டும் உபயோகப்படுகிறதே தவிர அதற்கு மேல் சிலாக்கியமான உபயோகம் அதற்கு இல்லை. மேலும் ஒருவருக்கொருவர் கடிதம் எழுது

வதில் நோட் பேப்பர் அல்லது பூல்ஸ்காப் (Note paper or foolscap) என்று சொல்லப்பட்ட அளவு கடிதாசிகளைத் தவிர வேறெதையும் கண்ணியமான சுதேசிகள் இக்காலத்தில் உபயோகிக்கிறதில்லை. இவ் விதமாக இந்தியாவில் மகத்தான மாறுதல் உண்டா யிருப்பது நன்றாய் விளங்குகிறது. ஜீவன ரீதியானது நாளுக்குநாள் உயர்ந்ததரமாகவே ஆய்க்கொண்டுவருகி றது. இது இந்தியாவின் நன்மைக்கா அல்லவாவென் பது— இந்த மாறுதலினால் இந்தியாவுக்கு அதிக சுகம் உண்டாயிருக்கிறதா இல்லையா என்பது—நாம் இங்கே சொல்லவேண்டிய விஷய மல்ல. நாம் இங்கே கவனித் துவருவது இந்தியாவின் தேவைகளைப்பற்றியேயாம். அப்படிப்பட்ட தேவைகள் நாளுக்கு நாள் அதிகரித் துக்கொண்டே வருகின்றனவென்பதும், ஆகையினால் முன் காலத்தில் இருந்ததை விட கைத்தொழிலினா லுண்டாக்கப்பட்ட சாமான்களுக்கு மிகவும் அதிக மான தேவை—இந்தியா நிரப்பவேண்டியதாய்—இப் பொழுது உண்டாயிருக்கிறதென்பதும் உண்மையே. இந்தியாவின் பட்டணங்களின் ஜனத்தொகையானது அதிவேகமாய்ப் பெருகிக்கொண்டே வருவதுடன் பட்டணத்தில் வந்து குடியேறும் ஒவ்வொருவனும் தன்னுடைய நாகரீகமில்லாத தகப்பனுக்கு ஒருபொழு தும் தெரிந்திராத அநேக சாமான்களின் தேவையை உண்டாக்கிக் கொள்ளுகிறான். அவன் தன்னுடைய தகப்பனை விட மிகவும் நன்றாய் உடுத்திக்கொள்ளு கிறது மல்லாமல் அதிகமான ஆடைகளையும் தரிக்

கிறான். அவன் பிரதிதினமும் அதிக சுகங்களையும் அனுபவித்துக்கொண்டே வருகிறான். நாள்தோறும் தன் வேலை முடிந்த பிறகு வீட்டிற்குத் திரும்பி வந்ததும், அவன் ஒரு நீண்ட கை நாற்காலியில் சாய்கிறான். அவனுடைய தகப்பனோ தன்னுடைய வீட்டுத் திண்ணையில் சாய்வது வழக்கம். அவன் ஒரு மேஜையின் பேரில் கடிதாசியில் எழுதுகிறான். அவனுடைய தகப்பனோ— அவனுடைய தகப்பன் எப்பொழுதாவது எழுதினால்— தன்னுடைய முழங்காலில் ஒரு ஓலையேட்டை வைத்துக்கொண்டு அதில் எழுதுவது வழக்கம். அவன் "வாசிக்கும் விளக்கு" என்ற ஓர் விதமான விளக்கின் வெளிச்சத்தில் சுகமாய் வாசிக்கிறான். அவனுடைய தகப்பனோ "சிராகு" என்று சொல்லும் சுதேச மண்ணாகலின் மினுமினு வெளிச்சத்தில் தன்னுடைய கண்களை நெரித்துக்கொள்ளுவது வழக்கம். அவன் சவர்க்காரம் தேய்த்துக்கொள்ளுகிறான். அவன் தகப்பனோ ஜலத்தைத் தேய்த்துக்கொள்ளுவது வழக்கம். ஒரு வேளை அவன் கின்னரம் வாசிப்பான். அவனுடைய தகப்பனோ மேளமடிப்பதோ அல்லது தன்னுடைய அங்குலியைக் கட்டை விரலோடு சேர்த்து நொடிப்பதோ வழக்கம். அவன் தன்னுடைய கைக் கெடிகாரத்தைப் பார்த்து நேரத்தைச் சொல்லுகிறான். அவன் தகப்பனோ சூரியனை அல்லது நட்சத்திரங்களைப் பார்த்து நேரத்தை நிதானிப்பது வழக்கம். இதனை வாசிக்கும் ஒவ்வொரு இந்தியனும் இந்தச் சித்திரப் படத்தைத் தனக்குத்தானே பூர்த்தி செய்து

கொள்ளக் கூடுவது மல்லாமல் அன்னியதேசத்தி லிருந்து சாமான்களை, அற்பமாயோ சூனியமாயோ, இறக்குமதி பண்ணிக்கொண்டு இந்தியாவானது தன்னுடைய சொந்தத் தேவைகளை நிரப்புவதற்கு வாய்ப்புள்ளதாயாகக் கூடுமானல் இந்தியாவிலுள்ள வாடிக்கைக்காரர்களே, இந்தியாவில் உண்டாக்கப்படுகிற சாமான்களை மிகவும் ஜாஸ்தியாய்ச் செலவாகும்படி செய்யக் கூடியவர்க ளென்பதை அறியக் கூடும்.

ஐரோப்பிய பிரஜைகள், "இந்நாட்டில் பிறந்தோர் களும்", யுரேஷியர்களும் நீங்கலாக, ஒரு மிகவும் சிறிய இனத்தினரா யிருக்கிறார்கள். ஆனலும் அவர்களுள் உயர்ந்த சம்பளங்களும் செலவு பிடிக்கும் உருசிகளும், வழங்கிவரும் ஒரு வகுப்பினரா யிருக்கிறார்கள். எவர்களை வாடிக்கைக்காரர்களாக அடைவது இந்தியாவுக்குத் தகுதியாக விருக்குமோ அத்தகைய நேர்த்தியான ஒரு வகுப்பினராய் அவர்கள் அமைந்திருக்கிறார்கள். இந்தியாவில் ஒரு ஐரோப்பியருக்குக் கிடைக்கும் சம்பளமானது அவருக்குச் சமதையான ஒரு அந்தஸ்தி லிருக்கும் ஒரு சுதேச கனவானுடைய சம்பளத்தை விட, சராசரியில், சுமார் பத்து மடங்கு அதிகமாக விருக்கிற தென்றே சொல்லலாம். வித்தியாபட்டம் பெற்ற ஒரு சுதேசியினுடைய சேவகமானது மாதம் ஒன்றுக்கு ரூபாய் 25 வீதமுள்ள பிரதம சம்பளத்தில் இலகுவாய்க் கிடைக்கக் கூடியதாயிருக்கிறது. ஆனல் ரூபாய் 250-க்குக் குறைந்த பிரதம சம்பளத்தில் இந்தியாவுக்குச் சீர்

மையிலிருந்து வர இஷ்டமுடைய ஆங்கிலேய வித்தியாபட்டம்பெற்றவர்கள் அநேகர் இலர். ஒரு வர்த்தகசாலையில் ஒரு சுதேச குமாஸ்தா ஆரம்பத்தில் மாதம் ஒன்றுக்கு ரூபாய் 15 கிடைக்கிறதென்று சந்தோஷப்படுகிறான். ஆனால் வெளியே யிருந்து வரவழைக்கப்பட்ட ஐரோப்பிய உதவி சாதாரணமாய் ரூபாய் 150-க்கு மேல் வாங்குகிறான். வெளியே யிருந்து வரவழைக்கப்பட்ட ஐரோப்பியர்களுள் 1000 ரூபாய் சம்பளம் எப்படி மதிக்கப்படுமோ அவ்வளவு பெரிதாக 100 ரூபாய் சம்பளம் இந்தியாவின் சுதேசிகளுள் மதிக்கப்படுகிறது. ஆகையால் இந்தியாவில் பிரஜா சம்பந்தமான இராஜாங்கச் சேவைகளிலும், இராணுவச் சேவைகளிலும், போலீஸ், காடு, வித்தை, பின்னும் மற்ற இலாகாக்களிலும், இருப்புப்பாதைகளிலும், விவகார சாஸ்திரத்திலும், வர்த்தகத்திலும் அமர்ந்திருக்கும் எல்லா ஐரோப்பியர்களுடைய மொத்த சம்பாத்தியங்கள் ஒரு கோடீசுவரியனுடையசெப்பனத்திற்குவிஷயமா யிருக்கத்தகுந்தகோடிக்கணக்கான தொகையா யிருக்கவேண்டும். இந்தியாவிலுள்ள ஐரோப்பியன் தான் சம்பாதிப்பதை சாதாரணமாய்ச் செலவழிக்கிறான்—அடிக்கடி அதற்குமேல்ஜாஸ்தியாகவும்! செலவழிக்கிறான். அதில் பரிதபிக்கத்தக்க விஷயம் என்னவென்றால், இந்தியாவின் கைத்தொழிலாளிகளுக்கு அவனுடைய ரூபாயில் மிகவும் சொற்ப பாகந்தான் கிட்டுகிறது. இந்தியாவி லிருக்கு மொரு ஐரோப்பியன் ஏன் அவ்வளவு செலவழிக்க வேண்டு மென்பதைப் பற்றி நாம் பேசு

வோமானால், ஐரோப்பிய ரீதியைக் கண்டிப்பாய் அனுசரித்து இந்தியாவில் ஜீவனம் செய்வது ஒருவாறு அதிகச் செலவுள்ளதா யிருக்கிறதென்று நாம் முதலெடுப்பில் பதில் சொல்லக் கூடும். இந்தியாவுக்கு வருகிற ஐரோப்பியன், ஐரோப்பாவில் தனக்கு வழக்கமா யிருந்துவந்த வஸ்துக்களையே இந்தியாவில் அனுபவிக்க விரும்புகிறான். அந்த வஸ்துக்கள் பல முறையில் அதிகச் செலவுபிடிக்கிறவைகளா யிருக்கின்றன. இதற்குச் சாமானிய உதாரணமாக, இங்கிலாந்தில் காலை போஜனத்திற்காக முட்டைகளும் பன்றி இறைச்சி வற்றலும் அவனுக்குப் பழக்கமா யிருந்திருப்பின், இங்கேயும் காலை போஜனத்திற்காக முட்டைகளையும், பன்றி இறைச்சி வற்றலையும் பெற அவன் விரும்புவான். ஆனால் இந்தியாவில் முட்டைகள் மலிவாக இருந்தாலும், இந்தியாவில் அவன் வாங்கவேண்டியதாயிருக்கும் தகரத்திலடைத்த பன்றி இறைச்சி வற்றலானது சுதேசத்தில் தான் சம்பிரமமாய்ச் சாப்பிட்ட சாமானிய உப்பிட்ட பன்றியிறைச்சித் துண்டை விட மிகவும் அதிக விலையுயர்ந்ததா யிருக்கிறது. அதைப் போலவே இங்கிலாந்தில் அவன், "பீர்" என்னும் பானத்தை அருந்தினால் ஒரு கிண்ணம் நிறைய ஒருதரம் அருந்தும் உத்தமமான மதுவே இரண்டு பென்ஸுக்குக் கிடைக்கும். இந்தியாவிலோ, அதே அளவு, குறைந்தது, நான்கு அல்லது ஐந்து மடங்கு அதிகமாய்ச்செலவுபிடிக்கும். மேலும் இந்தியாவி லிருக்கும் ஐரோப்பியன் சாதார

ணமாய் அதே அந்தஸ்த்தில் தன்னுடைய தேசத்தில் உள்ளவனைப் போல் அவ்வளவு செட்டா யிருக்கிற தில்லை யென்றும் சொல்லலாம். இங்கிலாந்தில் சம் பளநாள் வரும்பொழுது சம்பளம் வாங்குவோன் பாங்கியில் எவ்வளவு பணம் போடலாமென்று கணக் கிடும் நோக்கமாய்த் தனக்கு இனி நேரக்கூடிய செல வுகளை எண்ணிப்பார்ப்பது வழக்கம்; இந்தியாவில் தனக்குச் சம்பளம் மிகவும் அதிகமாகக் கிடைத்தா லும், பாங்கிக்குத் தான் கொடுக்கவேண்டிய கடன் எவ் வளவு ஜாஸ்தியாகு மென்பதைக் கணக்கிடும் நோக்க மாய்த் தன்னுடைய முந்தின செலவுகளை எண்ணிப் பார்ப்பான். இந்தியாவில் ஜீவன நிலைமை, ஒரு விதத் திலும் ஐரோப்பியனைச் செட்டா யிருக்கும்படி செய் யமாட்டாது. பிரஜா சம்பந்தமான இராஜாங்கச் சேவை ல்களிலும், இராணுவச் சேவைகளிலும், அநேக இதர இலாகாக்களிலும் சேவிப்பவர்களுக்குப் பணம் மீர்க்க வேண்டிய அவசிய மில்லை. ஏனென்றால் விருத்தாப் பியத்தில் தனக்காக அல்லது தன்னுடைய மனைவி மக்களுக்காக உபயோகப்படும் பொருட்டு உபகாரச் சம்பளம் ஏற்பட்டிருக்கிறது. இந்த மாதிரி உபகாரச் சம்பளம் பெறுதவர்களுக்கும் ஒருவகை ஏற்பட்டிருக் கிறது. காலஞ்சென்ற ஒரு ஐரோப்பியனுடைய பெருத்த வியாபாரம் நின்றுபோய் அவனுடைய விதவையும் மக்களும் தரித்திரர்களாய்ப் போய்விட் டால், இந்தியாவிலுள்ள ஐரோப்பியர்கள் எல்லோரும் சேர்ந்து அவர்களுக்காக ஒரு பெருந்தொகையைச் சேர்த்துக் கொடுக்கும்படி அவ்வளவு கருணையுள்ள

வர்களா யிருக்கிறார்கள். ஐரோப்பிய ஜாதிக்குரிய ஒழுக்கங்களும், இந்தியாவில் அதிகச் செலவுபிடிக்கிறதா யிருக்கின்றன. இந்தியாவில் உஷ்ணம் ஜாஸ்தியாயிருப்பதால் பகற் காலத்தில் ஒரு விதமான தமாஷான காரியங்களும் செய்யக்கூடவில்லை. ஆகையால் உத்தியோகத்தில் கழியும் நேரம் தவிர இந்தியாவில் மற்ற நேரங்கள் அதிகச் செலவுபிடிக்கும் விருந்துகளிலும், சீட்டு முதலிய ஆட்டங்களிலும் உல்லாசக் கூட்டங்களிலுமாகக் கழிகின்றன. பெரிய சம்பளம் வாங்குவோர்கள் இதை நடத்திக் காட்டுகிறார்கள். சொற்ப சம்பளம் வாங்குவோர்கள் பின்செல்ல முயலுகிறார்கள். இங்கிலாந்தில் மிகவும் அடக்கமான சுபாவமுடைய ஒரு சிறுவன், தினி சாப்பிடுவதற்கு ஆரம்பத்தில் ஒரு குவளை உயர்ந்த சாராயம் வகையராக்களையும் முடிவில் ஒரு குவளை மற்றொரு வகைச் சாராயத்தையும் குடிக்கக் கற்றுக்கொள்ளுகிறான். இங்கிலாந்தில் எப்பொழுதாவது ஒரு துணுக்குப் புகையிலை குடித்த சிறுவன், இந்தியாவில் கணக்கில்லாமல் எகிப்த் சுருட்டுகளைக் குடிக்கக் கற்றுக் கொள்ளுகிறான். இங்கிலாந்தில் "டிராம்" வண்டியிலேறி உத்தியோக சாலைக்குச் சென்ற மனிதன், இந்தியாவில் "புரோவாம்" வண்டியிற் செல்லுவது அவசியமென்று காண்கிறான். இங்கிலாந்தில் கிராமத் திருவிழாவுக்கு ஒரு ஷில்லிங்கு அல்லது அரைக் கிரவுன் கொடுத்தவன், இந்தியாவில் விளையாட்டுகளுக்கு இருபது ரூபாய்க்குக் குறைவாகக் கொடுக்க வெட்கப்படுகிறான். இது

இந்தியாவில் ஏற்பட்ட முறைமையாயிருக்கிறது. அதை முற்றிலும் நிராகரிப்பவன் மிகவும் தைரியசாலிதான்; ஆனால் அவன் மெச்சிக்கப்படுகிறவனல்ல. மேம்சாயபு செய்தியும் இதே தான். ஜீவனத்திற்கு அவசியமானவைகள் சம்பந்தப்பட்ட வரையில் இந்தியாவில் குடித்தனம் நடத்துவது ஆச்சரியகரமாய்ச் சொற்ப செலவில்முடிகிறது. ஆனால் தொடர்ச்சியாய் நடத்தப்படும் விருந்துகளினாலும் உபசரணைகளினாலும், பொழுது போக்குகளினாலும், குடித்தனத்துக்கு விபரீதச் செலவு உண்டாகிறது. இந்தியாவி லிருக்கும் அநேக ஐரோப்பியக் குடித்தன ஸ்திரீகள் இந்த தேசத்திற்கு அவர்கள் வருவதற்கு முந்தித் தொடர்ச்சியான விருந்துகளை அனுபவித்தவர்களா யிருக்கிறார்கள். அப்படி அனுபவியாதவர்களும் அநேகர் உண்டு. ஆயினும் இந்தியாவில், மற்றொரு பழக்கத்தைச் சீக்கிரம் கற்றுக்கொள்ளுகிறார்கள். இங்கிலாந்தில் குருக்கள்மாரின் பெண்ணாயிருப்பவளாய் அந்த தேசத்தில் தங்கள் கோவிலுக்கு எப்பொழுதாவது பெரிய பாதிரி வரும் பொழுது செய்யப்படும் சாமானியமான விருந்தில் மட்டும் பழகினவள் இந்தியாவிற்கு வந்தவுடன் வெகு சீக்கிரத்தில் ஆங்கிலேய—இந்தியருடைய பழக்கத்திற்குப் பிறந்தவள் போல் ஆகித் தீனிக்குப் போவதும் தீனி கொடுப்பதுமா யிருக்கிறாள். ஆகையால், இந்தியாவில், ஐரோப்பிய ஜீவன ரீதியானது அதிகச் செலவு பிடிக்கிறது. அப்படியிருந்தும் அவர்கள் தங்களுக்கு வேண்டிய சாமான்களை இந்தியாவில்

வெகு சொற்பமாகவே வாங்கிவருவது விசனிக்கத்தக்கதா யிருக்கிறது. இந்தியாவானது—ஒரு குண்டூசிக் கட்டி முதல் மகத்தான 'பயானே' (Piano) வாத்தியப் பெட்டி ஈருக—நல்ல சாமான்களை மலிவாய் நிரப்பக் கூடுமானுல் இந்தியாவி லிருக்கும் ஆங்கிலேயக் குடித்தன ஸ்திரீயானவள் அவைகளை வாங்குவாள். ஏனென்றுல் ஆங்கிலேய ஸ்திரீகள், சுபாவத்திலேயே செட்டாய்ச் செலவழிப்பவர்கள். அவள் இந்தியாவில், ஊதாரிக்குணமுள்ளவளா யிருந்தாலும் தன்னுடைய சிறப்பு சாமான்களை மலிவாய் வாங்க விரும்புகிருள். ஊதாரிச் செலவுள்ளவள் கூடத் தன்னுடைய சமயற்காரனிடத்திலும், பலசரக்குக் கடைக்காரனிடத்திலும் கண்டிப்பாய்ப் "பேரம்" பண்ணுகிருள். மலிவாய் சாமான்களை வாங்க ஆங்கிலேய ஸ்திரீகளுக்கிருக்கும் இந்த இயற்கையான பிரியத்தை அறிந்தே ஐரோப்பிய சவுளி வர்த்தகன், அடிக்கடி, "பிரமிக்கும்படியான விலைவிவரங்களோடு" தன்னுடைய சரக்குகளை விளம்பரப்படுத்துகிருன். இந்தியக் கைத்தொழிலாளி நவீன தினுசுகளை உண்டாக்கி சரசமான விலைக்கு விற்ருல் அவனுக்கு நல்ல இலாபம் கிடைக்கும். இந்தியாவில் ஐரோப்பியர்கள் வாங்கும் சாமான்களின் அளவை ஐரோப்பிய கொள்வோர்களால் ஓயாமற் பலகாலும் வரப்பெற்றதும் நாட்டுப்புறங்களுக்குத் தபாலில் "வாலியு பேயபிள்" (Value payable) மூலமாய் இன்றைக்கும் ஜாஸ்தியான வியாபாரத்தைச் செய்கிறதுமான ஐரோப்பிய சாமான்களை விற்கும்

மகத்தான ஐரோப்பிய பண்டசாலைகள் இருப்பதினால் அறிந்து கொள்ளலாம். இந்தியக் கைத்தொழிலாளிகள் இன்ன சரக்குகள் இறக்குமதி யாகின்றன வென்பதைக்கவனித்துக்கொண்டு வருகிறார்கள் என்பதிற் சந்தேகமில்லை. ஆகையால் நாளாவிர்த்தியில், சிறுகச் சிறுக இறக்குமதிச் சரக்குகள் குறைந்துபோய் இந்தியாவிற் செய்யப்பட்ட சாமான்களுக்கு ஜாஸ்தியாக இடமுண்டாகுமென்று நாம் நம்பலாம். இந்தியாவிற் செய்யப்பட்ட சரக்குகளென்று அவைகளிடத்தில் யாதொரு உண்மையான மனவெறுப்பு மிருக்கிறதில்லையென்று முந்தின அதிகாரத்தில் எடுத்துக்காட்டப்பட்டது. இந்த விஷயத்தினால் மிக்க நன்மையுண்டாகுமென்று எதிர்பார்க்கலாம். 1903-04 இந்த வருஷத்திய சென்னப்பட்டணப் பொருட் காட்சியில் இந்தியாவிற் செய்யப்பட்ட "விஸ்கி" என்ற சாராயத்தை ஒரு காட்சிப்பொருளாய் இரண்டு வர்த்தகக் கூட்டத்தார்கள் தெரியக்காட்டினார்கள். இந்திய சாராய மென்று அதனிடத்தில் ஐரோப்பியர்களுக்குண்டாயிருக்கிற மனவெறுப்பை அறிந்து, இந்திய சாராயமானது உண்மையான ஐரோப்பிய சாராயத்தைப் போல அவ்வளவு நன்றாய்ச் செய்யப்பட்டிருந்தாலும் இந்திய சாராயத்தை ஐரோப்பியர்கள் தங்கள் விருந்தில் உபயோகப்படுத்த வெகு வருஷங்கள் செல்லு மென்று அந்த வர்த்தகர்கள் நினைத்திருப்பார்கள் என்பது நிச்சயம். ஆனால் திராட்சரசங்களும் சாராயங்களும் நீங்கலாக-இவற்றிலும்-இவற்றைக் குடிப்ப

தில் இல்லாவிட்டாலும்! இவற்றின் வியாபாரத்தில் இந்தியாவுக்கு மிக்க நன்மையை எதிர்பார்க்க இடம் இருக்கிறது. இந்தியாவிலிருக்கும் ஊக்கமுள்ள கைத்தொழிலாளிகள் இறக்குமதி வியாபாரத்தை மிகவும் ஜாஸ்தியாய்க் குறைக்கக்கூடுமென்று நாம் நம்பலாம். இந்தியாவில் போக்குவரத்தா யிருக்கும் ஐரோப்பிய ஜனத்தொகையோடு, இந்தியாவிலேயே விடுவாசல்களை வைத்துக்கொண்டு நிலைத்திருக்கும் மிகுதியான ஆங்கிலேய-இந்தியர்களையும், யுரேஷியர்களையும் சேர்த்துப் பார்த்தால், இவர்கள் எல்லாரும் ஐரோப்பிய சரக்குகளை ஜாஸ்தியாகவோ, கம்மியாகவோ அபேக்ஷிக்கிறபடியால், மொத்தத்தில் இந்தியாவிற் சரக்கு வாங்குவோரின் சங்கியை மிகவும் ஜாஸ்தியாகவே யிருப்பது மன்றி இவர்களுடைய தேவைகளையும் நாம் நிரப்பக்கூடும்.

பிரதான கவர்ன்மெண்டார்களுடையவும், மாகாண கவர்ன்மெண்டார்களுடையவும், லோகல்போர்டார்களுடையவும், முனிசிபாலிடியார்களுடையவும், இருப்புப்பாதைகளுடையவும், சுரங்கங்களுடையவும், அநேக அர்த்தராஜகிய சபையார்களுடையவும், ஜனசபைகளுடையவும் தேவைகளைப் பற்றியோ வென்றால், இந்தியாவில் அவர்கள் சரக்குவாங்குவது அளவுக்கதிகமாயிருக்கிறதென்று இதனை வாசிப்போர் இலகுவாய் உணரக்கூடும். கவர்ன்மெண்டார்களின் விஷயத்திலோ வென்றால், அனுதாபமில்லாத "சேக்ரேட்டேரி ஆப் ஸ்டேட்டேகேள்" இந்திய விளைவுகளைப்பற்றி ஜாடை

யாய்ப் பரிகாசம் செய்வதும் இந்திய செக்ரெட்
டெரிகளின் உத்தியோக சாலைகளுக்கும், இராஜாங்க
மராமத்திலாகாக்களுக்கும் வேண்டிய ஒவ்வொரு
சாமானையும் தாங்களே இங்கிலாந்திலிருந்து பிடிவா
தமாய் வாங்கி நிரப்பிவந்த நாட்கள் சென்றுவிட்ட
தைப்பற்றி நாம் சந்தோஷிக்கலாம். இப்பொழுது
அனுஷ்டானத்திற்குக் கொண்டுவரப்பட்டிருக்கிற மா
றுதலானது மிகவும் சுககரமாயிருக்கிறது; அதனால்
பூட்டுகள், பெட்டிகள், காகிதம் இவைபோன்ற சாமா
ன்களில் தேவையானதை இந்தியாவில் மிகுதியாக
வாங்குகிறார்கள்; அதனால் இராணுவ விஷயத்திற்கா
கவும் மற்ற விஷயத்திற்காகவும் தேவையாயிருக்கும்
சேணங்கள், பாதக்குப்பாயங்கள், உடுப்புகள், சவர்க்
காரம், இவைகளைப் போன்ற சாமான்களுக்காகப்
பெரிய ஒப்பந்தங்கள் இந்தியாவிலேயே கைத்தொழி
லாளிகளுக்கு—சுதேச கைத்தொழிலாளிக்கே அல்ல—
கொடுக்கப்பட்டு வருகின்றன. மேலும் பற்பல இரு
ப்புப் பாதைகளின் தொழிற்சாலைகள், அநேக தொழி
லாளிகளை வேலையில் அமர்த்தித் தேச முழுவதிலும்
யாந்திரிக இயக்கங்களின் அறிவைப் பரவும்படி செய்
துவருவதால் அவைகள் இந்தியாவில் தொழில் கற்பிக்
கும் மகத்தான சாலைகளாய் இருக்கின்றன. மேலும்
இந்தியாவின் சுதேச இரும்பை வேலைசெய்யப் பழக்க
முண்டாய்விடும் பொழுது இந்திய என்ஜினீர்கள்
கிளம்பி, இந்தியாவில் யந்திரங்களைச் செய்துமுடிக்
கும் நாளானது ஒரு மகத்தான நாளாக இருக்கும்.

தர்ம வைத்திய சாலைகள் விஷயத்திலோ வென்றால், 1903-04 இந்த வருஷத்தியச் சென்னபட்டணப் பொருட் காட்சியில், மிக்க சிறப்பாயும், உயர்ந்த தரமாயும், இந்நாட்டுக்குத் தக்கவாறாயும், செய்யப்பட்டிருந்த சத்திரப் பிரயோகக் கருவிகளை, கல்கத்தாவிலுள்ள ஒரு வர்த்தகக் கூட்டத்தார், காட்சிப் பொருளாகக் காட்டவல்லவர்களா யிருந்ததைக் காண மிகவும் சந்தோஷமா யிருந்தது. கைத்தொழில் முயற்சியுடைய இந்தியர், நிச்சயமாய்த் தம்முடைய சரக்கை இராஜாங்கத்தார் வாங்குவார்களென்று நம்பிக்கையோடிருக்கலாம்.

அன்னிய தேசங்களுக்கு இந்தியாவிலிருந்து அனுப்பப்படும் ஏற்றுமதிகளின் நிலைமைகள் க்ஷேமகரமாயும் க்ஷேம சூசகமாயு மிருக்கின்றன. ஆபிரிக்காவில் அவைகள் விசேஷ நன்மையைப் பயந்து வருகின்றன. "இராஜ்ஜிய தந்திரத்திய வருஷாந்தர புஸ்தகம்" ("statesmen's year book") என்னும் கிரந்தத்தில் ஸான்ஸிபாரைப் பற்றிய பக்கங்களில் "ஆங்கிலேயர் ஆளுகைக்கு உட்பட்டிருக்கிற 7000 இந்திய பிரஜைகளின் மூலமாய், ஸான்ஸிபாரிலும், கீழ ஆபிரிக்காவிலும் நடந்துவரும் வியாபாரத்தில் ஏறக்குறைய முழுமையும், நேராகவோ அல்லது மாறலாகவோ நடத்தப்படுகிறது" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆதரிக்கப்பட்ட கீழ ஆபிரிக்கா இராச்சியத்தை (மம்பசாவைப்) பற்றி எழுதியிருப்பதில், அதே புஸ்

தகத்தில், "இப்பொழுது வியாபாரமானது கீழ இந்திய வர்த்தகர்களால் நடத்தப்பட்டு வருகின்றது; இறக்குமதிச் சரக்குகள் மாஞ்சேஸ்டர் சரக்குகளாகவும், பம்பாய்த்துணி, பித்தளை, கம்பி, மணிகள், போஜனவஸ்துக்கள் ஆகிய இவைகளாகவும் இருக்கின்றன" வென்று குறிப்பிட்டிருக்கிறது. மாஞ்சேஸ்டர் சரக்குகள் நீங்கலாக, இந்த இறக்குமதிச் சரக்குகள், ஏறக்குறைய முற்றிலும், இந்தியாவிலிருந்தே வருகின்றன; அன்னிய தேசத்தார் நம்முடைய சரக்குகளை வாங்கி வருவதற்கு ஓர் இனிய உதாரணமாக, 1903-04 இந்த வருஷத்தியச் சென்னப்பட்டணப் பொருட்காட்சியானது திறக்கப்பட்ட தினத்திலேயே கல்கத்தாவிலிருக்கும் "உத்தரவாதம் நிச்சயிக்கப்பட்ட இந்திய பண்டசாலைக்கு" கீழ ஆபிரிக்காவிலிருந்து, ரூபாய் 5000க்கு இந்தியக் கம்பளங்கள் அனுப்பும்படி ஒரு தாக்கிது கிடைத்த செய்தியை நாம் குறிப்பிடலாம். மேற்சொல்லியபடி கீழ ஆபிரிக்கா வியாபாரமானது "இப்பொழுது கீழ இந்திய வர்த்தகர்களால் நடத்தப்பட்டு வருகின்றது" என்ற வாக்கியத்திலிருக்கும் "இப்பொழுது" என்னும் பதம் வெகுகாலம் ஆவதற்கு முன்னேயே, இந்திய வர்த்தகர்கள் தங்களுக்குப் பலமான போட்டிக்காரர்கள் அந்த தேசத்தில் உண்டாய் விடுவார்கள் என்று எதிர்பார்க்கும்படியான துர்க்குறியாயிருக்கிறது. ஆனல், உண்மையாகவே, ஆபிரிக்கா கண்டத்தில் போக்குவரத்து சௌகரியங்கள் அதிகரித்தால், அவ்விடத்

திய வியாபாரம் விசேஷமாய் விருத்தியாகி இப்போ திருப்பதைக் காட்டிலும் அதிகமான வியாபாரிகளுக்கு இடங் கொடுக்கக் கூடியதாயிருக்கும். எப்படியானாலும், இந்திய வர்த்தகர்கள் அந்தத் தேசத்தில் முதல்முதல் பிரவேசித்த சௌகரியத்தைப் பெற்றிருப்பதினாலும், இந்தியாவின் கூலிக்குறைவினாலும், இந்தியாவின் மேலைக் கடற்கரைக்கும் ஆப்பிரிக்காவின் கிழக்கடற்கரைக்கும் நேரான போக்குவரத்திருப்பதாலும், இந்திய வர்த்தகர்கள் தங்கள் வியாபாரத்தைக் காப்பாற்றிக் கொள்ள சக்தியுள்ளவர்களாய் இருக்க வேண்டும். தென் ஆபிரிக்காவிலும், ஸ்டிரேயிட்ஸ் ஸெட்டில்மெண்டுகளிலும், மோரீஸிலும், கீழ இந்திய தீவுகளிலும் எண்ணிறந்த இந்திய வர்த்தகர்கள் இருக்கின்றார்கள். இந்தியாவின் கைத்தொழில் முயற்சிகள் அபிவிருத்தியாகவாக, இந்திய சரக்குகள், உண்மையாகவே, அவைகள் மலிவாய் விளைவிக்கப்படுகிறதை யுத்தேசித்தால், இந்தியாவில் மாத்திரம் அல்லாமல், உலக முழுவதிலும் அங்கீகரிக்கப்பட வேண்டும்.

வாடிக்கைக்காரர்கள், இந்திய சரக்குகளுக்காக-இந்தியாவிலும், பிறதேசங்களிலும் - காத்திருக்கிறார்கள். செய்ய வேண்டியதெல்லாம், கைத்தொழில வேலையின் அபிவிருத்தியாகவே யிருக்கிறது.



௰அ

## அரிஷ்ட நிவாரணம்

நமது கைத்தொழில் முயற்சியுடையோன் தான் ஆரம்பிக்க உத்தேசிக்கிற தொழில் முயற்சிக்கு வேண்டிய கைம்முதலைப் பற்றிக் கணக்கிடும் பொழுது, தன்னுடைய தொழிலானது அரிஷ்ட நிவாரணமாகித் தான் முதலெடுப்பிற் செலவழித்த பணத்தை யெடுத்துக்கொடுத்து இலாபம் கொடுக்க ஆரம்பிக்கிற வரையில் அந்தத் தொழிலை நடத்தப் போதுமான வொரு தொகையை ஏற்படுத்தி வைக்க வேண்டுமென்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அபிவிருத்தியாகக்கூடிய அநேக முயற்சிகள் முறிந்துபோனதற்குக் காரணம் அவைகளை ஏற்படுத்தினவர்கள், அவைகள் ஆரம்பமாகிச் சில வாரங்களோ, மாதங்களோ, வருஷங்களோ, நஷ்டகரமாகவே நடந்துவரக் கூடியதாயிருக்கும் காலத்தில் அவைகளை நடத்திவர வேண்டியதற்கான பொருளைத் திட்டஞ்செய்யத் தவறிப்போ யிருப்பதேயாம். அவர்கள் ஒரு தொழிலை நடத்துவதற்கு வேண்டிய கருவிகளையோ, அல்லது உபகரணங்களையோ கிரயத்துக்கு வாங்கி, வேலையை ஆரம்பித்து உடனே இலாபத்தை யடைய எதிர்பார்க்கிறார்கள். அவர்கள் தங்களுடைய நம்பிக்கையில் மோசம் போய்விட்டால், கைம்முதல் செலவழிந்து போய்விட்ட நிமித்தம் தாங்கள் மேற்கொண்ட காரியத்தை முடிக்காமல் விட்டுவிடும்படி நேரிடுகிறது. அவர்களிஷ்டப்பட்டால் ஜாஸ்திப் பணம் கிடைப்பதாக

விருந்தாலும், அவர்கள் மிகுந்த அதைரியத்தை யடைந்து, தங்களுடைய முயற்சியானது பலிக்காதென்று மதித்து தாங்களே வலியத் தங்கள் தொழிலை நிறுத்திவிடும்படி சம்பவிக்கிறது. ஒரு நவீன வஸ்துவானது தோன்றினவுடனே அதை ஜனங்கள் வாங்குவது அருமையென்று அவர்கள் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். மேலும் கைத்தொழிலாளி தானே தன்னுடைய கைத்தொழிலைப் பற்றி இரவும் பகலும் ஒருக்கால் நினைத்துக்கொண் டிருந்தாலும் அதைப் பற்றி ஜனங்கள் கேவலம் கேள்விப்படுவதற்காவது அல்லது கொஞ்சமாகிலும் உண்மையான கவனத்தை அதனிடத்தில் அவர்கள் செலுத்துவதற்காவது முன்னே அநேக இரவும் பகலும் கழிந்து போய்விடு மென்பது மிகவும் சம்பாவிதம். இங்கே ஒருவன், அங்கே ஒருவனாக அந்த நவீன விளைவைப் பரீக்ஷை பார்ப்பான். பிறகு, வரவர, அது உண்மையாகவே தேவையாக விருந்தால், அதை பரீக்ஷபார்த்த ஒருவன் மற்றொருவனுக்குச் சொல்லி, இப்படியாகத் தங்கள் சிநேகிதர்களிடம் அதைப் பற்றிப் புகழ்ந்து பேசுவதினால் அது ஜாஸ்தியாய் அபேக்ஷிக்கப்பட்டுக் கடைசியில் அந்த முயற்சியானது முழு நஷ்டமாய் முடிவதாயிருந்த அரிஷ்டம் நிவாரணமாகி இலாபம் கொடுக்க ஆரம்பிக்கும். இலாபம் கொடுக்க ஆரம்பிக்குமுன் மிகுந்த பொறுமையும் விடாமுயற்சியும் அவசியமாக விருக்கும். ஆனால் தொழில்முயற்சியுடையோன் தன்னுடைய முயற்சி

யானது உண்மையாகவே ஒரு நல்ல விஷயமென்று தனக்குள்ளேயே நிச்சயித்துக்கொண்டிருந்தால் அவனுடைய பொறுமையும் விடாமுயற்சியும் அதிக பலனை யடைவிக்கு மென்பது மிகவும் சம்பாவிதம். தொழில்முயற்சியுடையோன் பின்வரும் புத்திமதியை அநுசரித்து வேலைசெய்வது உத்தமம்: "ஒரு முயற்சியானது இடையூறின்றி நடக்குமென்று தீரத் தெரிந்துகொள்ளுவதற்கு முன் அதை ஆரம்பிக்காதிருக்க திடநிச்சயம் கொள்ளுவாயாக: ஆனால் அதை ஒருக்கால் ஆரம்பித்துவிட்டால் அது இடையூறின்றி நடக்காதென்று நிரூபிக்கப்படுவதற்குமுன் அதைக் கைவிடாதிருக்கத் திடநிச்சயம் கொள்ளுவாயாக."

சென்றகாலங்களில் காரியசித்தியை அடைந்திருக்கிற இந்திய தொழில்முயற்சியுடையோர்களைப் பற்றிய இரண்டு கதைகளை யிங்கே எடுத்துச்சொன்னால் அது இக்காலத்திய தொழில்முயற்சியுடையோர்கள் துணிவுள்ளவர்களாயும் விடாமுயற்சியுடையவர்களாயு மிருக்க வொரு தூண்டுதலா யிருக்கும்.

நாம் சொல்லவேண்டிய முதலாவது கதை என்னவென்றால், ஸர் ஜாம்ஸெட்ஜீ ஜீஜிபாய் என்பவரைப் பற்றிய கதையே யாம். அவர் இந்தியருள் பாரனெட் என்ற பட்டத்தை முதல்முதல் பெற்றவர்; துணிவுள்ள அந்தப் பார்ஸி ஜாதியைச் சேர்ந்தவர்; அவர் முற்றிலும் தன்முயற்சியாலேயே பெருமையையடைந்தவரா யிருந்தபடியால் அவருடைய காரியசித்தியா

னது பின்னுமதிகமாய் அதிசயமாக விருக்கிறது. அப்படிப்பட்டவராகிய ஜீஜீபாய் என்பவர் பம்பாயில், 1783-ம் வருஷத்தில், பழமொழியாய்ச் சொல்லுகிறபடி "எளிய ஆனால் கண்ணியமான பெற்றோர்களுடைய" மரபில் பிறந்தார். அவர் குழந்தைப் பருவத்திலேயே அநாதையாய்ப் போனபடியால், அவர் உண்மையான வறுமையின் கஷ்டங்களை யனுபவித்தார். சொற்பப் படிப்புத்தான் அவருக்குக் கிடைத்தது. அவர் சிறுவயதிலேயே தம்முடைய ஜீவனத்தின் பொருட்டு ஒரு வர்த்தகசாலையில் வேலையில் அமர வேண்டியிருந்தது. ஆனால் ஜாம்ஸெட்ஜியோ கடிதங்களுக்குப் பிரதி யெழுதுவதும் கைச்சாத்து எழுதுவதுமாகிய வேலையில் நிலைத்திருக்கப் பிரியப்படும் மாதிரியான பையனா யிருக்கவில்லை. 16 வயதில் அவர் தானே சுதந்தரனாக ஆகவேண்டுமென்று தீர்மானித்துக் கொண்டார். அவரது துணிவுகரமான தன்மையானது யாத்திரை செய்யும் வர்த்தகப்போக்கிற் செல்ல அவரைத் தூண்டிற்று. அவர் சிநேகிதர்களுடைய ஒத்தாசையினால் சொற்ப மூலதனத்தை யடைந்து, அதை எடுத்துக்கொண்டு அந்தப் பாலிய வயதிலேயே தம்முடைய சொந்த நகரத்தை விட்டுப் புறப்பட்டுக் கல்கத்தாவுக்கு வந்து சேர்ந்தார். அங்கே யிருந்து சீனதேசத்திற்குச் சொற்பத் தரனை யுத்தேசித்துச் சென்றார். அது உண்மையில் ஒரு தைரியமான முயற்சியே. ஏனென்றால் அந்தக்காலங்களில் சீனதேசத்தைப் பற்றிச் சொற்பமாகவே தெரிந்

திருந்தது. அச்சிறு பிரயாணியானவர் எல்லா அபா யங்களையும் தானே எதிர்க்க வேண்டியிருந்தது. ஆனால் அவருடைய தைரியமானது சபலமாயிற்று. எப்படியென்றால் அந்த முயற்சியானது கைகூடிவந்ததினால் அவர் சீக்கிரத்திலேயே இந்தியாவுக்கும் சீனாவுக்கும் இடையே பிரயாணம் போய்வந்துகொண்டு இரண்டு தேசங்களிலும் தம்முடைய சொந்தச் சரக்குகளை விற்பனை செய்து வந்தார். 1804-ம் வருஷத்தில் அவரையும் அவருடைய சரக்குகளையும் ஏற்றிச் சென்ற மரக்கலமானது, அப்பொழுது இங்கிலாந்துடன் யுத்தம் செய்துவந்த பிரஞ்சுக்காரர்களால சிறைபிடிக்கப்பட்டதால் அச்சிறு ஜாம் ஸேட்ஜியைச் சிறைபிடித்தவர்கள் அவரை அப்பொழுது டச்சுக்காரர்களுக்குச் சொந்தமாயிருந்த நன்னம்பிக்கை முனையிற் கொண்டு வந்து முற்றிலும் தரித்திரனாய்க் கரையேற்றி விட்டு விட்டார்கள். தர்மசிந்தையுள்ள சில டச்சு சீமாட்டிகள் கொஞ்சந் தொகை பணம் சேர்த்து அந்தத்துர்ப்பாக்கியமான இந்தியனை மறுபடியும் தன்னுடைய சொந்ததேசம் போய்ச்சேரும்படி அனுப்பினார்கள். அங்கே, 21-வது வயதில், அவர் மறுபடியும் புதிதாய் ஜீவனத்தைை ஆரம்பிக்க வேண்டி நேர்ந்தது. ஆபத்துக்கு அஞ்சாமல், உடனே, அச்சிறு பார்ஸியானவர் சீனதேச யாத்திரைகளை மறுபடியும் ஆரம்பித்து அவருக்குண்டாயிருந்த அதிகரித்த பழக்கத்தினால தம்முடைய தொழிலில் மிகுந்த காரியசித்தியைப் பெற்று சொற்ப வருஷங்களிலேயே அவர் பம்பாயில்

மிகுந்த ஐசுவரியமுள்ள பார்ஸிகளில் ஒருவராயானார். அவர் ஐசுவரியவானாயிருந்த காலங்களில் தமது தாரித்திரிய காலங்களை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு தம்முடைய சொந்த நகரத்தைப் பிரத்தியேகமான பரோபகாரங்களினாலும் பொது நன்மையான ஔதாரியத்தினாலும் சிறப்பித்தார். அவர் ஜனங்களை ஆளத் தகுந்தவராயிருந்தார். பொது நன்மையில் அவருக்கு மிகுந்த உற்சாகம் இருந்தபடியால் அது அவருக்கு 1842-ல் வருஷத்தில் நைட் என்ற பட்டத்தையும் 1858-ல் வருஷத்தில் பாரனேட் என்ற பட்டத்தையும் அடைவித்தது. அவர் 1877-ம் வருஷத்தில் தமது முதிர்ந்த 94-ம் பிராயத்தில் தமக்காகவும் இந்தியாவுக்காகவும் நன்றாய் உழைத்த வோர் மனிதன் என்ற ஞாபகத்தைத் தமக்குப் பின்னால் விட்டுவிட்டு இறந்தார்.

**பா**ரனேட் பட்டத்தைப் பெற்றிருந்த வுக்குமுடைய மற்றொரு பார்ஸி கனவானாகிய காலஞ்சென்ற ஸர் தீன்ஷா மானேக்ஜீ பேடிட் என்பவருடைய கதையும் விநோதமாகவே யிருக்கின்றது. பேடிட் குடும்பத்தை ஸ்தாபித்தவர், சென்ற நூற்றாண்டின் முன்பாகத்தில் பம்பாயில் விளங்கின ஒரு பார்ஸிவர்த்தகர். பேடிட் என்ற பெயருண்டானதைப் பற்றிய கதையானது ஒரு விநோதமான உபகதையாக விருக்கிறது. நூறு வருஷங்களுக்குமுன் பிராஞ்சுக்காரர்கள் இப்போதிருப்பதை விட இந்தியாவில் மிகவும் அதிக பற்

றுள்ளவர்களாயிருந்தார்கள். டியூப்ளேயின் பிரதாபத்தையும், சென்னப்பட்டணம் 1746-ம் வருஷத்தில் பிரஞ்சு போர்க்கப்பல்களினுல் பிடிக்கப்பட்டதையும் ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருந்தவர்கள் இன்னுமிருந்தார்கள். ஹைதர் ஆலியின் சேவகத்திலும் மற்ற சுதேச அரசர்களின் சேவகத்திலும் எண்ணிறந்த பிரஞ்சுக்காரர்கள் அமர்ந்திருந்தார்கள். மேலும் எந்தத்தீவுகளைப் புகலிடமாய் வைத்துக்கொண்டு பிரஞ்சுக்காரர்கள் ஆங்கிலேய அதிகாரத்தைத் திக்கரித்து ஐம்பது வருஷ காலமாய் இந்திய வர்த்தகத்தைச் சூறையாட வல்லவர்களா யிருந்தார்களோ அந்த போர்போன், மோரீஷஸ் ஆகிய தீவுகள் 1810-ம் வருஷம் வரையில் பிடிக்கப்படவில்லை. 1813-ம் வருஷத்தில், ஈஸ்டு இந்தியா கம்பெனியார், இந்திய வியாபாரத்தில் தங்களுடைய ஏகசுதந்தரத்தை இழந்த பொழுது பிரஞ்சு மாலுமிகளும் பிரஞ்சு வர்த்தகர்களும் பம்பாயில் எண்ணிறந்த பேர்களிருந்தார்கள். அந்தப் பார்ஸி வர்த்தகர், பிரஞ்சு வர்த்தகர்களிடத்தில் மிகுதியாய்த் தொழில் நடத்திவந்தார். ஆனுல் அவருடைய பெயர் மானேக்ஜி நஸ்ஸர்வாஞ்சி கௌவாஸ்ஜி போமான்ஜி என்றிருந்தபடியால் அது அவர்களுடைய வர்த்தகப்பொறுமையை நிராகரிப்பதாக விருந்தது. அவருக்கு இவ்வளவு பெரிய பெயர் இருந்தும் அவர் ஆகிருதியிற் சிறியவரா யிருந்தபடியால் அந்தப்பிரஞ்சு வர்த்தகர்கள் சிறிய ஆகிருதியுள்ள அந்தப் பார்ஸி வர்த்தகருடைய பெயரைச் சுருக்கி அவரைலிபேடிட்-

"சின்ன மனிதன்"-என்று அழைத்து வந்தார்கள். பார்ஸிகள் குடும்பப் பெயர்களைத் தம் பெயரோடு சேர்த்துக் கொள்ளுவதில் ஒருவாறு உற்சாகமுள்ளவர்களாயிருக்கிறார்கள். பம்பாயில் "அறிக்கைக்காரா" பிரபுவென்றும், "குப்பிக்காரா" பிரபுவென்றும், 'இராயஸக்காரா' பிரபுவென்றும், இப்படியாக மற்றும் அநேக ஸ்திரமான குடிப்பெயர்களாய் வழங்கிவருவதை நாம் காண்கிறோம். இவைகளெல்லாம்-அநேக பழைய ஆங்கிலேய குடிப்பெயர்களைப் போல—முன்னோரில் ஒருவருடைய தொழிலைக் குறிப்பிடுகிறது. அந்த சின்ன பார்ஸி வர்த்தகர் தம்மைச்சுட்டிய விவரணமாகிய—பெடிட்-சின்ன மனிதன்-என்பதை அதே மாதிரியாக அங்கீகாரம் செய்தார். ஆங்கிலேய பாஷையில் அந்த வார்த்தையை உச்சரிக்கிற பிரகாரம் அது இப்பொழுது அவருடைய குடிப் பெயராய் வழங்கிவருகிறது. ஆகையால் நாம் இப்பொழுது உதாரணமாய்ச் சொல்லிவருகிறவர்—அந்த வர்த்தகருடைய குமாரனும் ஜன்ம சுதந்தரமாய்ப் பெடிட் என்ற குடிப்பெயரைப் பெற்றவருமான-தீன்ஷா மானேக்ஜி பெடிட் என்பவர். அவர் பம்பாயில் 1823-ம் வருஷத்திற் பிறந்து தமக்கு முன்னே தம்முடைய தகப்பனார் இருந்தது போலவே தாமும் ஒருவர்த்தகர் ஆனார். தீன்ஷா மானேக்ஜி பெடிட் பூரண முயற்சியுடையவரா யிருந்தது மல்லாமல் நேரிடும் சந்தர்ப்பங்களைத் தழுவிக் கொள்ளும் உத்தமமான வரத்தையும் பெற்றிருந்தார்; இப்படி இருக்கையில் 1861-ம் வருஷத்தில்

அமெரிக்காவில் பிரஜைகளுக்குள் நேர்ந்த யுத்தத்தி
னால் இப்பால் சில வருஷ காலமாக இலங்காஷையரில்
பஞ்சுக் கைத்தொழில் அழிந்து போகும்படி செய்த
ஒரு பஞ்சுக்கருப்பு உண்டான பொழுது தீன்ஷா மா
ணேக்ஜீ பெடிட் இந்தியாவிற்கு நேர்ந்திருக்கும் சந்
தர்ப்பத்தை யறிந்தவராய் அதே வருஷத்தில் பம்பா
யில் ஒரு பஞ்சு யந்திரசாலையை ஸ்தாபிப்பதற்கு வேண்
டிய வொரு துண்டு நிலத்தைச் சம்பாதித்து அடுத்த
வருஷத்தில் மாணேக்ஜீ பெடிட் கம்பெனியாரின் பிர
தம யந்திரசாலையை ஆரம்பித்துக் கூடிய சீக்கிரத்தில்
வேலையைத் துவக்கினார். அந்தத் தொழிலானது துவக்
கத்தில் ஒரு விதத்திலும் தைரியம் கொடுப்பதாய்
இருக்க வில்லை. பம்பாயில் வஸ்திரம் நெய்வது ஒரு
விஷயமாயும், ஆனால் மிகுதியாய் உண்டாக்கப்பட்ட
சரக்குகளை விலையாக்க ஒரு சந்தையைத் தேடுவது
மற்றொரு விஷயமாயும் இருந்தபடியால், அந்த அம்
பாரமான துணிகளை வந்தவிலைக்குச் சில்லறையாய்
விற்றோ, அல்லது மூட்டை மூட்டையாகவும் துண்டு
துண்டாகவும் ஏலத்தில் விற்றோ, திருப்தியற்ற வித
மாய்க் கையை விட்டுத் தொலைக்கவேண்டி யிருந்தது.
ஆனால் மாணேக்ஜீ பெடிட்டினுடைய அடங்கா முயற்
சியினால் அந்தத் தொழிலானது கைகூடி, 1881-ம்
வருஷத்தில் அந்த சங்கத்தார் அப்பொழுது உலகத்
தில் மிகவும் பெரிய யந்திரத்தை ஸ்தாபிக்க வல்லவர்
களாகி அந்த மாணேக்ஜீ பெடிட் கைத்தொழில் சங்க
மானது மகத்தான கைத்தொழிற் சாலையாக ஆயிற்று.

இதனிடையே அந்த முயற்சியுள்ள பார்வியானவர் கேவலம் பணத்தை மட்டும் சம்பாதித்துக் கொண்டிருக்கவில்லை. அவர் எண்ணிறந்த வித்தியா விஷயங்களிலும் தர்ம விஷயங்களிலும் தம்மைச் சம்பந்தப்படுத்திக்கொண்டு சற்பாத்திரமான விஷயங்களுக்கு ஏராளமான தொகைகளை நன்கொடையாகக் கொடுத்துக்கொண்டும் வந்தார். அவருடைய வாழ்நாள் முழுவதும் அவர் கண்ணியமுள்ளவரா யிருந்தது போலவே அவருடைய கடைசிக் காலங்களில் இராஜாங்க மரியாதைகளும் அவருக்கு நிறைய வந்து சேர்ந்தன. 1887-ம் வருஷத்தில், அவருடைய 64-வது பிராயத்தில் அவர் பம்பாய் (sheriff) நாட்டாண்மைக்காரராகி, 'நைட்' ஆகவும் செய்யப்பட்டார்; அடுத்த வருஷத்தில் அவர் இராஜப் பிரதிநிதியின் ஆலோசனை சபையில் ஒரு அங்கத்தினராய் நியமனம் பெற்றார். கடைசியாக, 1890-ம் வருஷத்தில்—67-வது பிராயத்தில்-ஐம்பது வருஷ காலங்களுக்கு மேற்பட்ட காலமாக மணம்புரிந்து வாழ்ந்து வந்த மனைவியாகிய சக்கரபாய் என்பவளை அவர் இழந்த வருஷத்தில்—'பாரனெட்' என்ற பட்டத்தைப்பெற்று, இந்தியாவில் 'பாரனெட்' என்ற பட்டத்தைப்பெற்ற மிகவும் சொற்பமான பேர்களில் ஒருவராய் ஆனார். கட்டியங் கூறும் உத்தியோகஸ்தர்கள் அவருக்குக் குலவிருது சித்திரித்த மெய்க்காவல் அங்கியைக் கொடுத்த பொழுது அவருடைய பெயரில் ஒரு சிலேஷையைக் கற்பித்தார்கள். "பேடிட்" என்ற வார்த்தை 'சின்ன' என்று அர்த்த

முள்ள வொரு பிரஞ்சு வார்த்தையாக விருக்கிறது மல்லாமல், லத்தின் பாஷையில், "தேடுகிறான்" என்று அர்த்தமுள்ள ஒரு வார்த்தையாகவு மிருக்கிறது. அவர்கள் அவருக்கு "தேடுகிறதையெல்லாம் அடைகிறார்" என்று அர்த்தமுள்ள கன்ஸிகுயிடர் குவட்கன்கி பெடிட் (consequitur quodcunque petit) என்ற லத்தின் வாக்கியத்தைக் குடும்ப விருதாக வளித்தார்கள். அது ஒரு சிறப்பான விருதே! ஏனென்றால் பெடிட் விஷயத்தில் "தேடுதல்" என்பதற்கு "கேட்கல்" என்று அர்த்தமல்ல; ஆனால் துணிவும் அடக்கமுடியாமையு மான ஒரு ஆண்மை என்று அர்த்தமாக விருந்தது.

ஸ்ரீ ஜிபாய், பெடிட் இவர்களுடைய உதாரணங்கள் உன்னதமாய்ச் சிறப்படைந்த மனிதர்களுடைய உதாரணங்களா யிருக்கின்றன. அவர்களுக்கு லட்சக்கணக்காய் அநேக ரூபாய் இலாபம் கிடைத்த விஷயம் நம்முடைய கிராம வாசியைப் போன்ற சொற்பத்தொழில் முயற்சியுடையவர்களின் நோக்கத்திற்கோ அல்லது பேராசைக்கோ மிகவும் ஜாஸ்தியாக விருக்கலாம். ஆனால் இந்த உதாரணங்கள் சிறப்பான காரியசித்தி சாத்தியமாகும் என்பதற்கு சாட்சியங்களாயிருக்கின்றன. இந்த மனிதர்கள் கோடிக் கணக்காய்ச் சம்பாதித்தால் அவர்களை விடக் குறைந்த மனிதர்கள் லட்சக்கணக்காயும் ஆயிரக்கணக்காயும் சம்பாதிக்கக் கூடியவர்களாய் இருக்கவேண்டும். இந்தியாவில் சின்ன வழிகளில் விசேஷித்தகாரியசித்தியைப் பெற்றிருக்கிற

ஜீவந்தர்களாயிருக்கும் கைத்தொழில் முயற்சியுடை யோர்களைப் பற்றி எண்ணிறந்த திர்ஷ்டாந்தங்களை யெடுத்துச் சொல்லலாம். ஆனால் அவர்களுடைய பெயர்களை இங்கே சொல்லுவோமானால் அது விளம்பரம் செய்யும் பித்தலாட்டங்களை ஜாஸ்தியாய் உபயோகிப்பது போற் சுவைக்கும். உதாரணமாக ஒரு மாட்டோட்டிக்கு மகனாகப் பிறந்து, சாதாரணக் கூலியாளாக ஜீவனத்தை யாரம்பித்துத் தனவானாகி இன்னும் ஜீவந்தனாயிருக்கும் ஒரு கிழவனுடைய பெயரைச் சொல்லக்கூடியதாகவே யிருக்கும். கூலிவேலை செய்தகாலத்தில் அவன் காட்டில் விறகு வெட்டித் தோளில்சுமந்து பட்டணத்துக்கு விற்கக் கொண்டுவருவது வழக்கம். இதிலிருந்து வெட்டு மரங்களை வெட்டும் சிறிய ஒப்பந்தங்களை எடுக்கக் கிளம்பி, இதிலிருந்து படிப்படியாய் அவன் சொந்தத்தில் ஒரு சிறிய காட்டை சம்பாதித்துக் கொண்டான். கடைசியாகத் தன் கீழ்க் கூலியாட்களையும் தச்சர்களையும் வேலையில் அமர்த்திக் கொண்டு இலாபகரமான ஒரு தொழிலை உண்டாக்கி அந்தத்தொழிலினால் இப்பொழுது அவன், சாவகாசமாய்ச் சௌக்கியமாயிருக்கும் தன்னுடைய விருத்தாப்பிய காலத்தில் நல்ல ஸ்திதியிலிருக்கிறான். அவனுக்குப் பெரிய வீடும் நிலங்களும் ஆயிரக்கணக்காய்ப் பணமும் இருக்கிறது. 1903-04 இந்த வருஷத்தில் சென்னப்பட்டணப் பொருட் காட்சியில் காட்சிப் பொருள்களைத் தெரியக்காட்டினோர்களோடோ அல்லது அவர்களின் காரியக்காரர்களோடோ கதைபேசிக்

கொண்டு சுற்றி உலாவிவந்த யாரும் தம்தம் தொழில் முயற்சிகளில் ஏற்கனவே அரிஷ்ட நிவாரணத்தை யடைந்து சிறப்பான பலன்களைப்பெற ஆரம்பித்திருந்த தச்சர்கள், பூட்டுக்கம்மியர்கள், பாற்காரர்கள், தோல்வினைஞர்கள், சவர்க்காரம் செய்வோர்கள், மெழுகுவர்த்தி செய்வோர்கள் முதலான எண்ணிறந்த தொழில் முயற்சியுடையோர்களின் கதைகளை அறியக் கூடும்.

கைத்தொழில் முயற்சி மண்டலத்திற் பூரணமாய் இடமிருக்கிறது. ஆனால் கைத்தொழில் முயற்சியிற் காரியசித்தியானது ஒரு நிமிஷத்தில் அடையப்படுகிறதில்லையென்றும், ஒரு கைத்தொழிலாளி அரிஷ்டநிவாரணமாகிக் காரியசித்தியென்ற இராஜபாட்டைக்கு வந்து சேருமுன் ஒரு நீண்ட முட்பாதையை அடிக்கடி கடக்க வேண்டியிருக்கிறதென்றும் கைத்தொழிலாளி தன் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அவன் சிறிதேனும் வேலை செய்வதாயிருந்தால் அவன் தைரியமாய் வேலைசெய்ய வேண்டியது மல்லாமல் தன்னுடைய கைம்முதலானது தன்னுடைய தொழில் சோதனவவதியிலிருக்கும் வெகு நாள் வரையில் தன்னுடைய தொழிலை நடத்துவதற்குக் கண்டு மிஞ்சுமென்பதை நிச்சயம் செய்துகொள்ளவும் வேண்டும்.



# X

## நூல் முடிவு.

இப்பொழுது நாம் கைத்தொழில் முயற்சியில் பிரவேசிக்கிறவர்களுக்கு முடிவான சில பிரபோதங்களைச் சொல்லி நம்முடைய யுக்திக்குறிப்புகளை முடிப்போம்.

ஒரு பிரபோதம் என்னவென்றால், ஒரு சாமான் சுயமாகவே நல்லதாயிருக்க வேண்டியது மல்லாமல் சரக்கு வாங்குவோரிடத்தில் நம்பிக்கையை ஜனிப்பிக்கத் தகுந்ததா யிருக்கும்படி யான ஒரு உருவாயும் காட்டவேண்டும். ஒரு சாமான் உத்தமமான குணமுள்ளதா யிருக்கலாம். ஆனால் அதைச் சுற்றியுமிருக்கும் விஷயங்கள் ஏற்றவைகளாய் இல்லாவிட்டால், அதன் இயல்பான மேன்மையானது கெடுதலாய்க் குறைக்கப்படும். ஒரு வைரத்தைப் பழைய கடிதாசித் துண்டில் வைத்துச் சுற்றியிருந்தாலும், அல்லது பதினெட்டு மாற்றுள்ள தங்கமோதிரத்தில் வைத்துப் பதித்திருந்தாலும், அந்த வைரமானது நல்ல ஒரு வைரம் என்பதிற் சந்தேகமில்லை. ஆனால் பொது ஜனங்கள் அதைக் கடிதாசியில் சுற்றியிருக்கையில் மதிப்பதைவிடத் தங்கத்தில் பதித்திருக்கையில் மிகவும் ஜாஸ்தியாக மதிப்பார்கள். அதே மாதிரியாக நம்முடைய கிராமவாசியின் "ஸார்டைன்ஸ்"களும் ஒரே மாதிரியான ஸார்டைன்ஸ் தகரங்களில் அடைத்து அவைகளுக்குப் பிரத்தியேகமாய் அச்ச

டித்தவொரு மூடி போட்டுவைத்திருந்தால் அவைகள்; வெண்ணெய் வைத்திருந்த பழைய தகரங்களையும்; அதிரசக்குழம்பு வைத்திருந்த பழைய தகரங்களையும், பாலைடைக்கட்டி வைத்திருந்த பழைய தகரங்களையும், இன்னும் மற்றக் கூளம் குப்பைகள் வைத்திருந்ததாய் ஞாபகத்துக்கு வரும் அநேக பழைய குவளைகளையும் பொறுக்கிச் சேர்த்து அவைகளில் அடைத்துவைப்பதை விட ஜாஸ்தியான நம்பிக்கையை ஜனிப்பிக்கும். இந்தக் குறிப்பை யெழுதும்படி நமக்குத் தோன்றியதற்குக் காரணம் 1903-04 இந்த வருஷத்திய சென்னப்பட்டணப் பொருட் காட்சியில், அங்கே செய்யப்பட்ட வாழைக்காய் மாவானது, அமெரிக்காவிலுள்ள வொரு வர்த்தகக் கூட்டத்தாரால் செய்யப்பட்ட மருந்துக் கலப்பானது உள்ளேயிருக்கும் சரக்கென்று தெரிவிக்கும்படி, அச்சிலே வார்த்த எழுத்துக்களையுடைய கண்ணாடிக் குப்பிகளில் அடைத்துவைத்திருந்த விஷயமே. கண்ணாடி செய்யும் கைத்தொழிலானது இந்தியாவில் அபிவிருத்தியாகிற வரையில் கண்ணாடிக் குப்பிகள் கிடைப்பது அருமையாகவே யிருக்கும். ஆகையால் அந்தக் கைத்தொழிலானது எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரம் அபிவிருத்தியாகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு அநேக கைத்தொழில் முயற்சிகள் விருத்தியடையும். ஆனால், இதனிடையில், கைத்தொழிலாளி தன்னுடைய சாமான்களிடத்தில் ஒரு நம்பிக்கையை ஜனங்களுக்கு உண்டாக்க விரும்பினால் அவைகளை அசந்தர்ப்பமான

கண்ணாடிக் குப்பிகளில் அடைத்து வைக்காமலிருக்க வேண்டும். சாதா கண்ணாடிக் குப்பிகள் அவனுக்கு மலிவாய்க் கிடைத்து அவைகளின் மேலே நேர்த்தியாய் அச்சிடப்பட்ட நாமவிலாசச் சீட்டுகளை ஒட்டி அவைகளின் வாய்களைத் தகரத்தகட்டிற் செய்த மூடிகளைக்கொண்டு மூடுவதாயிருந்தால், அதற்குச் செலவு ஜாஸ்தியாகப் பிடிக்கமாட்டாதுடன் அவனுடைய சரக்குகளும் அவைகளை வாங்கிச் செலவு செய்யும் மண்டலத்தாருக்குச் சிலாக்கியமான விதமாய்த் தோன்றும். சரக்குகளை மனோக்கியமான விதமாய்க் கட்டியனுப்ப வேண்டிய ஆவசியத்தை ஏற்கனவே இந்திய வர்த்தகக்கூட்டத்தார்கள் அறிந்திருக்கிறார்களென்பதைக் காண மிகவும் சந்தோஷமாக விருக்கிறது. உதாரணமாகச் சென்னப்பட்டணப் பொருட் காட்சியில் தெரியக்காட்டிய வாசனைப்பண்டங்களும் சவர்க்காரங்களும், நாம் காணும் முதல் தரமான ஆங்கிலேய வர்த்தகக்கூட்டத்தாருடையவும் ஐரோப்பா கண்டத்தியவர்த்தகக் கூட்டத்தாருடையவும் வாசனைப் பண்டங்களையும் சவர்க்காரங்களையும் போல அவ்வளவு அழகான வாசனைக் குப்பிகளில் வைத்தும், அவ்வளவு விநோதமாய்ச் செய்யப்பட்ட சுற்றுகள் அமைக்கப் பெற்றும், விற்பனை யிடப்பட்டன. மேலும் "ஆயுர்வேத ஔஷதங்கள்" வியாதியைப் பரிஹரிக்கும் யோக்கியதையை எவ்வளவாகப் பெற்றிருந்தாலும், அவைகள் சிப்பம் செய்யப்பட்டிருந்த விஷயத்தில் எவ்விதத்திலும் மிகவும் நன்றாய்ப் பலித்திருந்தது.

விளம்பரங்கள் விஷயமாய் நாம் ஒரு வார்த்தை சொல்லலாம். இது ஒரு விளம்பரக் கற்பமாயிருக்கிறபடியால், இந்நாட்களில் அநேக விஷயங்கள் காரிய சித்தியைப் பெற வேண்டுமானால் அவைகளை விளம்பரப்படுத்தவேண்டும். விளம்பரம் செய்வது செலவு பிடிக்கும் காரியமா யிருந்தாலும் அதை நிதானமாய்ச் செய்தால் அது மிகவும் இலாபகரமாகவேயிருக்கிறது. ஒருபொழுதும் விளம்பரம் செய்யாமலே மேன்மையான காரியசித்தியைப் பெற்றிருக்கிற கைத்தொழிலாளிகளையோ வர்த்தகர்களையோ குறிப்பிட்டுச் சொல்லுவது பிரயாசையா யிருக்கக்கூடும். ஆயினும் விளம்பரங்களுக்காகச் செலவழிக்கப்படும் பணமானது நன்றாய்த் தெரியக்கூடிய செலவாயிருக்கத் தொடர்ச்சியாய்ச் செய்யும் விளம்பரங்களி லிருந்து நேரே உண்டாகும் இலாபமோ இலகுவாய்க் காணக்கூடியதா யில்லை. இப்பொழுது, ஒரே விதியாய், வெளிப்படையான பிரயோஜனத்தைத் தனக்குக் கொடுக்குமென்று இந்தியாவிலிருக்கும் சுதேசிக்குத் தோன்றினாலொழிய பணத்தைச் செலவழிப்பதில் அவனுக்கு ஒரு விசேஷித்த வெறுப்பு இருக்கிறது. இந்தியாவிலிருக்கும் எந்த சமாசாரப் பத்திரிகையின் மானேஜரும், சுதேச இந்திய வர்த்தகக் கூட்டத்தார்கள் மிகவும் சொற்பமாய் விளம்பரஞ் செய்கிறவர்கள் என்பதை ருஜுப்படுத்துவார். ஒரு ஆங்கிலேய-இந்திய சமாசாரப் பத்திரிகையைப் பக்கம் பக்கமாய் நன்றாய் உற்றுப் பார்ப்பீர்களானால் காரியசித்தியை யடைந்த

ஒன்று அல்லது இரண்டு இந்திய நகைவியாபாரிகளின் விளம்பரங்கள் இருக்கக்கூடியதைத் தவிர இந்திய விளம்பரங்களைக் காண்பது அரிதாகவேயிருக்கும். ஒரு இந்திய சமாசாரப் பத்திரிகையின் விளம்பரங்களை நன்றாய் உற்றுப்பார்த்தால் மேலே சொல்லிய நகை வியாபாரிகளின் விளம்பரங்களைத் தவிர மிகுதியான இடம் முழுவதும் முந்தின அதிகாரம் ஒன்றில் சொல்லப்பட்டிருக்கும் இரகசியமான பரிகாரங்களைப் பற்றிய விளம்பரங்களே—இவைகளைப் பற்றிய விளம்பரங்களினால் வரும் இடைஞ்சல்களில் சந்தேகமேயில்லை—அடைத்துக்கொண்டிருக்கும். விளம்பரம் செய்வதிலிருக்கும் இந்த வெறுப்பானது பரிதபிக்கத்தக்கதே. ஏனென்றால் ஒரு மனிதன் ஒரு தொழில் முயற்சியை ஆரம்பித்து அப்படித் தான் செய்திருப்பதை ஜனங்களுக்குச் சொல்லாத வரையில் அதனால் அவனுக்கு என்ன பிரயோஜனமுண்டாகும் தன்னுடைய கதையைச் சொல்லுவதற்கு விளம்பரமே உத்தமமான உபாயமாயிருக்கின்றது. கீழ்த்தரமான வீண்பாராட்டுகளுக்கு அவசியமேயில்லை. விளம்பரங்களைப் புகழ்ச்சியான வசனங்களினால் சொல்லுவது, அவைகளை ஒரு மனோகரமான விதமாய்த் தெரிவிப்பதும், நிச்சயமாகவே, காரிய நிர்வாக சாமர்த்தியமாயிருப்பதுமல்லாமல் நியாயமாயுமிருக்கிறது. ஆனால் ஹாஸ்யகரமாயிருப்பதாக வீணாய் நினைத்துக்கொண்டு கொச்சையான வசனங்களினால் எழுதியிருக்கும் கீழ்த்தரமான வீண்பாராட்டுகள், விசேஷமாய் ஆ

கேஷபணைக்கிடமா யிருப்பதுமன்றிக் கண்ணியமான வாடிக்கைக்காரர்களை விலக்கத் தக்கவைகளாயு மிருக்கின்றன. இந்நாட்களிலோ விளம்பரஞ் செய்தலானது ஒரு தீர்க்கமான கலைஞானமா யிருக்கிறபடியால் ஜாஸ்தியாய் விளம்பரம் செய்யும் அநேக வர்த்தகக் கூட்டத்தார்கள் வித்தியா சாமர்த்திய முள்ள ஒருவரைத் தக்க சம்பளத்தில் ஸ்திரமாய் வேலையில் அமர்த்திக் கொள்ளுகிறார்கள். அவருடைய வேலை என்னவென்றால், எப்பொழுதும் புதிது புதிதாய் விளம்பரங்களைக் கற்பனை செய்வதும், அல்லது, ஒருக்கால், திடுக்கிடப்பண்ணும் கதைகளை உலோகப் பிரசித்தமான மாதிரியாய்த் தொடர்ச்சியாய் எழுதிக்கொண்டு வந்து அந்தக் கதைகள் முடியும் பொழுது விளம்பரங்களாக மாறும்படி சாமர்த்தியமாய்ச் செய்வதுமே.

ஒரு தொழில் முயற்சி விஷயத்தில் கைத்தொழிலாளி யிடத்திலுள்ள உற்சாகமான நம்பிக்கையே அந்தத் தொழில் முயற்சியின் காரியசித்திக்கு ஓர் முக்கியமான அம்சமா யிருக்கிறது. ஒரு குறிப்பிட்ட கைத்தொழில் முயற்சியானது "ஒருக்கால் காரியசித்தியை யடையலாம்" என்று மட்டும் "நினைத்து" "அதை ஒரு பரீக்ஷை பார்க்க" தீர்மானிக்கிற ஒருவன் அந்த முயற்சியைக் காரியசித்திக்குக் கொண்டு வருவதற் கேற்ற மனிதன் அல்ல. காரியசித்தியை யடையும் கைத்தொழிலாளிக்கோ தான் அபிவிருத்தி செய்ய விரும்பும் கைத்தொழில் முயற்சியிற் பூரண

மான நம்பிக்கை யிருக்கவேண்டும். ஏனெனின் நம்பிக் கையில்லாவிட்டால்அந்தக் கைத்தொழில் முயற்சியை ச்சீராய்ப் பரீக்ஷை பார்த்து விடுவதற்கு முன்னேயே அவன் வேலைகளை நிறுத்திவிடுவான். மேலும் அவ னுக்கு ஆவலுள்ள உற்சாகம் இருக்கவேண்டும். ஏனென்றால் அவன் "அது காரியசித்தி அடைந்தா லும் இல்லாவிட்டாலும் அதைப் பற்றி அதிகக் கவலை யில்லாமல்" இருந்தால் அவன் அதை முற்றிலும் செய்துமுடிக்கப் போதுமான பொருமையுள்ளவனுய் இருப்பது அசம்பாவிதம். ஒரு புதிய கைத்தொழில் முயற்சியானது காரியசித்தியை யடையும்படி செய்வ தற்கேற்ற மனிதனே பகலில் அதைப்பற்றி நினைத் துக்கொண்டும் இரவில் அதைப்பற்றி சொப்பனம் கண்டு கொண்டும் இருப்பவனும், அவனுடைய சினே கிதர்கள் அவனை அவன் அடிக்கடி பேசிவரும் அந்தச் சாமான் பெயராலேயே நிந்தனையாய் அழைக்கப் பெற்றவனுமா யிருக்கிற மனிதனே யாவன் ஒரு இந் தியக் கைத்தொழில் முயற்சியில் நம்பிக்கையையும் உற்சாகத்தையும் வைத்திருந்த ஒருவரால் உண்டாக் கப்பட்ட முயற்சிக்கு ஓர் உதாரணமாக அலுமினம் (வெள்ளியைப்போன்ற ஒருவகையான உலோகம்) கைத்தொழில் முயற்சியை நாம் எடுத்துச்சொல்ல லாம். இந்த முயற்சியை உண்டாக்கினவர் சென்னப் பட்டணம் கலாஞான சாலையின் விசாரணையை வகித் தவரும் யந்திரத் தொழிலைக் கற்பிக்கும் ஆசிரியனு மான மிஸ்டர் ஆல்பிரெட் சாட்டர்ட்டன் (Mr. Alfred

Chatterton) என்பவர். 1890-ம் வருஷத்திலேயே மகத்தான பெரியாறு ஜலாசய அணையின் கட்டட வேலை நடந்துகொண்டிருக்கும் பொழுது இந்தியா வில் ஒரு அலுமினம் கைத்தொழில் முயற்சிக்கு இட மிருந்ததைக் கருத்திற்கொண்ட மிஸ்டர் சாட்டர்ட் டன் என்பவர் சுதேசியமான குருந்து என்ற ஓர் தாதுவிலிருந்து ஏராளமாய் அலுமினம் உண்டாகும் படியான ஹேதுவைச் செய்வதற்காக அந்த ஜலா சயத்திலிருந்து பள்ளத்தாக்கிலிருக்கும் நெல் வயல் களுக்கு ஓடிப்பாயும் ஜலத்திற் கொஞ்சம் உபயோகப் படுத்திக்கொள்ளலா மென்பதை வெளியிட்டார். ஆனால் மற்றுஞ் சில என்ஜினீர்கள்- இவர்கள் ஒருச் கால் தீர்க்காலோசனை யில்லாதவர்களா யிருக்கலாம்- மிஸ்டர் சாட்டர்ட்டன் இது விஷயமாய்க் கவர்ன் மெண்டாருக்குத் தெரிவித்துக்கொண்ட அபிப்பிரா யத்தைப் பற்றி அதற்கு விரோதமாய்க் கவர்ன்மெண் டாருக்கு அறிக்கை யிட்டார்கள். ஆனாலும் இந்தியா வுக்கு ஒரு அலுமினம் முயற்சி யிருப்பதில் மிஸ்டர் சாட்டர்ட்டனுக்கு உண்டாயிருந்த நம்பிக்கையானது அவரிடத்தில் நிலைத்திருந்தது. 1896-ம் வருஷத்தில் அவர், மதுரை சாஸ்திர பாடசாலையில் (Madura Technical Institute),இறக்குமதியாகும் அலுமினத் திலிருந்து பாத்திரங்களைப் பரீக்ஷார்த்தமாய்க் கொஞ் சம் வேலைசெய்யும்படி திட்டம்செய்யவேண்டுமென்று சென்னப்பட்டணம் வித்தியா இலாகா தலைமை விசா ரணைக் கர்த்தருக்கு (டைரேக்டர் ஆப் பப்ளிக் இன்ஸ்

ட்ரக்ஷனுக்கு) எடுத்துச்சொன்னார். ஆனால் ஒன்றும் நடக்கவில்லை. ஆயினும் இன்னும் மிஸ்டர் சாட்டர்ட்டன் விடாமுயற்சியுள்ளவராகவே யிருந்தார். அடுத்த வருஷத்தில் இராஜாவின் பேரில் அவர் இங்கிலாந்துக்குப்போய் அங்கே யிருக்கையில், அலுமினம் நிரப்பும் ஒரு சங்கத்தின் காரியதரிசியைக் கண்டு பேசியதன் பேரில் இந்தியாவில் பரீக்ஷை செய்வதற்காக 112 பவுண்டு இடை அலுமினத்தை நன்கொடையாக வளிக்கப்பெற்றார். மறுபடியும் ஒரு முறை வித்தியா இலாகா தலைமை விசாரணைக் கர்த்தரிடம் பிரார்த்தித்தார். இந்தத் தடவை அவர், தாம் விசாரணையை வகித்திருக்கும் சென்னப்பட்டணம் கலாஞானசாலையில் தாம் கொண்டுவந்திருக்கும் அலுமினத்தில் பரீக்ஷைசெய்ய அனுமதிகொடுக்கும்படி கேட்டுக்கொண்டதின் பேரில் அப்படிச்செய்து கொள்ளலாமென்று அவருக்கு அறிவிக்கப்பட்டது. ஆனால் அதை அவருடைய செலவிற் செய்துகொள்ள வேண்டிய தென்பதையும் ஒருவாறு கிருபையில்லாமல் உபரியாக அவருக்கு அறிவித்தார்கள். அப்படிச் செய்யும் விஷயத்தில் மிஸ்டர் சாட்டர்ட்டன் போதுமானபடி விடாமுயற்சியுள்ளவரா யிருந்தபடியால் அவருடைய பரீக்ஷைகளும் வெகுவாய்க் காரியசித்தியை அடைந்தது. அதன்பேரில் அடுத்த வருஷத்தில், 1898-ம் வருஷத்தில் கவர்ன்மெண்டார் தங்கள் செலவில் வர்த்தக ஏற்பாட்டில் வேலைசெய்ய ஆரம்பிக்கும்படி அவருக்கு அனுமதி கொடுத்தார்கள். ஒரு நிச்சயமான

நம்பிக்கையானது இவ்வளவு தூரம் அவரைக் கொண்டுபோய் விட்டதென்றாலும் அந்த நவீனக் கைத்தொழில் முயற்சியை இலாபம் கொடுக்கத் தக்கதாய்ச் செய்வதற்கு நம்பிக்கையை விட ஜாஸ்தி யாக ஒரு விஷயம் வேண்டியிருந்தது. இந்த நிலைமையிலேதான் உற்சாகமானது வந்து சேர்ந்தது. அலுமினம் பாத்திரங்களின் உபயோகம் இந்தியாவில் தெரியாதிருந்தபடியால், மாமூல் மாறாத இந்த நாட்டில் விலையாகாமல் அந்தத்துணிகரமான காரியமானது நஷ்டமாய் முடியுமென்று முதலெடுப்பில் காணப்பட்டது. ஆனால் மிஸ்டர் சாட்டர்ட்டன் தம்முடைய கைத்தொழில் முயற்சிக்கே பிறந்தவரா யிருந்தார். அவர் துண்டுப் பத்திரிகைகள் எழுதினார்; பிரசங்கஞ் செய்தார்; கண்காட்சியில் பொருள்களைத் தெரியக் காட்டினார்; அலுமினத்தின் தூதனாகவே இந்தியா முழுவதிலும் பிரயாணஞ் செய்தார். அந்தக்கைத்தொழில் முயற்சி அபிவிருத்தியாகிக் கடைசியாக நல்ல இலாபத்தைக் கொடுத்தது. அது காரியசித்தியை யடைந்த விஷயம் நிச்சயமாய்த் தெரிந்தவுடன், கவர்ன்மெண்டார் அந்த முழுவியாபாரத்தையும் ஒரு இந்திய அலுமினம் சங்கத்தாரிடம் கருணையோடு ஒப்புவித்தார்கள். இப்பொழுது அது தேசத்தில் நவீனமாயும் ஸ்திரமாயு மிருக்கும் ஒரு கைத்தொழில் முயற்சியா யிருக்கிறது. மிஸ்டர் சாட்டர்ட்டன் இப்பொழுது இன்னும் மற்றொரு கைத்தொழில் முயற்சியாகிய வர்ண-பதமிடுதல் என்ற புதிதாயும் திருத்தமா

யும் தோல் பதமிடும் ஒரு விதத்தை சிருஷ்டிப்பதில் தம்முடைய கவனத்தைச் செலுத்திவருகிறார். அலுமினம் விஷயத்தில் அவர் செலுத்தியதைப் போன்ற அவ்வளவு நம்பிக்கையையும் உற்சாகத்தையும் வர்ண-பதமிடுதலிலும் அவர் செலுத்தி வருவாரானால் அவருடைய இரண்டாவது கைத்தொழில் முயற்சியானது முதலாவதைவிடப் பின்னும் ஜாஸ்தியான காரியசித்தியை யடைவதாய் இருக்கலாம்.

௵ கைத்தொழிலாளி தான் செய்யும் தந்திரங்களில் உற்சாகத்தோடு இருக்க வேண்டியது மல்லாமல் பிறருக்குப் பிரிய முண்டாகும்படி தான் நடந்துகொள்ளவும் கவனமாய் இருக்க வேண்டும். ஒருவன் தன்னிடத்தில் வரும் யாரிடத்திலும் கூடிய வரையில் பிரியமாயிருக்கும்படி தன்னைச் செய்துகொள்ளுவது கிரமம் என்பதில் சந்தேக மில்லை. ஏனென்றால் ஒருவன் எல்லாருக்கும் பிரியனா யிருப்பது ஒரு மனிதன் தன்னுடைய அயலானுக்குச் செய்யவேண்டிய கடமையை நிறைவேற்றுவதாகவே யிருக்கின்றது. ஆனால் தன்னுடைய அயலானுக்குச் செய்ய வேண்டிய கடமையைக் காட்டிலும் ஒரு தொழிலில் அமர்ந்திருப்பவன் தன்னைச் சாதாரணமாய் எல்லாரும் விரும்பும்படி செய்துகொள்ள ஜாக்கிரதை எடுத்துக்கொள்ளும் பொழுது தன்னுடைய தொழிலின் நயத்தைக் கருதியே வேலை செய்பவன் ஆகிறான். ஒவ்வொரு ஜீவனோபாயத்திலும் ஜனப்பிரியனா யிருப்பது காரியசித்திக்கு அவசியமானவொரு அம்சமாயிருக்கிறது. எல்லாராலும் வெறுக்

கப்படுகிற ஒரு கைத்தொழிலாளி நவீனமாயிருக்கிற எதையும் பிறர் அங்கீகரிக்கும்படி செய்வது விசேஷித்த பிரயாசையான வொரு காரியம் என்பதைக் காண்பான். நாடகமாடுவதையே தொழிலாகக்கொண்டிருந்த ஒருவரோடு சில வருஷங்களுக்கு முன்னே இந்த ஆங்கில நூலாசிரியர் பேசியதை ஞாபகத்துக்குக் கொண்டுவந்து இங்கே எடுத்துச்சொல்லுகிறார். அந்த நடன் மிகுந்த யோக்கியதை யுள்ளவராயிருந்தும் நாடகசாலையாகிய மண்டலத்தில் முன்னுக்கு வரத் தவறிப்போயிருந்தார். அந்த நடன் தனக்குக் காரிய சித்தி உண்டாகாததற்குக் காரணம், தான் ஜனப்பிரியனா யில்லாமையே என்றார். நாடகசாலையில் அவர் பூரண உற்சாகமாயும் மனோபாவத்தோடும் நடித்தாலும், வெளியே யிருக்கும் பொழுது அவர் மந்தமாயும் பிறருடன் பேசக் கூச்சமுள்ளவராயு மிருந்தபடியால் அவருக்குச் சொற்ப சினேகிதர்களே யிருந்தார்கள். அவர் சொன்னதாவது "ஜனப்பிரியனாய் என்னைச் செய்துகொள்ளும் வித்தை எனக்கு ஒரு பொழுதுந் தெரிந்திருக்கவில்லை. ஆகையால் உத்தமமான நாடகப் பாத்திரங்களை விபாகிக்கும் பொழுது என்னை ஜாடையாய் விட்டுவிடுகிறார்கள். பிரதம இராத்திரிகளில் (நாடகங்களில்) என்னை அடிக்கடி சிலாகித்துக்கொண்டே வர சினேகிதர்களுடைய கூட்டத்தையோ அல்லது பத்திரிகைகளில் என்னைப் பற்றிப் புகழ்ந்துபேச சினேகமான குணக்கிராஹிகளையோ நான் பெற்றிலேன்.'' ஸர் ஹென்றி இர்விங் (Sir

14

Henry Irwing) என்பவருக்குக் கீர்த்தி யுண்டானத ற்குக் காரணம் அரங்கத்தில் அவர் நாடகத்தை மேன் மையாய் நடத்திக்காட்டிய விஷயமல்ல; ஆனால் அ வரைச் சுற்றிக் கொண்டிருந்த சொந்த ஜனங்களிடத் தில் அவர் ஜனப்பிரியராயிருந்த மகத்துவமே என்று அவர் வற்புறுத்திச் சொல்லியது மிகையாகச் சொல் லியதாக யிருக்கக் கூடுமானாலும், ஜனப்பிரியனாயிருப் பதை பற்றி அவர் சொல்லிய குறிப்புகள் ஏற்றவைக ளாயிருந்தன. ஜனப்பிரியனா யிருப்பது எப்படி ஒரு நடனை உத்தமமான பாத்திரங்களாக நடிக்க ஒத் தாசை செய்கிறதோ அப்படியே ஜனப்பிரியனா யிரு ப்பது ஒரு தொழிலை வகித்திருக்கும் ஒருவனுக்கு உத்தமமான வாடிக்கைக்காரர்களை அடைவிக்க ஒத் தாசை செய்யு மென்று நாம் நம்பலாம்.

ஒவ்வொரு நடவடிக்கையிலும் மிகவும் கண்டிப் பான நாணயம் அவசியம் என்பதைப் பற்றி மிகவும் ஜாஸ்தியாகச் சொல்லுவது சந்தேகமில்லாமல் அனாவ சியமே. "நாணயமானது மிகவும் உத்தமமான உபா யம்" என்று சொல்லும் பழமொழியானது நாணய த்தை மிகவும் தாழ்ந்த படியில் வைக்கிறதென்று விவேகமுள்ள ஒரு நூலாசிரியர் சொல்லியிருக்கிறார். இது உண்மையே. ஆனால் அப்படியிருந்தும் இதைப் போன்ற கைத்தொழில் முயற்சியைப் பற்றிய வொரு புஸ்தகத்தில் வர்த்தக விஷயத்திலும் நாணயமானது "மிகவும் உத்தமமான உபாயம்" என்று வற்புறுத்திச் சொல்லுவது உசிதமா யிருக்கும். ஜனப்பிரியனாயிருப்

பதைக் காட்டிலும் கண்ணியமே மிகவும் அத்தியந்தம் முக்கியமா யிருக்கிறது. மேலும் எந்த அறிவுள்ள தொழிற்காரன் ஒவ்வொருவராலும் மதிக்கப் படுகிருனே அவனுக்கும், எந்த அறிவுள்ள தொழிற்காரனுடைய சொல்லானது அவனுடைய பத்திரமாக அங்கீகரிக்கப்படுகிறதோ அவனுக்கும், எந்த அறிவுள்ள தொழிற்காரன் ஈனமான செய்கைக்கு ஏலாதவனென்று ஒவ்வொருவராலும் அறியப்படுகிருனே அவனுக்குமே வேலை வந்துசேரும். வர்த்தகத்தில் நீதியானது இந்தக் கற்பத்தில் மிகவும் உயர்ந்த தரமாய் இருக்க வில்லை. அநேக "வர்த்தகப் பித்தலாட்டங்களும்," "தன்னவர்களை ஏமாற்றும்" அநேக எத்தனங்களும் மிதமிஞ்சி யிருக்கின்றன. ஆகையால் முற்றிலும் நேர்மையான நடவடிக்கையுள்ளவன் என்ற கீர்த்தியைப் பெற்றிருக்கும் மனிதனே முன்னுக்குவருவது மிகவும் சம்பாவிதம்.

முதலாவது அதிகாரத்தில் வியாபாரத்தில் சுதேசாபிமானத்தைப் பற்றி வெகுவாய்ப் பேசினேம். அந்த விஷயத்தைப் பற்றிப் பின்னும் ஒரு குறிப்பை நாம் இவ்விடத்திற் சொல்லுவோம். இந்திய வர்த்தக கூட்டத்தார்கள் இரவல் வாங்கின ஐரோப்பியப்பெயர்களினால் தங்களைப் பற்றி விளம்பரஞ் செய்துகொள்ளுவது அத்தியந்தம் சுதேசாபிமானமற்றதாயும் பொதுவாய் இந்தியக் கைத்தொழில் முயற்சியின் நயத்திற்கு அத்தியந்தம்கெடுதியாயுமிருக்கிறது. பெரும்பான்மையான இந்திய வர்த்தகக் கூட்டத்தார்கள் ஐரோ

ப்பியம் என்ற கட்டுக் கதையானது சரக்கு வாங்கு வோரிடத்தில் அதிக நம்பிக்கையை உண்டாக்குமெ ன்று நினைத்து இந்தப் பித்தலாட்டத்தைச் செய்ய ஆரம்பிக்கிறார்களென்று நாம் எண்ணவேண்டியிருக் கிறது. சில சந்தர்ப்பங்களில் அப்படிப்பட்ட வர்த்த கக் கூட்டங்கள் பெரிய வர்த்தக சாலைகளாக அபிவி ருத்தியாகி யிருக்கின்றன. ஆனால், ஒரே விதியாய் இந்தப் பித்தலாட்டமானது காரியஹானியாகவே முடிந்திருக்கிறது. கடைத் தெருவில் ஒரு அழுக் குப் படிந்த கடையின் வெளிப்புறத்தில் அந்தக் கடை யின் நாமவிலாசப் பலகையில் "மெக்கன்ஸி அண்டு கோ" என்று பொய்யாய் எழுதிவைத்துக்கல்லுப்போல ஒரு இராமசாமியானவன் அந்தக் கடையில் முதலாளி பீடத்தில் உட்கார்ந்திருந்தால் அது ஒரு விபரீதமான காட்சியா யிருப்பதுடன் அது இராமசாமியின் தொ ழிலுக்கு நன்மையைச் செய்வதை விட ஜாஸ்தியான தீங்கையே செய்யக்கூடும். இதற்கு மாறாக காரியசித்தி யை யடைகிற வர்த்தகக் கூட்டமானது அதன் பொய் யான பெயரினால் அல்லாமல் அதன் சரக்குகள் நல்ல வைகளா யிருப்பதினாலேயே காரிய சித்தியைப்பெற்றி ருக்கிறது. அந்தச் சூதானது பகுத்தறிவில்லாத சில வாடிக்கைக்காரர்களை ஒருக்கால் ஆரம்பத்தில் நாடச் செய்யலாமே யொழிய ஒரு இரவற் பெயரானது தானே உறுதியாயிராத வொரு தொழிலை ஒரு விதத்திலும் ஆதரிக்க மாட்டாது. எந்த விதமாயோ ஒரு கெடுதியானது இந்திய வியாபாரத்திற்குச் செய்

யப்பட் டிருக்கிறது. காரிய சித்தியை அடைந்த வர்த் தகக் கூட்டமானது அது காரியசித்தி யடைந்திருக் கிறதென்ற கீர்த்தியை இந்தியாவிலிருந்து கொள்ளை யடித்திருக்கிறதுமல்லாமல், பொய்க் கொடியை நாட் டிப் பாய்வலித்தோடியு மிருக்கிறது. காரியசித்தியைப் பெற்ற விஷயத்திலும் காரியசித்தியைப் பெறாத விஷ யத்திலும் அந்தச் சூதானது ஒரு இந்திய விலாசம் தொழிலுக்குத் தகுந்ததல்லவென்று அவலக்ஷணமாய் அறிவிப்பதா யிருக்கிறபடியால் அந்தச் சூதானது இந்தியாவின் அபகீர்த்திக்குக் காரணமா யிருக்கிறது. இப்படிப்பட்ட பித்தலாட்டங்களை ஆத்மசம்மானி களான இந்தியவாசிகள் விலக்கவேண்டும். இந்தியக் கைத்தொழிலாளிகளும் இந்திய வியாபாரிகளும் தங் களுக்குத் தாங்களே நேர்மையாயும் தங்களுடைய வாடிக்கைக்காரர்களிடத்தில் நேர்மையா யிருப்பார் களானால், இந்தியாவின் கைத்தொழில் முயற்சியில் இனி வருங் கற்பத்தில் இந்திய வர்த்தக விலாசமா னது உலக முழுவதிலும் நம்பிக்கையை எழுப்பி விடும் காலமும் வந்துசேரும்.

போதும்! இந்தியக் கைத்தொழில் முயற்சியா னது ஒரு மகத்தானவிஷயம். அதைப் பற்றிச் சவிஸ் தாரமாயும் சொல்வன்மையாயும் அநேக புஸ்தகங் களை யெழுதலாம். ஆனால் இந்தியாவின் வருவாய் களின் அத்தியந்த மகத்துவமானது சவிஸ்தாரமாய் எழுதுவதின் அவசியத்தைக் குறைக்கின்றது. இந்தி யாவின் அளவற்ற வருவாய்களை மிகுதியாய் அபி

விருத்தி செய்யலாமென்பதைச் சந்தேகிக்கக் கொஞ்சமேனும் இடமில்லை. மேலும் இந்தியக் கைத்தொழிலாளிகள் ஏற்கனவே அவைகளை அபிவிருத்திசெய்து வருகிறார்கள் என்று அறிவதினால்மிகுந்த தூண்டுதலுக்கிடமிருக்கிறது. இந்தியாவின் ஒவ்வொரு மைந்தனும் இந்த உத்தமமான காரியத்தில்நேராய் அல்லது ஜாடையாய்ச் சம்பந்தப்படலாமென்று சுட்டிச் சொல்லுவதே இந்தச் சிறிய புஸ்தகத்தின் கருத்தா யிருக்கிறது. தன் அரண்மனையில் வசிக்கும் பட்டதாரியான அரசனும் கூரைக் குடிசையில் குடியிருக்கும் குக்கிராமத் தலைமைக்காரனுமாகிய இவர்களில் ஒவ்வொருவனும் ஒத்தாசை செய்யலாம். இதனை வாசிக்கும் ஒருவன் இந்தியாவின் மைந்தனா யிருந்தால், தான் பிறந்த நாட்டிற்கு ஏதேனும் செய்யப் போகிறானா? அவன் ஏதேனும் ஒரு கைத்தொழில் முயற்சியைத் தொடக்கி அல்லது அபிவிருத்தி செய்வானானால் அவன் மிகுந்த நன்மையைச் செய்தவனாவான். ஆனால் இதை அவன் நேரே செய்ய முடியாவிட்டால் மற்றவர்களால் ஒழுங்குபடுத்தப்பட்டுக் காரியசித்தியாகக் கூடிய வேதேனு மொரு கைத்தொழில்முயற்சியினது கைம்முதலின் அபிவிருத்தியில் ஒரு பெரிய அல்லது சிறிய பங்குக்காரனாக, ஒருக்கால், அவன் ஆகலாம். யாதொரு பணத்தையும் கொடுத்துவிட அவனை வேண்டவில்லை— ஒரு பைசாவும் செலவழிக்கும்படி வேண்டவில்லை; ஆனால் அவன் நேரே தன்னுடைய கைம்முதலின் சில பாகத்தைத் தனக்கு நல்லவோர்

பாக்கியத்தைக் கொடுக்கவும் அதே சமையத்தில் தன்னுடையநாட்டின் செல்வத்தோடு செல்வத்தைச் சேர்க்கவும்கூடியதாய் எதிர்பார்க்கத்தகுந்தவேதேனுமொரு காரியத்தில் உபயோகிக்கலாம். இந்தியாவானது முன் காலத்தில் மகா மேன்மையா யிருந்தபடியால் வருங் காலத்திலும் மகா மேன்மையா யிராவிட்டால் பரிதாபமாக விருக்கும். ஆனால், இரும்புக் கற்பம்- கைத்தொழில் முயற்சிக் கற்பம்—இந்தியாவில் இப்பொழுது உதயமா யிருக்கிறபடியால், அதன் மைந்தர்கள் காலத்துக்கு ஒத்தபடி நடந்து இந்தியாவை மகத்தானதாய்ச் செய்ய ஒத்தாசை செய்யும் பொழுதே இந்தியாவின் மகத்துவத்தில் ஒரு பாகத்தையும்பெற அவர்கள் கற்க வேண்டும்.



## இந்நூலாசிரியரின் நூல்கள்:

**இந்தியக் கைத்தொழில் முயற்சி-விலை ரூபாய் 1.**

இந்தப் புஸ்தகத்தில் (1) வியாபாரத்தில் சுதேசாபிமானம் (2) கூட்டுத்தொழில் (3) கைத்தொழிற் பொருட்காட்சிகள் (4) விசாரிக்கும் மனது (5) ஆராய்ச்சி (6) இந்தியருடைய கலைஞானம் (7) இந்தியப் பண்டசாலை (8) இந்தியாவின் வாடிக்கைக்காரர்கள் (9) அரிஷ்ட நிவாரணம் (10) நூல்முடிவு என்று பத்து அத்தியாயங்களாக இந்தியக் கைத்தொழில் முயற்சியை விளக்கியிருக்கின்றது.

**குணத்திரய கமலமார்த்தாண்டம்-விலை அ. 2.**

இந்தப் புஸ்தகத்தில் "சிநேகிதனை நம்பாதே, ஸ்திரீயை நம்பாதே, கடவுளை நம்பு" என்ற மூன்று முக்கிய வாக்கியங்களை திர்ஷ்டாந்த பூர்வமாயும் மிக யுக்தியாயும், சாதுர்யமாயும் யாவரும் அங்கிகரித்து ஆனந்திக்குமாறு தெளிவான நடையில் விளக்கிக் காட்டி ஆண் பெண் இருபாலார்க்கும் முக்கியமாய் மாணாக்கர்களுக்கும் படிப்பினையாயிருக்கும் பொருட்டு அமைக்கப்பட்டிருக்கிறது.

**நியாஸ தசக வெண்பா; மோக்ஷபடத்துடன்-விலை அணா 1 பைசா 6.**

இந்த நூல் சம்ஸ்கிருத பாஷையில் நியாஸ தசகம் என்று சுலோகங்களாகத் தூப்புல் வேதாந்த மகா தேசிகனென்கிய பரமாசாரியரால் திருவாய்மலர்ந்தருளப் பட்டிருப்பதின் அர்த்தம் நன்றாய் மனதில் பதியுமாறு இனிய தமிழ்ச் செய்யுள்களாக வெளியிடப்பட்டிருக்கிறதுடன் மோக்ஷபடத்தில் நியாஸ வித்தையின் அங்கங்களை விளக்கிக்காட்டியிருக்கிறது.

**பூக்கடை இராமஸ்வாமி பதிகம்-விலை பை. 6.**

இந்தப் பதிகம் கேவலம் ஸ்தோத்திர ரூபமாய்மட்டும் இல்லாமல் ஒரு ஜீவன் பரமாத்மாவை யடையும் மார்க்கத்தை, நியாயங்களை எடுத்துக்காட்டி, நிரூபிக்கின்றது.